|| श्रीः ||

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸார ஸாரம்

ஸ்வச்சந்தம் ஸ்ரீ எஸ். ஆராவமுதாச்சார்யார்



॥ श्रीः ॥

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸார ஸாரம்

by

ஸ்ரீ S. ஆராவமுதாச்சாரியார், M.A.

ரிடையர்டு ஸம்ஸ்க்ருத புரபஸர்,

A.V.C. காலேஜ், மாயூரம்

&

ரிடையர்டு ரிஸர்ச் ஸ்காலர், அடையார் ஓரியண்டல்

ரிஸர்ச் லைப்ரரி, மதராஸ்

''பித்ரே ப்ரஹ்மோபதேஷ்ட்ரே மே குரவே தைவதாய ச''

என்கிறபடியே அடியேன்களுடைய திருத்தகப்பனாரும்
ஆச்சார்யரும் ஆகிய ஸ்வாமி ஆராவமுதாச்சார்யரின் திருவடிகளில் ஸமர்ப்பணம்



ஆ. ஸ்ரீநிவாஸராகவன், ஆ. கிருஷ்ணன்

# ASHIRVACHANAM

**Sri Sri Rangapriya Mahadesikan Swamy**
Ashtanga Yoga Vijnana Mandiram
625, 4th Main, Hanumantha Nagar, Bangalore-560 019

*Srimathe Ramanujaya Namaha*
*Srimathe Nigamantha Mahadesikaya Namah*
*Sri Ranganatha Divyamani Padukabhyam Namah*

Sri Sri Venkatanatha, (Vedanta Desika 1268-1369 A.D.) was an *acharya* par exeellence, endowed with all the attributes of a spiritual teaeher depicted by him in the verse *''Siddham Satsampradaya''*. In his devotion to God and Guru and the practice and realization of Saranagati Yoga, he was unparalleled and was in turn worshipped as a Godly Guru and an incarnation of the divine bell at the serviee of Bhagavan, by his illustrious disciples. His mastery over all branches of learning (which he had acquired even when he was twenty year's old) was acknowledged even by the greatest teachers of his rival schools. As a man of light and learning, he had the unique distinction of being a philosopher among poets and a poet among philosophers and by his surpassing genius in both poetry and philosophy, he won the title KAVI TARKIKA SIMHA and VEDANTACHARYA.

In addition to blessing his disciples by directly imparting knowledge to them, he also wrote in Sanskrit, Prakrit and Tamil languages many literary works, devotional lyrics and scholarly works on Philosophy for the benefit of his contemporaries and the posterity. In his philosophical works he establisbed the *Visishtadvaita* Philosophy expounded by Bhagawan Ramanuja

Acharya defending it from the strong attacks of rival schools and carried on the unsullied tradition of his predecessors.

Among his works on philosophy and *Satsampradayam*, ''Rahasyatrayasaram'' occupies a unique place. It is an original work like his another masterpiece ''Tattvamukta Kalapam'' and may be considered as his *magnum opus* in its field. Dealing with the exposition of three esoterie incarnations in the *Mula mantra, Dvaya* and *Charama Slokas* - it is meant for the benefit of devoted disciples only. But though the central subject is the three *Rahasyas*, it deals profusely with all allied suhjects, with *prapatti* as the chief one, and may rightly be called an encyclopedia on *Saranagati*. Even those who are not qualified to hear the *Vedas*, are entitled to hear and appreciate it. Like his other works of *Rahasya* Stamp, it is written in a *Manipravala* style which is an agreeable combination of Sanskrit and Tamil languages.

Just as Sri Sri Pillailokacharya (1261-1327) codified what he had learnt from his teachers through eighteen *Rahasyas*, Sri Sri Vedanta Desika codified the principle of the tradition through thirty two *Rahasyas*, the *Rahasyatrayam* being the biggest among them.

This learned work adorned by many commentaries ean be appreciated by learned disciples to the best of their ability sitting at the feet of learned teachers only. ''Those who think that they have understood it fully have not really understood it, and those who realize that they have not fully understood it, have understood its greatness in reality'' declares a learned teacher commenting on its greatness.

But those who can directly receive exposition of this learned work from the learned teachers are very few now-a-days as aspirants are scattered in different parts of the world for earning their livelihood and it is for the benefit of such aspirants that this excellent work, ***"Rahasyatraya saara saaram"*** (the quintessence of the essence of the three *Rahasyas,)* is intended. Its author Sri Aravamudachariar, the retired professor of Sanskrit at the A.V.C. College, Mayuram, and retired Research Scholar of Adyar Oriental Research Library, hails from the *Svacchanda* family known for its learning and devotion to God and *Satsampradayam*. Himself a scholar of a very high order, Professor *Aravamudachariar,* has the good culture to remember with humility and gratitude, his learned line of teachers. Having been a good teacher and eminent writer he knows where to elaborate, where to epitomise and where to follow the touch and go method. Leaving out the Sanskrit and Tamil verses in the original, he touches the salient features only for the appreciation of ordinary aspirants.

Like its first publication in 1977, this second publication has come into being as a devoted service of his working sons and most befittingly it is being published as an important part of the celebrations of the author's auspicious birthday in the presence of learned persons and great devotees. May the blessings of the revered father and his great *acharya* commencing with Lord Narayana descend on the family of the cultured persons for its prosperity and spiritual good.

*with Narayana Smarahams*

19.3.1995 **Sri Rangapriya Sri Srih**

॥ ஸ்ரீ: ॥

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமதே ஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம:

# முன்னுரை

ஸ்ரீ பகவத் ராமாநுஜ சித்தாந்தத்தைப் பலப்படுத்தவும் ப்ரசாரம் செய்யவும், ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் அநேக சாஸ்த்ர க்ரந்தங்களை ஸாதித்தருளினார். மேலும் காவ்யங்களையும், நாடகம், ஸ்தோத்ரங்கள் இவைகளையும் ஸாதித்தார். ஸ்ரீ ஆழ்வார்களின் ஸ்ரீ ஸூக்திகளைப் பின்பற்றித் தமிழில் அநேக பாசுரங்களையும் அருளிச் செய்தார். இவைகளால் த்ருப்தி அடையாமல் ஸ்ரீ தேசிகன் கடைசியாக எல்லோரும் உஜ்ஜீவிக்க வேண்டுமென்று திருவுள்ளம் பற்றி ஸ்ரீ பகவத் ராமாநுஜ ஸித்தாந்தத்தை மணிப்ரவாள நடையில் ''ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம்'' என்கிற சிறந்த க்ரந்தத்தால் ஸ்தாபித்தருளினார். இந்த க்ரந்தம் தமிழிலும், ஸமஸ்க்ருத ச்லோகங்களும் தமிழ் பாசுரங்களும் அடங்கியிருப்பதாலும், உரைநடையும் தற்காலத்திற்கு எளிதாக இல்லாமையாலும் ஆசார்யர்களை ஆச்ரயித்து நல்ல ஸம்ஸ்க்ருத ஜ்ஞான முள்ளவர்கள் காலக்ஷேபம் செய்துதான் தெரிந்து கொள்ளக் கூடியதாக இருக்கின்றது. இக்காலத்தில் பலரும் வாழ்க்கையில் ஈடுபட்டு ஆசார்யர்களிடம் காலக்ஷேபம் பண்ண அவகாசமில்லாதவர்களாக இருக்கிறார்கள் என்பது தெரிந்த விஷயம். ஆகவே ஸ்வாமி தேசிகன் திருவுள்ளம் நிறைவேற அடியேன் இந்த க்ரந்தத்தை எழுதியுள்ளேன். இதில் ஸம்ஸ்க்ருத ச்லோகங்களையும், தமிழ் பாசுரங்களையும்

சேர்க்காமல் மற்ற விஷயங்களை கூடியவரையில் ஸ்ரீ ஸ்வாமியினுடைய ஸ்ரீஸூக்தியை ப் பின்பற்றியே எளிய தமிழ்நடையில் எழுதியிருக்கிறேன். இதைச் சிறிது பொறுமையுடன் வாசித்துப் பார்த்தால் நன்ருக விளங்குமெனநம்புகிறேன். இந்தச் ஸந்தர்ப்பத்தில் அடியேனுடைய வேதாந்த ஆசார்யரையும் அந்த பரம்பரையும், ஸ்ரீ ஸ்வாமி தேசிகன் குருபரம்பராசாரத்தில் ஸாதித்ததைப் பின்பற்றி எழுதுகிறேன். அடியேன் ஸ்ரீ உ.வே. ஸ்ரீ மதுராந்தகம் ஸ்வச்சந்தம் தர்க்கஸிம்ஹம் ஸ்ரீநிவாஸாச்சார்ய ஸ்வாமியினுடைய ஏகபுத்திரன். எனது திருதகப்பனாரிடம் ஐந்து வயது முதல் ஸம்ஸ்க்ருதத்தில் காவ்யங்கள், நாடகங்கள், ந்யாய சாஸ்த்ரம் இவைகளைப் பயின்று ந்யாய சிரோன்மணி பட்டமும் பெற்றேன். அடியேன் ஸ்ரீ உ.வே. கொத்திமங்கலம் திருமலை நல்லான் சக்ரவர்த்தி வீரராகவார்ய மஹாதேசிகனை ஆச்ரயித்து வேதாந்த க்ரந்த காலக்ஷேபம் பண்ணினேன். அந்த ஸ்வாமி அடியேன் திருதகப்பனாருடைய மாதா மகனின் திருத்தம்பி குமாரர். அந்த ஸ்வாமி தன்னுடைய பெரிய தகப்பனாரான ஸ்ரீ உ.வே. கோபாலார்ய மஹாதேசிகனிடம் வேதாத்யயனம், காவ்யம், நாடகம், சாஸ்த்ரங்கள் இவைகளை அதிகரித்து வேதாந்த க்ரந்தங்களையும் காலக்ஷேபம் செய்தருளினார். ஸ்ரீ கோபாலார்ய மஹாதேசிகன் "அபரவேதவ்யாசர்" என்று ப்ரஸித்தமானவர். அந்த ஸ்வாமி அவருடைய திருத்தகப்பனாரான ஸ்ரீ உ.வே. ஸ்ரீ வீரராகவார்ய மஹாதேசிகனிடம் காலக்ஷேபம் செய்தருளினார். அந்த ஸ்வாமி ஸ்ரீ உ.வே. நாவல்பாக்கம் சதுர்வேத சதக்ரது ஸ்ரீமத் அண்ணயார்ய மஹாதேசிகனை ஆச்ரயித்து காலக்ஷேபம்

செய்தருளினார். ஆதலால் அடியேன் ஸ்ரீமத் அண்ணையார்ய மஹாதேசிகனுடைய சிஷ்ய பரம்பரையில் சேர்ந்தவன் என்று மிக்க பெருமையுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த க்ரந்தத்தை நான் எழுதி பத்து வருடங்களுக்குமேல் ஆயிற்று. எனது சிநேகிதரும், Press Information Bureau - இல் உயர் பதவி விகித்தவருமான ஸ்ரீமான் ஸௌம்ய நாராயண அய்யங்கார் இதை வாசித்துப் பார்த்து, அச்சிட்டுப் ப்ரகடித்தால் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திற்கு மிக்க உபகாரமாக இருக்குமென யோசனை கூறினார். அதை ஏற்றுக் கொண்டு அடியேன் குமாரர்கள் சிரஞ்ஜீவி ஸ்ரீநிவாஸ ராகவனும், சிரஞ்ஜீவி க்ருஷ்ணனும் முழு பொறுப்பு ஏற்றுக் கொண்டு இந்த நூலை அச்சிட்டு வெளிப்படுத்தினார்கள்.

இதற்கு நூலை சிறந்த முறையில் அச்சிட்டு அளித்த ஸ்ரீ ராமாயணா பிரிண்டிங் ப்ரஸ் உரிமையாளர்களுக்கும், அதன் மானேஜர், ஸ்ரீ E.V. ஹரிஹர அய்யர் அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்படிக்கு
ஸ்வச்சந்தம் ஆராவமுததாஸன்

# ரஹஸ்யத்ரயஸாரஸாரம்

## குருபரம்பரை மேன்மையின் சுருக்கம்

வேதம் நமக்குப் ப்ரமாணம் என்பது திண்ணம். வேதத்தின் உட்கருத்தை அறிவதற்குப் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், குலசேகராழ்வார், திருப்பாணாழ்வார், தொண்டரடிப் பொடி ஆழ்வார், திருமழிசை ஆழ்வார், திருமங்கை ஆழ்வார் ஆகிய பத்து ஆழ்வாருகளுடையவும், கோதைப்பிராட்டியாருடையவும், அருள் மொழிகளான திவ்யப்ரபந்தங்களை நாம் தெளிவாகத் தெரிந்து கொள்ளவேண்டும். ஆகையால் ஆழ்வார்களுடைய திவ்யப்ரபந்தங்கள் ஆஸ்திகர்களால் முக்கியமாக ஓதப்பட வேண்டியவைகள்.

மேலும் மதுரகவி ஆழ்வார் நம்மாழ்வாரையே தெய்வமாக எண்ணிப் பாடியதால் ஆசாரியன் அருளே மிகவும் முக்கியம் என்று வழிகாட்டியுள்ளார். ஆசாரியன் அருள் பெறாமல் எவரும் நல்வழி அடைதல் அரிது. க்ஷத்ரபந்து என்பவன் கொடும்பாவம் செய்திருந்தும் ஆசாரியன் அருளால் முக்தி பெற்றான். புண்ணியம் செய்த புண்டரீகனுக்கும் ஆசாரியன் மூலம் தான் நற்கதி கிடைத்தது. ஆகையால் ஒவ்வொருவரும் ஆசாரியனை அடுத்தே தான் முக்தி பெற முடியும். மோக்ஷத்தை விரும்புகிறவர்களுக்கு ஆசாரியனுடைய வம்சம் ஸ்ரீமந்நாராயணனளவு தொழப் படுவது என்று சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கிறது.

எல்லோருக்குமே ஆசாரியன் ஸ்ரீமானான நாராயணன். இவர் முதலில் பிரம்ம தேவனுக்கு வேதத்தைக் கற்பித்தார். பிரமன் அதை ஒரு சமயம் இழந்தபோது மீட்டும்

கொடுத்தார். இவர் மூலமாக உலகத்தில் சாஸ்திரங்களைப் பரவச்செய்தார். இவருடைய புதல்வர்களான ஸநத்குமாரர் முதலியவர்கள் மூலம் நன்மைக்கு வழிகாட்டினார். நாரதர், பராசரர், சுகர், சௌநகர் முதலியவர்களைக் கொண்டு வேதாந்த ஸம்ப்ரதாயம் தொடரவும் செய்தார்.

வ்யாஸராக நின்று மகாபாரதம், பிரும்ம சூத்திரம் முதலியவைகளை இயற்றினார். அன்னம், மீன், ஹயக்ரீவன், கீதாசார்யன் முதலிய அவதாரங்களை எடுத்துத் தானே வெளிநின்று உண்மைகளையும், நன்மைகளையும் வெளிப் படுத்தினார். தான் அருளிச் செய்தக் கருத்துக்களை எல்லாம் பீஷ்மாசாரியர் முதலிய பேரறிஞர் மூலம் நடத்தியும் காட்டினார். தானே பாஞ்சராத்திரம் என்கிற புனிதமான சாஸ்திரத்தை இயற்றி வெளிப்படுத்தினார். நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் முதலிய பத்து ஆழ்வார்களாகத் தானே மீண்டும் பத்து அவதாரம் எடுத்து, மேகம் கடல் நீரை எடுத்துக் கொண்டு எல்லோருக்கும் பயன்படும் நீராகக் கொடுப்பது போல், தமிழ் மொழியில் எல்லோரும் தெரிந்து கொள்ளும்படித் திவ்யப்ரபந்தத்தை வெளியிட்டு வேதத்தின் உட்கருத்தை அறிவித்தார். மேலும் தன்னுடைய கொள்கைக்கு எதிரிகளாய் இருப்பவர்களைத் தடுக்கத் தமிழ்நாட்டில் பல ஆசாரியர்கள் ரூபமாகத் தோன்றி பல நூல்களையும் இயற்றியுள்ளார். நாதமுனிகள், ஆளவந்தார், ஸ்ரீராமானுஜாசார்யார் என்னும் ஸ்ரீபாஷ்யகாரர், ஸ்ரீமந்நிகமாந்த தேசிகன் ஆகியோர் இவ்வாசாரியர்கள் ஆவார்கள். இவர்கள் பகவானுடைய அவதார புருஷர்கள்

ஆகவே ஸ்ரீமந்நாராயணன் முதல் ஆசார்யன், பிறகு பெரிய பிராட்டியார், நம்மாழ்வார், நாதமுனிகள், உய்யக் கொண்டார், மணக்கால் நம்பி, ஆளவந்தார், பெரிய நம்பி, எம்பெருமானார், முதலியவர்கள் வரிசையில் வருகிறார்கள், ஸ்ரீராமானுஜரை எம்பெருமானார், உடையவர்,

இளையாழ்வார், யதிராஜர், ஸ்ரீ பாஷ்யகாரர் என்ற பல பெயர்களால் குறிப்பிடுவது வழக்கம். எம்பெருமானார் பெரிய நம்பிகள் திருவடிகளை பஞ்சஸம்ஸ்காரமும் பெற்றுத் திருமந்திரம் முதலிய மந்திரங்களை உபதேசம் பெற்றார். திருக்கோட்டியூர் நம்பியிடம் ரஹஸ்யார்த்தங்களை அறிந்து கொண்டார்.

திருமாலையாண்டான் இவருக்குத் திருவாய்மொழியைக் கற்பித்தார். ஆளவந்தார் ஆழ்வாரிடம் இவர் திருவாய் மொழியும் ஓதி, ஸ்தோத்திரங்களையும் பல நல்ல மொழி களையும் கேட்டருளினார். திருமலை நம்பிகளிடம் ஸ்ரீமத் ராமாயணம் உபதேசம் பெற்றார். எம்பெருமானுக்குப்பின் ஆசார்ய பரம்பரைகள் தொடர்ந்து வருகின்றன. ஸ்ரீமந்நிகமாந்த தேசிகன் இந்த பரம்பரையில் அவதரித்து இந்த ஸம்ப்ரதாயத்தைப் பல சிறந்த நூல்களை இயற்றிப் பலப்படுத்தி ஸ்ரீராமானுஜர் ஸம்ப்ரதாயத்தைப் பின்பற்று கிறவர்களுக்கு ஒப்பற்ற உபகாரம் செய்தார். இந்த ஆசார்யனால்தான் யாராலும் இந்த ஸம்பரதாயம் அசைக்க முடியாத நிலைமையை அடைந்திருக்கிறது.

குருவைப்பற்றி வெளிப்படையாகப் புகழ்ந்து பேச வேண்டும். குருவினிடம் சிறந்த பக்தியுள்ளவனுக்கு அவன் வேண்டும் பொருள்கள் எல்லாம் கிடைக்கும் என்பது தெளிவாகும் என்பதற்கு வேதத்திலும், புராணங்களிலும் பல அத்தாட்சிகள் இருக்கின்றன. குருவினிடமுள்ள பக்திக்குத் தக்கவாறுதான் சிடர்களுக்கு அறிவின் ஏற்றமும் தாழ்வும் உண்டாகின்றது. குருவைப் புகழ்ந்து பேசுவதால் செல்வமும் ஆயுளும் வளரும் என்று சாஸ்திரங்களில் கூறப் பட்டிருக்கிறது. குருவின் குருக்களையும் இவ்விதமே புகழவேண்டும்.

மந்திரங்களையும் அவைகளின் அர்த்தங்களையும், உட்

கருத்துக்களையும் சொல்லும் போதெல்லாம் ஆசார்யர்கள் பரம்பரையையும் மனதாலும் வாயாலும் வாழ்த்த வேண்டும். ஆசார்யர்களை மனதால் புகழ்வது பேசக்கூடாதவருடன் பேசுதற்குப் பிராயச்சித்தமாகவும் கூறப்பட்டிருக்கிறது.

இவ்விதம் ஆசார்ய ஸம்பந்தம் நற்கதியடையவும் மற்ற நன்மைகளுக்கும் முக்கியமானது.

* * * * * *

# முன்னுரை

ஸ்ரீய:பதியான ஸர்வேச்வரனுக்கு ஜீவாத்மா அவருடைய திருமார்பில் அணிந்திருக்கும் கௌஸ்துபம் என்னும் ரத்தினம் போல் மிகவும் பிரியமானவன். இந்த ஜீவாத்மா ஸ்ரீமந் நாராயணனுக்குப் புதல்வனாகவும், சீடனாகவும், ஊழியனாகவும் சாஸ்திரங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. இவனுக்கு சேஷி அல்லது ஸ்வாமி ஸர்வேச்வரனான ஸ்ரீமந்நாராயணன். இந்த எம்பெருமான் அயர்வறும் அமரர்களுக்கு அதிபதியாய், உயர்வற உயர்நலமுடைய வனாய், நமக்கும் பூவின்மிசை நங்கைக்கும் இன்பனாய், இப்பூமியில் இருப்பவர்களுக்கும் வானத்தவர்க்கும் பெருமானாக இருக்கிறான். இந்த ஸர்வேச்வரன் பெரிய பிராட்டியாருடன் ஸ்ரீவைகுண்டம் என்று சொல்லப்படும் தெளிவிசும்பிலே அயோத்யை என்று கூறப்படும் பெருநகரிலே திருமாமணி மண்டபத்திலே ஓர் அழகிய கட்டிலில் ஆதிசேடனாகிய திருப்பள்ளி மெத்தையிலே, தன்னைப்போலவே எல்லா பேரின்பங்களையும் பெற்று அனுபவிக்கின்ற நித்ய சூரிகளுடன் வாளிளவரசராய் எழுந்தருளியிருக்கிறான். ஜீவாத்மாவும் நித்யசூரிகளைப் போலவே எல்லாக் குணங்களுமுடையவனாகவே, அவர் களைப்போல் அழியாப் பேரின்பங்களை அனுபவிக்கத் தகுதியுள்ளவன் தான். அவர்களைப் போலவே எம் பெருமானுக்கு நித்ய கைங்கர்யம் செய்யத் தகுதி உள்ளவனு மாவான். ஆனால் பரக்ருதியாகிய பாழிலே விழுந்து ஓடியோடிப் பல பிறப்பும் பிறந்து, தட்டித் தாவுற்று ஒளியிழந்து, அழுக்கடைந்து கிடக்கிறான். ஆதலால் சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கும் உண்மையை அறியாதவனாக இருந்து விடுகிறான்.

இந்த ஆத்மாவைப் பற்றி நாம் அறிந்துகொள்ள த்ருஷ்டாந்தமான கதையொன்றுள்ளது. ஓர் அரசன் தன் மனைவிமார்களுடனும் இளவரசனுடனும் வேட்டைக்குச் சென்று விளையாட்டில் ஈடுபட்டிருக்கிறான். அப்பொழுது இளவரசன் பேசத் தெரிவதற்கு முன்பே அங்கே வழிதப்பிவிடுகிறான். ஒரு வேடன் அந்தக் குழந்தையைப் பார்த்துவிட்டு அதைத்தன் குருச்சியிலே வளர்க்கிறான். இளவரசன் வேடன் மகனாகவே தன்னை எண்ணி அவர்கள் பேச்சுக்களையும் பழக்கங்களையும் பெற்று அவர்களில் ஒருவனாக இருந்து வருகிறான். தன் பதவிக்கு ஏற்ற போகங்களை எல்லாம் விட்டுவிட்டு இழிவான பழக்கங் களை இன்பமாகவும் எண்ணி வாழ்கின்றான். இவனுடைய உண்மையான நிலைமையை -இவன் இளவரசன் என்று அறியக்கூடியவர்கள் இவனைக்கிட்டாத நிலைமையிலிருக் கிறான். ஆதலால் இவன் ஆயுள் முடியும் வரையில் இவ்வேடனாகவே இருந்துவிட்டால் மறுபிறப்பிலும் இவனுக்கு மேலும் மேலும் இழிவு ஏற்படும். ஆகையால் இவன் நல்ல நிலைமையை அடைதல் அரிது.

இவ்விளவரசன் போன்றே ஜீவாத்மா உடலுக்கும் தனக்குமுள்ள வேற்றுமையை அறியாமல் அதுவும் தானும் ஒன்றென நினைத்து, இழிவான நிலைமையிலிருக்கிறான். அவ்விளவரசனுடைய அங்கங்களின் சிறப்பைக் , கண்டு ஜாதியின் பிரிவை அறிந்துள்ள சில தர்மிஷ்டர்கள் ஒரு உபாயத்தாலே இவனை மீட்கப்பெற்று அன்புகொண்டு இவனுக்கு உண்மைக்குப் புறம்பான வேறு ஜாதியில் பிறந்ததாக எண்ணியிருக்கும் எண்ணத்தை ஒழிவித்து, அவனுக்கு அரசனுக்கேற்ற ஸம்ஸ்காரங்களைச் செய்து, அவன் அரசகுலத்தில் பிறந்தவன் என்பதை அவன் நம்பும் படி அவனுக்குக் கூறி, ஏற்கெனவே அவன் செய்துவந்த செய்கைகளில் அருவருப்புண்டாகும்படி செய்து, மன்னனாக

அவன் அனுபவிக்கக்கூடிய உயர்ந்த நிலைமையையும், போகத்தையும் எடுத்துரைத்து அவனை நல்வழிக்குக் கொணர்கின்றனர். அதுபோலவே இவ்வாத்மாவுக்கும் சில தர்மிஷ்டர்கள் அவன் தந்தை முதலியோர் மூலமாக உண்மையை அறிவித்து, உடல் வேறு ஆத்மா வேறு என்று எடுத்துரைத்து நற்கதியடைவதற்குத் தக்க புருஷார்த்தங் களையும் அவைகளை அடைதற்குரிய நெறிகளையும் அவன் பெறுதற்கு உதவுகின்றனர். எதைச் செய்ய வேண்டும் எதை விலக்க வேண்டும் என்று அறியும்படியும் செய்கிறார்கள். இவ்விதம் இவ்வாத்மா சில தர்மிஷ்டர்கள் மூலம் பெற்ற அறிவைக் கண்டு கருணையுள்ள எப்பெருமானால் ஏவப் பட்டுச் சில ஆசாரியர்களும் தாங்கள், கருணை மூலம் இவ்வாத்மாவை அணுகி வருகிறார்கள். அரசகுமாரனுக்கு உண்மையான ஊழியர்கள் நேர்ப்பட்டு அவனுடைய பிறவியை உணரச்செய்து, அவனுக்குப் பிரியமாயும் நன்மையாயும் உள்ளவைகளையும் தெளிவாகச் சொல்லித் தக்க உபாயத்தால் அவ்வரசனுக்கும் அரச குமாரனுக்கும் ஒருவரோடொருவர் சேர வேண்டுமென்னும் விருப்பத்தை யுண்டாக்கி விடுகின்றனர். அம்மாதிரியே இந்த ஆத்மாவிற்கும் ஆசாரியர்கள் இவ்வுலகத்திற்கும் ஸ்ரீவைகுண்டத்திற்கும் நாதனான லக்ஷ்மி காந்தனான ஸ்ரீமந்நாராயணனுடன் உள்ள குடல் துவக்கை தெள்ளிதின் தெரிவித்து, அந்த எம்பெருமானை அடைதற்கு வேண்டிய வழிகளிலே முயன்று, அவன் பெறும் பெருமையை தங்களுக்கு எல்லாவற்றிலும் மேம்பட்டதாக உகந்து, அவனுக்கு உபதேசம் செய்கிறார்கள். அவனுக்கு எவ்வித ஐயமும் உண்டாகாதவாறு அநேக ப்ரமாணங்களைக் கொண்டு ஸர்வேச்வரனுடையவும் இவனுடையவும் உண்மையான ஸ்வரூபங்களை எடுத்துச் சொல்லி, இருவருக்கும் உள்ள சம்பந்தத்தையும், போகத்தையும், மோக்ஷத்தையும், செய்யக்கூடியவைகளையும், செய்யத்

தகாதவைகளையும், இன்வைகளுக்குரிய வழிகளையும், இன்னும் முக்கியமானவைகளையும் கூறி இவனை நல்வழிக்குக் கொண்டு வருகின்றனர். ஆதலால் இவை களெல்லாம் மோக்ஷத்தை விரும்பும் ஆத்மாக்கள் அவசியமாக அறிந்துகொள்ள வேண்டியவைகள். இவை களெல்லாம் உபநிஷத்தில் கூறப்பட்டுள்ளன. இவைகளில் மிகவும் ஸாரமானதை மூன்று ரகசியங்களான திரு மந்திரத்திலும், த்வயத்திலும், சரமஸ்லோகத்திலும் சுருக்கமாகக் கூறப்பட்டிருக்கின்றது. இவைகளைத்தான் ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரயஸாரத்தில் ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் தெளிவாக எடுத்து கூறியிருக்கின்றார்.

## ஸாரநிஷ்கர்ஷம்

இந்த மூன்று ரகசியங்களுள் திருமந்திரம் எல்லா வற்றையும் கொண்டதாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆதலால் இதன் அர்த்தத்தை அறிந்துவிட்டால் எல்லா அர்த்தங் களையும் அறிந்ததுபோலாம்.

சரமஸ்லோகம் ஓர் உபாயத்தைச் சொல்லி இதை ஒன்றை மட்டும் ஏற்றுக்கொண்டால் மற்ற எல்லா உபாயங் களுடையவும் பலன் கிடைக்குமென்று உறுதியாகக் கூறுகிறது.

த்வயமந்திரம் தன்னை ஒருமுறை சொல்லுபவனை எல்லாவிதத்திலும் கடைத்தேறும்படி செய்யும் மகிமை வாய்ந்தது. ஆகையால் மோக்ஷத்தை விரும்புகிறவ்களுக்கு இம்மூன்றும் கட்டாயமாக ஆதரிக்கக் கூடியவை.

மோக்ஷ புருஷார்த்தமும் அதற்கு உபாயமும் கண்ணால் காணக்கூடியவைகள் அல்ல. ஆகவே சாஸ்திரங்களைக் கொண்டு தான் இவைகளைத் தெரிந்து கொள்ள வேண்டும். அறிந்து கொள்ள வேண்டிய சாஸ்திரங்கள் பல இருப்பதாலும், ஆயுள் அதற்குப் போதுமானபடி

இல்லாமையாலும், மேலும் பல தடங்கல்கள் ஏற்படுமாகையாலும் சாஸ்திரங்களில் கூறி இருப்பவைகளில் மிகவும் ஸாரமானதைத் தெரிந்து கொள்ளவேண்டும். பிறருடைய சாஸ்திரங்கள் நமக்கு தேவையில்லை யாகையால் அவைகளை அறியவேண்டியதில்லை. வேதத் திலும் உபநிஷத்துக்கள் தவிர அதன் முன்பாகங்கள் சிறிய பலன்களைக் கொடுக்கக்கூடிய யாகம் முதலியவைகளைப் பற்றிச் சொல்லுவதால் அதுவும் தேவையற்ற ஒன்றுதான். அவைகளில் கூறப்பட்டிருக்கும் சுவர்க்கம் முதலிய பலன்கள் இவ்வுலகத்தைவிடச் சிறந்ததாயினும், அங்கும் சுகம், துன்பத்துடன் கலந்தே இருக்குமாகையால் அவைகள் வேண்டாதவை. ஆத்மாவை மட்டும் அனுபவிப்பதையும் அதற்கு வழியையும் உரைக்கும் வேதத்தின் பாகங்கள் முன் கூறப்பட்டவைகளை விடச் சிறந்தவைகளாலும், அதைவிடப் மேம்பட்ட பரமாத்மாவையும் அவனை அடையும் வழிகளையும் கூறும் வேதத்தின் பாகத்தைவிடக் கீழ்ப்பட்டதாகையால் அவைகளும் ஏற்றுக் கொள்ளத் தக்கவைகள் அல்ல.

ஆகையால் பரமாத்மாவையும் அவனை அடையும் வழிகளையும் கூறும் வேதபாகமே முக்கியமாக ஏற்றுக் கொள்ளவேண்டியவை. இவைகளை மிகவும் சுருக்கமாக வெளிப்படுத்தும் இம்மூன்று ரகசியங்கள்தான் மிகவும் ஸாரமானவை. இந்த ஸித்தாந்தத்துக்குத் தனிப்பட்ட கொள்கையை இம்மூன்றும் சுருக்கமாய்க் கூறுகின்றன. இவைகளை அர்த்தத்தோடு அறிந்து கொள்வது மோக்ஷத்தை விரும்பும் ஆத்மாவுக்கு மிகவும் தேவையானது.

## ப்ரதான ப்ரதிதந்திரம்

ப்ரதிதந்திரம் என்ற சொல்லுக்கு மற்ற எந்த மதத்திற்கும் பொதுவில்லாத ஒரு மதத்தின் தனிப்பட்ட கொள்கை என்று

பொருள். நமது விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்துக்குத் தனிப் பட்டதாயும் முக்கியமாக உள்ள கொள்கை (உயிருள்ளதும், உயிரற்றதுமான) சேதனங்கள், அசேதனங்கள் என்று சொல்லப்படும் பொருள்களுக்கும் ஈசுவரனுக்கும உள்ள சரீராத்மபாவம் என்று சொல்லப்படும் ஸம்பந்தம் முதலியவை. அதாவது இவ்வுடலுக்கும் ஆத்மா எப்படியோ அதுபோல் இந்த ஆத்மாவுக்கும் ஆத்மா ஈசுவரன். சேதனமான பொருள்களும் அசேதனமான பொருள்களும் ஈச்வரனுக்குச் சரீரங்கள். ஈச்வரன் சரீரி. அதாவது இப்பொருள்கள் உள்ளவரையிலும் அவைகளை தாங்கிக் கொண்டும், அவைகளைத் தனக்கு அடங்கி இருக்கும்படி வைத்துக்கொண்டும், தனக்கு அவைகள் கீழ்ப் பட்டிருக்குமாறு தன் உபயோகத்துக்காகவே வைத்துக் கொண்டு இருப்பதுதான் சரீரி என்பது. சேதனங்களும் அசேதனங்களும் ஈசுவரனுக்கு சரீரம் என்பது இவைகள் அவனாலேயே தரிக்கப்பட்டும், அவனை விட்டுவிட்டுப் பிரிந்திருக்கமுடியாமல் அவனுக்குட்பட்டும் அவனுடைய உபயோகத்துக்காகவே சேஷமென்று சொல்லக்கூடியதாகவும் அவைகள் உள்ளவரையில் இருப்பதாகும் பொதுவாக ஒரு சேதனனுக்கு ஒரு நிலைமையிலுள்ள பொருள் அது அந்நிலைமையிலுள்ள வரையில் அவனை விட்டுப் பிரிந்திருக்க முடியாமல் அவனோடு தொடர்ந்து இருப்பது தான் அந்த சேதனனுக்கு அப்பொருள் சரீரம் என்பது. ஈச்வரனை விட்டு இந்த சேதனர்களும் அசேதனர்களும் பிரிந்து தனித்திருக்கமுடியாமல் அவைகள் ஈசுவரனுக்குச் சரீரம் என்று சொல்லப்படுகிறது.

ஈசுவரன் சேதனர்களையும் அசேதனர்களையும் தாங்கி இருப்பதாவது அவைகள் இருப்புக்கும் நீடித்தலுக்கும் போக்குக்கும் தனது ஸ்வரூபத்தாலேயே தரிப்பதாகும். அவைகளைத் தனக்கு அடங்கி இருக்கச்செய்வது தனது

எண்ணப்படி அவைகளின் " நிலைமையும் போக்கையும் செலுத்துவது. அதாவது ஈசுவரன் ஸ்வரூபத்தைப் பிறர் தெரிந்து கொள்வதற்காக எக்குணங்கள் அவனிடமிருப்பவைகளில் அதற்கு உபயோகமாக இருக்குமோ அவைகளுக்கும் மற்றும் அவனை இவைகளைக் கொண்டு தெரிந்துகொண்ட பிறகும் மேலும் அவனிடம் உள்ள குணங்களும் எப்படி அவனிடம் இருந்துகொண்டு அவன் ஸ்வரூபத்தால் தரிக்கப்படுகின்றனவோ அதுபோலவே அவரைத் தவிர எல்லாப் பொருள்களுமே அவனாலேயே நேராகவே தாங்கப் படுகின்றது. அப்பொருள்களிடம் இருக்கும் குணம் முதலியவைகளுக்கு அப்பொருள்கள் மூலமாக ஈசுவரனே தரிப்பவனாக இருப்பான். சிலர் ஜீவர்களால் தரிக்கப்படும் உடல்களை ஜீவர்கள் மூலம் ஈசுவரன் தரிப்பதாகச் சொல்லுகின்றனர். சில ஆசார்யர்கள் ஜீவன் மூலமாகவும் தானாகவும் ஈசுவரன் சரீரங்களைத் தரித்திருப்பதாகக் கூறுகின்றனர். இவ்விதம் எல்லாப் பொருட்களும் ஈசுவரனுடைய ஸ்வரூபத்தைப் பற்றிக் கொண்டு அவரை விட்டுப்பிரியாமல் எக்காலமும் இப்பொருட்களெல்லாம் அவனைப் பற்றியே இருக்கும். எல்லாப் பொருட்களுடையவும் தொடர்ந்து இருக்கும் நிலையும் ஈசுவரனுடைய விருப்பத்தின்படிதான் இருக்கின்றது. ஆகையால் அவனால் இவைகள் அடக்கி ஆளப்படுகிறதென்று சொல்லப்படுகிறது. ஸ்வர்க்கம், நட்சத்திரம் முதலியவைகளானப் பளுவுள்ள பொருள்களும் அந்தந்த இடங்களில் விழாமல் நிறுத்தப்பட்டிருப்பது ஈசுவரனுடைய எண்ணத்தினால்தான். ஆகவே எல்லாப் பொருள்களும் ஈசுவரனுடைய ஸ்வரூபத்தைப்பற்றிக் கொண்டும் அவனுடைய விருப்பப்படி இருந்துகொண்டும் இருப்பதால் இவைகள் ஈசுவரனுடைய உடல்களாகும். உலகத்திலும் உடலுக்கும் ஆத்மாவுக்கும் இவ்வித சம்பந்தத்தைக் காணலாம். உடல் ஜீவன் இருக்கும்

வரையில் இருக்கும். அவன் பிரிந்ததும் இது அழியும், அவன் விருப்பப்படியும் அது தாங்கவும்படும். இது போல்தான் ஈசுவரன் சேதனங்களுக்கும் அசேதனங்களுக்கும் ஆத்மா வாவான். ஈசுவரன் இவைகளுக்கு சேஷியாகவும் ஆவது எப்படி என்றால் இவைகளால் இவனுக்கு பயன் ஏற்பட்டு அதன்மூலம் இவனுக்கு ஒரு பெருமையும் உண்டாகிறது.

இதுதான் இந்த விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்துக்குத் தனிப்பட்ட கொள்கையாகும்.

## அர்த்த பஞ்சகம்

முன் கூறியபடி இந்த விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்துக்கு அடிப்படை, ஈசுவரன் சேதனங்களும் அசேதனங்களாகிய எல்லா பொருட்களுக்கும் ஆத்மா அல்லது சரீரி. இப் பொருள்கள் அவனுடைய உடல் என்கிறது ஈசுவரனுக்கும் இப்பொருள்களுக்கும் உள்ள இவ்விதமான தொடர்பாகும். இதையடுத்து ஐந்து பொருள்களைப்பற்றிப் பெரியோர்கள் விவரமாகக் கூறி இருக்கிறார்கள். இத்தொடர்பையும் சேர்த்து ஆறு பொருள்கள் என்று கூறுகின்றனர்.

இவ்வைந்து பொருள்கள், ஈசுவரன் அல்லது பரப்ரும்மம், இவரை அடையவேண்டிய ஆத்மா, ஈசுவரனை அடையும் நெறி, அதன் பயன், இதற்கு ஏற்படும் தடங்கல் ஆகியவையாகும். இந்த அடையவேண்டிய ப்ரம்மம் திருமந்திரத்தில் முதல் எழுத்தான அகாரத்திலும், நாராயண என்கிற பதத்திலும். த்வயத்தில் ஸ்ரீமதே நாராயணாய, ஸ்ரீமன் நாராயண என்கிற பதங்களிலும் நாம் அனுஸந்தானம் அல்லது த்யானம் செய்ய வேண்டியதாகும். இந்த பரம்மம் நாராயணன். இந் நாராயணனை நாம் நினைக்கும் போதெல்லாம் அவரைவிட்டு எக்காலத்திலும் எந் நேரத்திலும் எந்நிலையிலும் பிரியாத அவருடைய தேவியான பெரிய பிராட்டியாரோடு இணைந்தும், அளவற்ற உணர்வும்

ஆனந்தமும் உடையவராகவுமேதான் நாம் அனுஸந்தானம் பண்ண வேண்டும். மேலும் அனைத்துலகங்களும் பற்றும் இடமான உயர்ந்த திருமேனியோடு கூடியவனாகவும் நினைக்கவேண்டும். இவனுடைய உடல் ஐம்பூதங்களால் ஆக்கப்பட்டவையல்ல. என்றும் அழியாதத் தனிச்சிறப்புள்ள ஒப்பற்ற அழகுவாய்ந்த திருமேனி. இந்த எம்பெருமான் திருமேனி ஐந்துவிதமாக இருக்கின்றது. அவைகளாவன, பரம், வ்யூஹம், விபவம், அர்ச்சை, அந்தர்யாமி என்று கூறப்படுகின்றன. இவைகளைக் " குறித்து அடுத்த அதிகாரத்தில் விவரமாக எழுதுகிறேன். இவைகள் பாஞ்சராத்திரத்தில் நன்றாகக் கூறப்பட்டிருக்கின்றன. மேலும் கணக்கற்ற விபூதியுள்ளவனாகவும் நாம் அனுஸந்தானம் செய்யவேண்டும், விபூதியாவது அவனுக்குக் கீழ்ப்படிந்திருக்கும் பொருள் அல்லது அவனது ஐச்வர்யமாகும். இவ்வுலகம் அந்த பகவானுக்கு லீலை அல்லது விளையாட்டுக்கான விபூதி இது மொத்தத்தில் கால்பாகம்தான். முக்கால் பகுதி ஸ்ரீவைகுண்டலோகம், அங்கு முற்றிலும் சுகமேதன். இவ்விரண்டு விபூதிகளுக்கும் இந்த ஸ்ரீமன் நாராயணனே நாதன்.

இவ்விதமாகப் பகவானை லக்ஷ்மியோடு கூடியிருப் பவாரயும், அளவற்ற அறிவையும் இன்பமுமாகவும், இழிவானவை ஒன்றுமில்லாதவனாகவும், அறிவு, சக்தி, முதலிய அளவற்ற குணங்கள் உள்ளவனாகவும், தனிப்பட்டத் திருமேனியோடு கூடியவனாயும், இரண்டு விபூதியையும் தனக்கு உடலாய் வைத்திருப்பவனாயும், உலகத்தின் பிறப்பு, இருப்பு, அழிவு முதலிய செய்கைகளை விளையாட்டாகக் கொண்டவனாகவும் பார்த்து அவனை அடைய வேண்டியவன் இந்த ஜீவாத்மா, இவனுடைய ஸ்வரூபம் அடுத்தப்படியாக அறியப்படவேண்டும். இந்த ஜீவாத்மா பத்தர், முக்த்தர், நித்யர், என்ற மூன்று விதமாக இருக்கிறான்

இவர்களில் பத்தர் என்பவாகள் நெடுங்காலமாக இவர்களைத் தொடர்ந்து வரும் வினைப்பயனாக இவ் வாழ்க்கையில் இருந்து கொண்டிருக்கும் பிரும்மதேவன் முதல் சிறிய செடி வரையிலுள்ள ஆத்மாக்கள். முக்தர் என்பவர்கள் சாத்திரங்களில் கூறப்பட்டிருக்கும் உபாயங் களில் ஒன்றைக் கொண்டு எம்பெருமான் கருணையாலே இவ்வாழ்க்கையைக் கடந்து ஸ்ரீவைகுண்டத்தில் எம் பெருமானோடு நிகரற்ற பேரின்பத்தை அனுபவிப்பவர்கள், நித்யர் என்பவர்கள் ஸ்ரீவைகுண்டத்தில் எம்பெருமானைப் போலவே அவருடைய தோழர்கள் போல் பேரின்பத்தை ஆரம்ப காலம் என்பதே இல்லாமல் அனுபவித்துவரும் அனந்தன், கருடன் முதலியவர்கள். முக்தர்களும், நித்யர் களும் எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்வதேயே இன்பமாக்க கொண்டவர்கள். இம்மூவருக்கும் பொதுவான ரூபம், அணுவாயும், அறிவு, ஆனந்தமாகியதும், எம் பெருமானுக்கு சேஷர்களாயும் அவருக்கு அடங்கியே இருப்பதும் இவர்களது ஸ்வரூபம், இவ்வாத்மாவைப் ப்ரணவத்திலும், நமர் என்பதில் மகாரங்களில், நார சப்தங்களிலும், ப்ரபத்யே என்கிற தன்னிலையிலும், வ்ரஜ, த்வா என்கிற முன்னிலையிலும் அனுஸந்தானம் செய்ய வேண்டும்.

அடுத்து, எம்பெருமானை ஆத்மா அடையும் உபாயம். அது பின் அத்யாயங்களில் விவரமாகத் கூறப்பெறும். இதைத் திருமந்திரத்தில் நம: என்கிற வார்த்தையிலும் அயநபதத் திலும், த்வயத்தின் முதல் வாக்கியத்திலும், சரமச்லோகத்தில் முதல் பாதியிலும் அனுஸந்திக்க வேண்டும், நான்காவது பலம் அல்லது பயன். அது பகவானுக்கு ஸ்ரீவைகுண்டத்தில் செய்யும் கைங்கர்யம். இதை நான்காம் வேற்றுமையிலுள்ள பதங்களிலும், த்வயத்தில் நம: என்பதிலும் "ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி" என்கிற வாக்கியத் திலும் காணவேணும்.

ஐந்தாவதான பொருள் எம்பெருமானை அடைவதற்கு எதிர்ப்பாகும். அது அவித்யை முதலியதான* மோக்ஷத்தை அடைவதற்குத் தடங்கல். அதிலும் முக்கியம் அநாதியாகத் தொடர்ச்சியாகச் செய்யப்பட்டுவருகிற பகவானுடைய உத்தரவை மீறி நடப்பது. அவன் உத்தரவுதான் வேதம், தர்மசாஸ்திரங்கள் இவைகள். இதில் கூறியிருப்பதற்கு எதிராக நடப்பதால் பகவானுக்கு வெறுப்பு ஏற்பட்டு அவன் கொடுக்கும் தண்டனைதான் முக்கிய காரணம்.

அதனால் ஆத்மாக்களுக்கு இயற்கையிலுள்ள நல்லறிவு சுருங்கி விடுகின்றது. அதற்குக் காரணம் இந்த ப்ரக்ருதியோடு சேர்ந்து இந்த உடலுக்கும் புலன்களுக்கும் வசப்பட்டு விடுவதாகும். இதனால் இவன் விலங்குகள், பறவைகள் போன்ற பல பிறவிகளைப் பெற்றுவிடுகிறான். அப்படி இல்லாமல் மானிடப் பிறவியடைந்தாலும் நல்ல சாஸ்திரங் களில் பற்றில்லாமல் ஏமாற்றலான மதங்களைப் பின்பற்றி மதி மயக்கம் அடைந்து கெட்டு விடுகிறான். அல்லது சிறிய இன்பங்களுக்காகச் செய்யக் கூடாதவைகளைச் செய்து பாவத்தை மேலும் மேலும் செய்துவிடுகிறான். அல்பமான பலன்களை உத்தேசித்துச் சிறிய தேவதைகளைப் பூசித்து அவைகள் கொடுக்கும் தாழ்மையான பலன்களைப் புழுபூச்சிகள்போல் மிகப்பெரிய இன்பமாக எண்ணியும் சிலர் கெட்டுவிடுகிறார்கள். அப்படியே இவைகளை எல்லாம் மீறி சாஸ்திரங்களை நன்றாகப் பயின்றாலும் சிலர் மட்டமான உபாஸனங்களில் இறங்கி மேலான ஸ்தானத்துக்கு வராமல் இருந்துவிடுகிறார்கள்.

இப்படி எல்லாம் பகவானை உபாஸனம் செய்து மோக்ஷத்தையடைந்து மீண்டும் இந்த லோகத்தையும் மறுபிறப்பும் அடையாமலிருப்பதற்கு எது காரணமோ அதில் போகாமல் கீழ்ப்படிகளிலும் தப்பான வழிகளிலும் போகும்படி செய்வதற்குக் காரணம் பகவானுடைய

தண்டனைகளாவதுதான். அதற்குக் காரணம் அவித்யை முதலானதாகும். அதாவது நல்லது என்பதனைக் கெட்டதாகவும் கெட்டதை நல்லதாகவும் இப்படிப் பலவிதமான அறியாமை. இதுதான் மோக்ஷத்தை அடைவதற்குத் தடங்கல்.

பகவானை அடைவதற்குக் கர்மயோகம் முதலான வழியும் உண்டு. அவைகள் மூலம் எத்துணைப் பிறப்புகள் எடுத்து நற்கதி அடைய முடியும் என்று கூற முடியாது. வழி சிறந்ததாகையால் பயனை அடைதல் முடியும் என்பது மட்டும் உறுதி. வசிஷ்டர் முதலியவர்கள் சிறந்த ஞானிகளாயினும் வெகுகாலம் சென்ற பின்புதான் நற்கதி பெற்றனர். வ்ருத்ரன் க்ஷத்ரபந்து முதலானவர்கள் மோக்ஷமடைய பற்பல தடங்கள் இருந்தும் விரைவில் முக்தியடைந்தனர். ஆகையால் தாமதமின்றி மோக்ஷத்தையடையும் புண்ணியம் யாரிடம் உள்ளது என்று கூற முடியாது. தாமதத்திற்கு காரணமான பாவம் யாரிடம் இருக்கின்றது என்பதும் தெரியாது. ஆகையால் இப்படி மோக்ஷத்தை அடைவதற்குத் தடங்கலாக இருப்பது பகவானுடைய உத்தரவை மீறியதாகும். அதனால் பகவான் சிக்ஷை செய்கிறான். அந்த சிக்ஷையிலிருந்து விடுதலை பெறுவதற்கு வழி பகவானை சரணம் புகுவது. இதை ஸ்ரீபாஷ்ய காரர் "எம்பெருமானை வசப்படுத்த வழி சரணாகதிதான்" என்று சாதித்தருளினார்.

இவ்விதமாகக் கூறப்பெறும் தடங்கலை மூன்று ரகசியங்களிலும் தவிர்க்க வேண்டியதாக க்காட்டப்படும் பதங்களிலும் அநுஸந்தித்து நற்கதியை அடைவதற்கான வழியில் விரைவாக முயல வேண்டும்.

## தத்வ-த்ரய சிந்தனம்

முன்கூறியபடி மோக்ஷத்தை விரும்புகின்றவர்கள் ஐந்து அர்த்தங்களை அறியவேண்டும். ஸம்பந்தத்தைச் சேர்த்தால்

ஆறு பொருள்களை அறிய வேண்டும். ஆனால் ஆசார்யர்கள் மூன்று தத்துவங்களை அறியவேண்டும் என்று தனிப்படுத்திக் கூறிகின்றனர். இவைகள் இந்த ஐந்து பொருள்களுக்குள் அடங்கினவைகள்தான். மூன்று தத்துவங்களைத் தனிப்படுத்தி அறிய வேண்டியவைகளாகச் சொன்னதற்குக் காரணம் இவைகளை அறிவதால் முக்கியமான அறியாமை நீங்கும் என்பதாகும். ப்ரக்ருதியால் உண்டான சரீரமே ஆத்மா என்கிற அறியாமை, ஆத்மாவைத் தவிர வேறு ஈசுவரன் கிடையாது அல்லது ஈசுவரனே இல்லை என்பதாகிய அறியாமை முதலியவை முதலில் கழிக்கப்பட வேண்டும். அது மூன்று தத்துவங்களை நன்கு அறிவதால் நீங்கும். ஆகையால் சாஸ்திரங்களில் அனுபவிப்பவன், அனுபவிக்கப்படும் பொருள், இவைகளுக்கு எஜமானன் என்று சித்து, அசித்து, ஈசுவரன் என்று மூன்று பொருள்களை எடுத்து விவரமாகக் கூறப்பட்டிருக்கிறது. ஐந்து அர்த்தங்களை அறிவதற்கு முன் இவைகளைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டியது இதனால் அவசியமாகின்றது.

இந்த மூன்று தத்துவங்களில் அசித்து, த்ரிகுணம், காலம், சுத்த ஸத்வம் என மூன்று வகைப்படும். இவைகள் அறிவற்றவைகள்.

பத்தர், முக்தர், நித்தியர் என்று ஜீவர்களும் மூன்று வகை. சித்து என்றும், ஜீவர்களைச் சொல்லுவதுண்டு. இவர்கள் அறிவுடையவர்கள்.

ஈசுவரன் மூன்றாவது தத்துவம். இவர்களுடைய ஸ்வரூபம், நிலைமை செய்கை. இவைகள் சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கின்றன.

ஸ்வரூபம் என்றால் மற்ற பொருள்களைவிட வேறு பட்டதாக தனிப்பட்ட அடையாளங்களுடன் கூடியிருப்பது. ஸ்திதியாவது அந்தபொருள் எவ்வளவு காலம் இருக்குமோ அதைக் குறிப்பதாகும்.

ப்ரவ்ருத்தி என்பது அதன் பயன் அல்லது செய்கை. ஒரு பொருளைக் காட்டும் அதன் ஸ்வரூபத்தை அறிவதற்கானத் தனிப்பட்ட குணங்களையும் மேலும் அதன் சில முக்கிய குணங்களையும், அதன் பயன்களையும் கூறும். அதன் ஸ்வரூபத்தைக் காண்பிக்கும்போழ்து எக்குணங்கள் இல்லாமல் இதை அறிய முடியாதோ அக்குணங்கள் உள்ளதாகவே காண்பிக்கும். அக்குணங்களை சொல்லாமல் போனால் அப்பொருளை அறியமுடியாமலிருக்கும். இப்படிக் கூறுவது ஒவ்வொன்றுக்கும் அவசியம்.

ஜீவனுடைய ஸ்வரூபம் ஞானம், ஆனந்தம், மாசற்றவன், அணு என்று கூறப்பட வேண்டியது. இந்த ஜீவன் என்ற தத்துவம் ஈசுவரனுக்கே அடியவனாக இருக்கும். ஈசுவரனுக்கே தான் அடிமை, வேறு ஒருவருக்கும் கீழ்ப்பட்டவன் அல்ல. இவனுக்கு இலக்கணம் அணுவான சேதனன் என்பதும் அதுபோல் இயற்கையில் ஈசுவரனுக்குக் கீழ்ப்பட்ட சேதனன் என்பதும். இது போன்று ஈசுவரனுக்கு இலக்கணம் விபுவாந சேதனன் என்றும் வேறு யாருக்கும் கீழ்ப்படியாத எஜமானன் என்றும் சொல்லப்படும். ஜீவன், பரமாத்மாவாகிற இரண்டு ஆத்மாக்களுக்கும் பொதுவான இலக்கணம் சேதனனாயிருப்பதும், ப்ரத்யக்த்வமும், சேதனன் என்றால் அறிவு உள்ளவனாக இருப்பது. ப்ரத்யக்த்வம் என்றால் தனக்குத் தான் தோன்றுவது. அதாவது வேறு ஞானத்தை எதிர்பாராமல் தானாகவே "நான்" என்று உணர்வது. இப்படி இந்த இரண்டு ரூபங்களும் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பொதுவாகையால் ஜீவனுக்குத் தனிப்பட்ட ரூபம் எப்பொழுதும் ஈசுவரனுக்குக் கீழ்ப்பட்டு சேஷனாகவே இருப்பது.

இந்த ஜீவாத்மா ஈசுவரனுக்கு அடிமை அல்லது சேஷன் என்று சொல்லும்போது அவனுக்கு அடிமையாகவே எப்பொழுதும் (மோக்ஷத்திலும் கூட) இருப்பான் என்றும்

அவனுக்கேதான் சேஷனாக இருப்பான் என்றும் கொள்ள வேண்டும். ஆனாலும் பகவானின் திருவுள்ளப்படி இவன் பகவத் பக்தர்களுக்கும் சேஷனாக இருக்க வேண்டும். இது ஜீவாத்மாவின் ஸ்வரூபம்.

இவனுடைய ப்ரவ்ருத்தி அல்லது செயல், இவன் எப்பொழுதும் ஈசுவரனுக்குக் கீழ்ப்படிந்தும், அவனுக்காகவே எல்லாம் செய்பவனாவான். எல்லாவற்றையும் அனுபவிப் பவனாகவுமாவான். ஈசுவரன் தனக்காகவே இந்த ஜீவனை எதையும் செய்யும்படியாகவும், எதையும் அனுபவிக்கும் படியாகவும் செய்கிறான். ஆகையால் ஜீவனுடைய செய்கை முற்றிலும் ஈசுவரனுக்காகவேதான்.

இச்சேதனர்களுள் பத்தனான சேதனனைத் தனிப்படுத்தி அறியவேணுமானால் இவன் அவித்யைக்குட்பட்டுக் கர்மாக் களைச் செய்து அதன் பயன்களை அனுபவித்துக்கொண்டு இருப்பான். ப்ரும்மா முதல் சிறியசெடி வரையில் பத்தர்கள் தான். இவர்களுக்குள் ஒவ்வொருவருக்கும் உள்ள வேற்றுமையை அவரவர் பெற்றுவரும் அறிவு, சுகம் முதலியவைகளின் வேற்றுமைகளால் கண்டுகொள்ள வேண்டும். இந்த பத்தர்களான ஜீவர்கள் அவரவர் வினைக்குத் தக்கபடி ஈசுவரன் கொடுத்த உடல்களைத் தங்களது ஸ்வரூபத்தாலும் தங்கள் அறிவாலும் தாங்கி நிற்பார்கள். அவர்கள் ஸ்வரூபத்தால் தாங்குவதால் இந்த உடல் அழியாமல் இருக்கும் விழித்துக் கொண்டிருக்கும் காலம் முதலியதில் தங்கள் அறிவின் மூலம் இவ்வுடலைத் தாங்கி நிற்பது, தனக்கு வேண்டிய புருஷார்த்தங்களான ஸ்வர்க்கம் முதலியதைப் பெறுவதற்கும் அவைகளைப் பெறுவதற்கான யாகம் முதலிய உபாயங்களை செய்வதற்கும் உபயோகமாக இருக்கும். சரணாகதி அல்லது ப்ரபத்தி செய்து மோக்ஷத்துக்கு உபாயம் செய்துவிட்டு இருப்பவனுக்கு, பகவானுக்கு இங்கும் கைங்கர்யங்கள் செய்ய

உபயோகமாக இருக்கும், பாபம் செய்பவர்களுக்கு இந்தச் சரீரத்தைத் தாங்கி நிற்பது நரகத்தை அடைவதற்கும் மேலும் மேலும் பிறப்பைப் பெறுவதற்கும் உபகரணமாக இருக்கும்.

இந்த ஜீவன் சரீரத்தின் நிலைமைக்குக் காரணமாக இருப்பதாக இருந்தால் ஜீவன் இதைவிட்டு நீங்கிய பிறகு சரீரம் இருக்கிறதே என்று நினைக்கலாம். ஜீவன் இதைவிட்ட பிறகு சரீரத்தின் பலபொருள்களின் சேர்க்கைகள் குலைந்து விடும். சரீரம் என்று நாம் மேலுக்குப் பார்க்கும் பொருள்மட்டும் தான். உண்மையில் அது சரீரம் இல்லை. இந்த சரீரத்திற்குக் காரணமான பொருள்கள் அனைத்தும் ஈசுவரனுக்குச் சரீரமாகிவிடும். ஆகையால் இந்த ஜீவன் பிரிந்ததும் சரீரம் அழிந்துவிடும்.

இந்த பத்த சேதனர்களுக்கும் மற்ற சேதனர்களைவிட ஸ்திதியில் மாறுபாடு, இந்த உலகவாழ்க்கை மோக்ஷத்தை அடையும்வரையில் தொடர்ந்து இருப்பதாகும். இவர் களுடைய செய்கையில் வேற்றுமை, இவர்களை புண்ணியங் களையோ, பாபங்களையோ இரண்டுமில்லாமல் கண்கொட்டல் முதலியவைகளையோ செய்து கொண்டிருப் பதாகும்.

முக்தர்களுக்குத் தனிப்பட்ட ஸ்வரூபம் அவர்களுக்கு மோக்ஷத்திற்குத் துடங்கலான கர்மாக்கள் நீங்கி ஜீவர்களுடைய இயற்கையான ஸ்வரூபம் தோன்றுவது. ஜீவாத்மாவும் பரமாத்மாவைப்போல் ஒளி ஸ்வரூபமாயும் குற்றமற்றவனாயும் அளந்துமுள்ளவனாயும் இருப்பதுதான் ஸ்வரூபம். பக்தனாக இருக்கும்போது கர்ம ஸம்பந்தத்தினால் அந்த ஸ்வரூபம் மறைந்துவிடுகின்றது. மோக்ஷத்தை அடைந்தபோது கர்மங்கள் நீங்கி இயற்கையான ஸ்வரூபம் தோன்றுகின்றது. புதிதாக ஒன்றும் உண்டாவதில்லை.

இவர்களுடைய ஸ்திதி அல்லது கால வரம்பு தொடக்கம்

உண்டேயன்றி முடிவு கிடையாது. முக்தர்களுக்குள் ஒவ்வொருவருக்கும் உள்ள காலவரம்பு முற்பாடு, பிற்பாடுகளாலுண்டான ஏற்றச் சுருக்கம். முடிவு இல்லை என்பதில் எல்லோருக்கும் சமம்.

இவர்களுடைய செய்கைகளாவன அநாதியாக இழந்த பிறகு பெற்ற எம்பெருமானுக்கு தங்களிஷ்டம்போல் செய்யும் அளவற்ற பணிவிடைகள்.

நித்யர்களின் ஸ்வரூபம் அநாதியாகவே தங்களது இயற்கையான ஸ்வரூபத்துடன் எத்தடங்கலும் இல்லாமல் எப்பொழுதும் பெற்றிருப்பது. இவர்களும் எம்பெருமானுக்கு அடிமைகள்தான். இவர்களுக்கு ஸ்திதியில் மாறுபாடு அநாதியாக எம்பெருமானுக்கும் பிராட்டிக்கும் கைங்கர் யத்தை அனுபவிப்பது. இது எல்லா நித்யர்களுக்கும் பொது வாகையால் அவர்களுக்குள் ஒருவருக்கொருவர் எந்தவேறுபாடும் ஸ்திதியில் இல்லை.

இவர்களுடைய செய்கைகளில் ஒவ்வொருவருக்கும் அநாதியாகக் குறிப்பிட்ட கைங்கர்யம் அல்லது தொண்டு உண்டு.

அநந்தன், கருடன், விஷ்வக்ஸேனன் முதலிய நித்யர் களுக்குக் குறிப்பிட்ட தொண்டு இருப்பதால் நித்யர்களுக்கும், முக்தர்களுக்கும் விருப்பப்படி எல்லா கைங்கர்யத்திலும் அதிகாரம் உண்டு என்பது எப்படி பொருந்தும் என்றால் எம்பெருமானுடைய திருவுள்ளத்திற்குத் தக்கவாறு தனக்குக் கிடைக்கக்கூடாத கைங்கர்யம் ஒன்றும் இல்லை என்று கருத்து. மேலும் ஒருவர் செய்யும் கைங்கர்யததில் மற்றொருவர் போட்டிபோடுவது கிடையாது. ஒருவர் செய்யும் கைங்கர்யத்தால் எம்பெருமான் ஆனந்தமடை வதனைக் கண்டு தாங்களும் அவ்வாறே ஆனந்தமுடைவர். ஆகவே அவர்களுக்கும் அனுபவிக்கும் ஆனந்தததில்

கொஞ்சமும் வேறுபாடு கிடையாது. இதனால்தான் அனைவருக்கும் எல்லாவிதமான கைங்கர்யத்திலும் உரிமை உண்டு என்று கூறியிருப்பது.

தர்மபூத ஞானம் என்று ஒரு பதார்த்தம் உண்டு. அதுதான் ஆத்மாக்களுக்குள்ள அறிவு என்பது. அதனை அறிவில்லாத பொருளான அசித்தில் சேர்த்துக் கூற வேண்டும். அவ்விதம் கூறப்படவில்லை. அதற்கு காரணம் சேதநர் என்று கூறும் பொழுது அவர்களிடம் உள்ள ஒரு பொருளாகையால் இந்த தர்மபூத ஞானத்தை அந்த சேதனர் என்றும் சேர்த்துக் கூறிய தாகுமென்று கருத்து. இந்தத் தர்மபூதஞானம் என்பது பொருள்களை அறிய உதவி செய்யும்போது, அதாவது வெளிப்பொருள்களைக் காண்பிக்கும்பொழுது, தான் இருக்கும் இருப்பிடமான ஆத்மாவிற்கு மட்டும் அது தானே ஒளிக்கும். மற்ற சமயங்களில் அதாவது எந்த வெளிப் 'பொருளையும் காட்டாத போது அதற்குத் தானாக ஒளி கிடையாது. இந்த தர்மபூதஞானம் ஈச்வரனுக்கும் நித்தியருக்கும் என்றும் விபுவாக அதாவது எல்லா இடத்திலும் வ்யாபித்து இருக்கும். மற்ற ஆத்மாக்களுக்கு இந்த உலகத்தில் வரும்போது அவரவர் வினைக்குத் தக்கபடி பலவித ஏற்றமும் சுருக்கமும் உள்ளதாக இருக்கும். மோக்ஷத்தை அடைந்தவர்களுக்குப் பிறகு எப்பொழுதும் விபுவாகவே இருக்கும். இந்தத் தர்மபூத ஞானம் நித்யமானது. ஆரம்பமும் அழிவும் இல்லாதது.

இதனுடைய ப்ரவ்ருத்தி அல்லது செய்கை, வெளிப் பொருள்களைத் தெளிந்து அறியச் செய்வது. மேலும் சரீரத்தில் ஆத்மா இருக்கும்போது சரீரத்தையும் புலன் களையும் ஏவல் செய்வதாகும். பத்தனான ஆத்மாவுக்கு இது சுருங்கியும் மலர்ந்தும் இருக்கும். இது போகமென்ற ஒரு நிலையினையடையும். போகம் என்பது தனக்கு சௌகரியமான சுகமோ தனக்குக் கெடுதலான துக்கமோ,

இதை அனுபவிப்பது. ஆனால் எல்லா பொருட்களும் ஈசுவரனுடையது. ஆகையால் எல்லாமே அனுகூலமானவை. இதுதான் இவைகளின் ஸ்வபாபம். இருந்தாலும் சில சமயம் கெடுதலாகத் தோன்றுவது அவரவர் வினைப்பயனால்தான். ஈசுவரனுக்கும் நித்யருக்கும் மூக்தருக்கும் எல்லா பொருட்களும் அனுகூலமானவை. பக்தர்களுக்குக் காலத் திற்கும், அந்தந்த ஜீவ புருஷனுக்கும் இடத்துக்கும் ஏற்றவாறு கொஞ்சம் அனுகூலமாயும், எதிரியாகவும், இரண்டு மில்லாமலும் இருக்கும். பொருள்கள் இருப்பது பொருட் களில் இயற்கையானவையல்ல. அவர்வர் விதிப்படி ஈசுவரன் அதைக் காட்டுகின்றான். பலனைக் கொடுக்கின்றான்

ஜீவாத்மா, பரமாத்மா ஆகிய ஆத்மாக்களுக்குப் பொதுவான ஸ்வரூபம் தன் பொருட்டுதானே ஒளியாக இருப்பது. இவ்வாத்மாக்களின் ஸ்வரூபமான ஒளிக்கு பத்தர் உள்பட எவருக்கும் எக்காலத்திலும் ஏற்றமோ சுருக்கமோ கிடையாது.

எல்லா ஆத்மாக்களுடையதும் தர்மபூத ஞானம் அல்லது அறிவு வெளிப்பொருளைக் காட்டும்போது தான் இருக்கும் இடமான அந்த ஆத்மாவிற்கு மட்டும் தானே ஒளியாக விளங்கும்.

இங்கு தர்ம பூதஞானம் அறிவுதான். ஆத்மாக்களும் அறிவு அல்லது ஞானஸ்வரூபம்தான். ஞானம் என்பதும் தானே ஒளிக்கும் என்கிற இந்த இரண்டு ரூபமும் ஆத்மாக்களுக்கும் தர்மபூத ஞானத்துக்கும் பொது. தர்மபூத ஞானம் மற்றொன்றை ஒளிப்பித்துக் காட்டும், அதாவது அறிவிக்கும் இது இதற்குச் சிறப்பு. ஆத்மஸ்வரூபத்திற்கு இது கிடையாது. இதற்குப் ப்ரத்யக்த்வம் என்கிறது ஏற்றம்.

ஞானம் என்றால் ஏதாவது ஒன்றைப் பிரகாசப் படுத்துவது. ஆத்மஸ்வரூபம் த்ன்னைத்தான் ப்ரகாசப்

படுத்தும். தர்மபூத ஞானம் மற்ற பொருளைப் ப்ரகாசப் படுத்தும். ஆகையால் தன்னையோ, தன்னைத் தவிர வேறு பொருளையோ பிரகாசிக்கச் செய்வது ஞானம். தானே ஒளிப்பது என்பது என்றால் தன்னை அறியச் செய்ய மற்றொரு ஞானத்தை எதிர்பாராமல் தானாகவே பிரகாசிப்பது. இதுவும் ஆத்மாவிற்கும் தர்மபூத ஞானத் திற்கும் பொது. தர்மபூத ஞானத்தின் சிறப்பு தன்னைத் தவிர வேறு பொருள்களையும் தோன்றும்படி காட்டுவது. இது ஆத்மாவிற்குக் கிடையாது. ஆத்மாவிற்குச் சிறப்பு ப்ரத்யக்த்வம் என்று சொன்னோம். ப்ரத்யக்த்வம் என்றால் தன்னேயே தான் ஒளிப்பிக்கின்ற ஒன்று. ஏதாவதொன்றால் ஒளிப்பிக்கப்படுவது என்று பொதுவாகக் கூறுவதுபோல் தன் ஒளியால் தானே ஒளிப்பிக்கப்படுகிறது என்று தனித்துக் கூறுவதுதான் ப்ரத்யக்த்வம். இது தர்மபூத ஞானத்துக்குக் கிடையாது.

அசேதனங்கள் மூன்று வகைப்படும். இம்மூன்றும் வேறு ஒருவருக்கே தோன்றக் கூடியவை. இவைகளுக்கு அறிவு கிடையாது. பிறருக்கேதான் தோன்றுவதென்றால் தனக்குத் தானே தோன்றாது என்று கொள்ளவேண்டும். இவ்வறிவில் லாமையும், தனக்குத்தான் தோன்றாமையும் தர்மபூத ஞானத்துக்கும் இவைகளுக்கும் மேல் பொதுவாகும். மூன்று அசேதனங்களாவன: த்ரிகுணம், காலம், சுத்தஸத்வம், இவைகளில் த்ரிகுணமும் காலமும் ஜடங்கள். ஜடம் என்றால் தானே ஒளியாகாமலிருப்பது. சுத்தஸத்வமும் ஜடமென்று சிலர் சொல்வது உண்டு. ஆனால் பாஞ்சராத்ர சாஸ்த்திரப்படி சுத்தஸத்வம் ஞானம் அல்லது ஒளிமயமாகக் கூறப்பட்டிருப்பதால் இது தானே ஒளிக்கும் பொருளாகவே கூறுகின்றனர். இந்த சுத்த ஸத்வத்திற்கும் அறிவு இல்லாமையால் அசேதனத்தில் இதைச் சேர்த்து உரைக்கப்பட்டது. இம்மூன்று அசேதனங்களும்

ஸர்வேச்வரனுடைய விருப்பப்படி பலவிதமான மாறுபாடுகளை அடையும்.

இம்மூன்றில் த்ரிகுணத்ரவ்யம் மூன்று குணங்களுக்கு இருப்பிடமாகவும் இருக்கும். இது எப்பொழுதும் பல மாறுபாடு அடைந்துகொண்டே இருக்கும். மூன்று குணங்களாவன: ஸத்வம், ரஜஸ்ஸு, தமஸ்ஸு. இம் மூன்றும் ஒரே மாதிரி நிலைமையை அடைந்தால் அதுதான் பிரளயம் அல்லது முழுஅழிவு. இவைகள் ஒன்றுக்கொன்று அளவில் மாறுபடும்போதுதான், அதாவது ஒன்று அதிகமாவும் மற்றொன்று குறைவாகவும் இருந்தால் உற்பத்தியும் நிலைமையும் ஏற்படுகிறது. ஏதாவது ஒரு குணம் அதிகப்பட்டு மற்றவை குறையும்போது உலகத்தில் சிருஷ்டியும் அதன் நிலையும் உண்டாகும்.

அசித்து ப்ரக்ருதியைச் சேர்த்து இருபத்துநான்கு தத்துவங்களாக சாஸ்திரங்கள் கூறுகின்றன. இதில் ப்ரக்ருதி என்பது எங்கும் நிறைந்திருக்கிறது. அதாவது மூக்கால்பாகம் சுத்த ஸத்வமும் கால்பாகம் ப்ரக்ருதிமண்டலமுமாகும். இந்த கால் பாகத்தில் ப்ரக்ருதி எங்கும் நிறைந்திருக்கும். இதில் எந்த பாகத்தைக் கொண்டு ஈசுவரன் சிருஷ்டிக்க வேண்டுமென்று நினைக்கின்றானோ அந்த பாகத்தில் குணங்களுக்குள் ஏற்றத் தாழ்வு ஏற்பட்டு "மகான்" என்கிற தத்துவம் உண்டாகின்றது. அதன் பிறகு அகங்காரம் முதலியவைகளும் உண்டாகின்றன.

இருபத்துநான்கு தத்துவங்களான - ப்ரக்ருதி, மஹான் அகங்காரம் - சப்தம் ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் ஆகிய ஐந்து தன்மாத்திரங்கள் - ப்ருதிவி, அப்பு, தேஜஸ்ஸு, வாயு, ஆகாயம் என்கிற ஐந்து பூதங்கள் - கண், மூக்கு, நாக்கு, தோல், காது, ஐந்து ஞான இந்திரியங்கள் அல்லது அறிவு புலன்கள் - கை, கால், வாய், பாயு, உபஸ்தம் என்கிற ஐந்து கர்மேந்திரியங்கள் - மனம் ஆகிய 11, இந்த தத்துவங்களின்

வகுப்புகளையும் அவைகளின் தேவதைகளையும் அந்தந்த உபாஸனம் செய்கின்றவர்கள் தெரிந்து கொள்ள வேண்டும். ஆத்மா இவைகளை காட்டிலும் வேறுபட்டவன் என்பதை நாம் கட்டாயம் உணரவேண்டும்.

இந்த த்ரிகுணம் என்கிற அசித்துக்குத் தனிப்பட்ட செய்கைகள், இவ்வுலகத்தில் கட்டுண்டு இருக்கின்ற ஆத்மாக் களுக்கு இவ்வுலக வாழ்க்கைக்கும் மோக்ஷத்தை அடைவதற்கும் பல மாறுதல்களை ஏற்றுக்கொண்டு சரீரம் இந்திரியம் இவைகள் ரூபமாகப் பல செய்களைச் செய்விப்பதாகும். இதில் ரஜஸ்ஸூ, தமஸ்ஸூ இவைகளைக் கொண்டு பத்தர்களான ஆத்மாக்களுக்கு உண்மையை மறைத்துக் தவறான அறிவினை உண்டு பண்ணி இவ்வுலக இன்பத்தில் ஈடுபடும்படி செய்யும். இதுவே ஸத்வகுணத்தை மேம்படுத்தி நல்லறிவை கொடுத்து உண்மையை உணரச் செய்து மோக்ஷத்தை அடையவும் உதவுகின்றது. இச் செயலெல்லாம் ஈசுவரனுடைய விளையாட்டுக்கு உதவியாக இருக்கும்.

சுத்தஸத்வம் என்பது மொத்தத்தில் மூக்கால் பாகம். இது ரஜஸ்ஸூம், தமஸ்ஸூம், கலவாமல் சுத்தமான ஸத்வகுணம் உள்ள இடம். இந்த சுத்த ஸத்வத்திற்கு நிலைமையில் உள்ள சிறப்பு இது சிலதில் நித்யமாகவும் சிலதில் நீடித்திராமலும் இருக்கும். ஸ்ரீவைகுண்டத்திலுள்ள திருமாமணி மண்டபம், கோபுரம் முதலியவைகள் ஈச்வரனுடைய பரரூபம், வ்யூஹரூபம் முதலிய திருமேனிகள் நித்யர்களான அநந்தன், கருடன் முதலியவர்களுடைய திருமேனிகள் நித்யமானவை, நித்யருடையவும், முக்தருடையவும், ஈச்வரனுடையவும் அந்தந்த சந்தர்ப்பங்களில் உண்டாகும். அவைகள் நிலைத் திருக்காதவை. தன் தந்தையைப் பார்க்க வேண்டுமென்றும் இப்படி சில விருப்பங்கள் இந்த முக்தர்களுக்கு உண்டானால் அது நடக்கும் என்று வேதம் கூறுகின்றது. அவ்வாறு ஏற்படும்

ரூபங்கள் நிலைத்திருக்க மாட்டாது. இவர்களுடைய விருப்பப்படி பல ரூபங்கள் இந்த சுத்தஸத்வத்திற்கு உண்டாகுமானால் அவைகள் ஈசுவரனுடைய போகங்களுக்குப் பயன்படும். அவன் ஸ்வாமி. இது அவனுடைய ஊழியனான ஆத்மாவிற்கு அவனுடைய பணிவிடைகளுக்கு உபயோகமாக இருக்கும்.

காலமும் அசித்துதான். இதற்கு அறிவு கிடையாது. இது எங்கும் பரவி இருக்கும். விபு என்று சொல்லப்படும்.

அடுத்தப்படியாகக் காலம் மற்றொரு ஜடம் அல்லது அசித்தான பொருள். இதன் தனிப்பட்ட தன்மை ஜடமாயும் எங்கும் பரவி இருப்பதாயும் இருப்பதாகும். இதன் இருப்பு ஒரு கால அளவு இல்லாததால் எப்பொழுதும் உள்ளது. இதன் செயல் நாழி, நாள் முதலிய பல பிரிவுகளால் சிருஷ்டி முதலியவற்றிற்கு பயன் படும்.

இப்பொழுது கூறப்பட்ட பிரக்ருதி, காலம், சுத்த ஸத்வமாகிய மூன்றுமே இயற்கையில் எப்பொழுதும் உள்ளவை. இவைகள் நித்யமாக இருந்தாலும் வேறு பெயரை அடைய தகுந்த ஒருவிதமான நிலைமையோடு கூடியதாக இருப்பதால் சிலவற்றை அநித்யம் அல்லது அழிவுள்ளதாகக் கூறுவது. இவைகள் வெள்ளத்தில் தண்ணீர் ஓடுவதுபோல் அழிவற்றதாகச் சொல்லுவது. அதாவது முன்னுள்ள உருவம்போல அழிந்தபிறகு மற்றொரு உருவம் பெறுவது முன் கல்பகத்தில் மஹத், அஹங்காரம் முதலியது இருந்ததுபோல் அடுத்த கல்பகங்களிலும் உள்ளன. இவ்வெல்லாப் பொருள்களுடையவும் ஸ்வரூபம், நிலைமை, செய்கை இவைகளில் ஈச்வரனுக்கு அடங்கியுள்ளது. ஈசுவரனிருப்பதையும் அவனுடைய எண்ணத்தையும் பொருத்துதான் இப்பொருள்களின் ஸ்வரூபம் முதலியவை இருக்கும். ஆகையால் எல்லாப் பொருள்களும் இயற்கையில் அனுகூல

மாகவே ஈச்வரனால் வைக்கப்பட்டிருக்கின்றன. இதனால் ஈச்வரனுக்கும், நித்யருக்கும், முக்தருக்கும் எல்லாம் அனுகூலமானவை. பத்தர்களுக்கே இவைகள் அவரவர்கள் வினைப்படி காலத்திற்கு தக்கவாறும் சிறிது அனுகூலமாகவும் எதிரியாகவேதான் இருக்கும். ஆனால் பத்தர்களுக்கும் தன்தன் ஆத்மஸ்வரூபம் அனுகூலமாகவே ஈச்வரனால் எண்ணப்பட்டிருக்கின்றது. தான், தனது என்கிற எண்ணத்தால் தனக்கென்று பொருள்களை விரும்பினால் அவர்கள் அவனுக்கு எதிர்தட்டாக நிற்கும். சரியான அறிவு பிறந்து ஈச்வரனுடையது என்று தோன்றுமாகில் எல்லாம் இவனுக்கு அனுகூலமாகும்.

ஈச்வரனுடைய ஸ்வரூபம் முதலியவைகளை இப்பொழுது காண்போம். எல்லாப் பொருள்களுடைய ஸ்வரூபம் முதலியவை ஈச்வரனுக்கு அடங்கியது என்று சொல்லப்பட்டது. இவனுடைய ஸ்வரூபத்தை அறிவதற்குத் தனிப்பட்ட குணங்கள் உண்டு. அவைகள் ஸத்யத்வம் முதலியவை. ஆகவே இவனுடைய ஸ்வரூபம் ஸத்யமாயும் அறிவாயும், அனந்தமாயும், ஆனந்தமாயும், அமலமாயும் இருக்கும். இவைகள் தவிர மற்ற பல குணங்களும் இவனுடைய ஒப்பற்ற திருமேனி முதலியவைகளும், இவனை முன்கூறிய குணங்களால் அறிந்து கொண்டபிறகு அவனுக்கு இவைகளும் உண்டு என்று அறிவிக்கும். இவனுடைய குணங்களில் அறிவு, பலம், ஐச்வர்யம், வீரியம், சக்தி, தேஜஸ்ஸு என்கிற ஆறு குணங்கள், இவன் எல்லோருக்கும் மேம்பட்டவன் என்பதைக் காட்டப் பயன் படுகின்றன. ஸௌலப்யம் அல்லது அன்புள்ளவனாயிருப்பதும், பிறருடைய குணங்களையே மதிப்பது என்கிற வாத்ஸல்யமும் அவன் மிகவும் சுலபமாக அடையக்கூடியவன் என்பதைக் காண்பிக்கும். இந்த எல்லா குணங்களும் எல்லாக் காலத்திலும் இவனுடைய ஸ்வரூபத்திலேயே உள்ளவை.

ஆனால் சில ரூபங்களில் சில குணங்களை மட்டும் கூறப்படுவதெல்லாம் அவரவர்கள் உபாஸனத்துக்காச் சிலவற்றை மட்டும் எடுத்துக் கொள்ளுவதற்காகவே தவிர எல்லா குணங்களும் எப்பொழுதும் ஈச்வரனுடைய ரூபத்திலுள்ளவை. ஈசுவரன் பரம், வ்யூஹம், விபவம், அர்ச்சை, அந்தர்யாமி என்று ஐந்து விதமாகத் தன்னைக் காட்டுகிறான். பரம் என்பது ஸ்ரீவைகுண்டத்திலுள்ள ரூபம், இதில் முன்கூறிய ஆறு குணங்களும் அறியத்தக்கவை.

வ்யூஹம் நான்கு என்றும் மூன்று என்றும் இரண்டுவிதமாகக் கூறப்பட்டுள்ளது. வாஸுதேவன், ஸங்கர்ஷணன், அநிருத்தன், ப்ரத்யும்னன் என்று நான்கு வ்யூஹம். ஆனால் பரவாஸுதேவனுக்கும் வ்யூஹவாஸு தேவனுக்கும் குணம் முதலியவைகளிலும் ரூபத்திலும் உபாஸனம் செய்ய வேண்டியதில் வேற்றுமை இல்லாமையால் மூன்று வ்யூஹம் என்பது பொருந்தும். வ்யூஹவாஸு தேவனுக்கும் ஆறு குணங்கள். ஸங்கர்ஷணனுக்கும், அறிவு, பலம் என்கிற இரண்டு குணங்களும் ப்ரத்யும்னனுக்கு ஐச்வர்யமும் வீர்யமும். அநிருத்தனுக்கு சக்தியும், தேஜஸ்ஸும் ஆக ஆறு குணங்களில் இரண்டிரண்டாகப் பிரித்து இந்த மூன்று வ்யூஹரூபங்கள்.

இவைகள் தவிர கேசவன், நாராயணன் முதலிய பன்னிரண்டு வ்யூஹரூபங்களும் அவைகளில் ஒவ்வொரு ரூபத்திற்குத் தனித்தனி குணங்கள் முதலியவைகள் உண்டு. இவைகள் எல்லாம் ஸ்ரீவைகுண்டத்திலேயே உள்ள ரூபங்கள்.

விபவங்கள் முப்பதுக்கு மேற்பட்ட ரூபங்கள். அவைகளில் மத்ஸ்யம் முதலிய பத்து அவதாரங்கள் சில முக்கியமான உபயோகங்களைப் பெற்றிருந்ததால் சிறப்பாகக் கூறப்பட்டிருக்கின்றன.

இந்த விபவம் என்று கூறப்படும் அவதாரங்களில் ஈச்வரன் அந்தந்த கார்யத்திற்குத் தக்கபடி வேண்டிய குணங்களை வேண்டும்போது மறைத்தும். வேண்டியபோழ்து வெளிப்படுத்தியும் நடத்துவான். அவதாரத்திலும் உட்பிரிவுகள் உண்டு. க்ருஷ்ணாவதாரத்தில் பல ரூபங்கள் கூறப்பட்டிருக்கின்றன. இப்படியே பல அவதாரங்களையும் அறியவேணும். சில ஜீவர்களிடம் ப்ரவேசித்து சில முக்கியமான காரியங்களை நடத்துவதும் அவதாரமாகவே கொள்ளவேண்டியது.

அர்ச்சை என்பது கோவில்களில் பிம்பங்களாக எழுந்தருளச் செய்து இருக்கும் ரூபங்கள். பரரூபம், வ்யூஹம், விபவம் இந்த ரூபங்களை வைத்து எம்பெருமானை சேவிக்க விரும்புகிறவர்களுக்காக விக்ரகங்களாக எழுந்தருளச் செய்திருப்பதுதான் அர்ச்சை. எழுந்தருளப்பண்ணி இருக்கும் பிம்பம் அல்லது விக்ரஹத்தில் அப்பிம்பம் எவ்வளவு இருக்கின்றதோ அவ்வளவு அளவில் எம்பெருமான் தான் அங்கு வந்து தங்குகிறார்.

சிறிய உருவத்துடன் ஈச்வரன் எல்லோருடைய உள்ளத்துக்குள்ளே இருப்பதை அந்தர்யாமி என்கிறது. எல்லோருடைய உள்ளத்திலும் இருக்கும் இந்த உயர்ந்த ஆத்மாவின் உருவத்தைத் த்யானம் செய்பவர்களுக்கு இது உதவியாக இருப்பதால் அந்தர்யாமி என்று சொல்லப்பட்டது.

இப்பரரூபம் முதலிய ஐந்து ரூபங்களுமே சுத்தமானவை. இவைகள் கர்ம ஸம்பந்தமில்லாதவை. ஸ்ரீவைகுண்டத்தில் சுத்தமான ஸத்வமாக இருப்பது போலவே உள்ளது. இந்த ப்ரக்ருதி ஸம்பந்தமுள்ளதல்ல. இந்த எல்லா அவதாரங்களும் உண்மையானவை. ஈச்வரன் இவ்வுலகத்தில் பல அவதாரம் செய்தாலும் அவனுடைய அறிவு முதலியவைகள் குறைவுபடுவதில்லை. அவனுடைய திருமேனிகள் சுத்த ஸத்வமயமாக ஸ்ரீவைகுண்டத்திலிருப்பது போன்றதுதான்.

இம்மனித சரீரம் போன்றதல்ல. ஈச்வரன் விரும்பும்போது எடுத்துக்கொள்ளும் உருவங்கள் இல்லை. தர்மத்தை ரக்ஷிக்க வேண்டிய தேவை ஏற்பட்டாலும் சாதுக்களைக் காப்பாற்ற வேணுமாயின் அக்காலத்தில் இவ்வவதாரங்கள். இந்த அவதாரத்தின் உண்மையை அறிந்தவனுக்கு மறுபிறப் பில்லாமல் மோக்ஷம் கிட்டும் என்று கீதையில் கூறப் பட்டுள்ளது. இந்த உண்மையை அறிவதால் ப்ரபத்தியை மோக்ஷத்தைப் பெறுவதற்கு பண்ணுகின்றவனுக்கும், எம் பெருமானுடைய குணங்களின் பெருமையை அறிவதன் மூலம் அவனுக்கு நம்பிக்கையைத் திடப்படுத்தும்.

அர்ச்சாவதாரமும் மோக்ஷத்தைக் கொடுக்கும் என்பதை சௌநகர் "அழகான பிம்பத்தைப் பொன், வெள்ளி முதலியதால் அமைத்து அந்த பிம்பத்தை வணங்கியும், அர்சித்தும், பூஜித்தும், தியானம் செய்தும் பாபங்களை ஒழித்துக் கடைதேறுகிறான்" என்று கூறி இருக்கின்றார். ஆழ்வார்களும் இவ்வுண்மைஎய அறிந்து எம்பெருமானைப் பலவாறு தொழுது அவனை நேரில் கண்டு உயர்ந்த கதியைப் பெற்றார்கள். ஈச்வரன் உகந்து உலகத்தை ஆக்கல் முதலிய வைகளைச் செய்து மோக்ஷத்தையும் கொடுக்கிறான்.

இந்த எம்பெருமான் எப்பொழுதும் பிராட்டியுடன் கூடியவனாக இருப்பான். எம்பெருமான் தவறு செய்தவர் களைத் தண்டிப்பதைத் தனக்கு வைத்துக்கொண்டான். பிராட்டி, எம்பெருமானை அடைவதற்கு உதவி செய்பவளாக இருக்கும் புருஷகாரத்வம் என்பதைத் தனக்கு 'வைத்துக்கொண்டாள். எம்பெருமானுக்கும், பிராட்டிக்கும் எல்லா குணங்களும் ஒரே மாதிரியாக இருந்தாலும் எம்பெருமான் ஆண்களுக்கேற்ற சில குணங்களைத் தன்னிடமும் பெண்களுக்கேற்ற குணங்களைப் பிராட்டிக் குமாகப் பங்கிட்டுக்கொண்டவாறு காணப்படும்.

இவ்விதமாக மூன்று தத்துவங்களை அறிய வேண்டும்.
தத்வத்ரயாதிகாரம் முற்றிற்று.

## பரதேவதா பாரமார்த்தியாதிகாரம்

அல்லது

## பரதேவதையைப் பற்றின உண்மை

பொதுவாக ஈச்வரனைப்பற்றி முன் கூறியபடி அறிந்தாலும் உயர்ந்த தெய்வம் யார் என்று அறிய வேண்டியது அவசியமாகும். இதை அறியாவிடில் ஒரே தேவதையைத் தொழுதால்தான் தாமதமில்லாமலும் வேறு ஒருவரை அடுக்காமலும் மோக்ஷம் கிட்டும். இல்லையேல் அதற்கு வழி இல்லாமல் போய்விடும். ஆகவே ஈச்வரன் இன்ன தேவதை என்று அறிவது முக்கியம்.

அவ்விடத்தில் சேதனம் என்றும் அசேதனம் என்றும் இவைகளுக்குள் பிரிவு பிரமாணங்களால் தீர்மானிக்கப் பட்டதால் எல்லாம் பிரும்மம் என்றும் பிரும்மம் ஒன்றுதான் என்கிற கொள்கை ஒப்புக்கொள்ளப்பட மாட்டாது.

ஜீவாத்மாவும் ஈச்வரனும் ஒன்று என்பதும் சரி இல்லை. ஜீவர்களுக்குள்ளும் அவரவர்கள் சுகம், துக்கம் முதலிய வைகளில் உள்ள வேற்றுமையால் தேவர்கள் முதலிய எல்லா ஜீவர்களுக்கும் ஒவ்வொருவருக்குள்ளும் பேதம் உண்டு. ஆகையால் பிரும்மா, ருத்திரன் முதலிய தேவதைகளில அந்தர்யாமியாகிய ஈச்வரன் ஒருவனேயாகிலும் அவரவர் வேறுபட்டவர்கள் தான். அவர்கள் எல்லாம் ஒன்று என்கிற கொள்கையும் சரியன்று. பிரும்மாவும், ருத்திரனும் மற்ற தேவதைகளும் எம்பெருமானால் சிருஷ்டிக்கப்பட்டவர் களாகையாலும், வினையின் பயனை அனுபவிக்கக் கூடியவர்களாகையிலும், இது பல உண்மையான நூல்களால் கூறப்படுவதாலும், ஸ்ரீமந்நாராயணனே இவர்கள் எல் லோருக்கும் காரணமானவன் என்று கூறப்படுவதாலும் அவனே அழிவற்றவன் என்றும் கூறப்படுவதாலும், பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் என்கிற மூன்று மூர்த்திகளும் சமமானவர்

என்றோ, மூவரும் ஒன்றே என்றோ, மூன்று மூர்த்திகளைத் தவிர இவர்களுக்கு மேம்பட்டவன் ஒருவன் உண்டு என்றோ, ஸ்ரீமந்நாராயணனைத் தவிர பிரும்மாவோ, ருத்திரனோ ஈச்வரன் என்றோ சொல்லுகின்ற கொள்கைகள் எல்லாம் ஒப்புக்கொள்ளக் கூடியவையல்ல.

ஸ்ரீமந்நாராயணன் ஒருவன்தான் யாவருக்கும் ஈச்வரன். பிரும்மாவோ, ருத்திரனோ மற்ற யாரும் இல்லை என்பதற்குப் பல அத்தாக்ஷிகளும் பிரமாணங்களும் இருக்கின்றன.

பிரும்மதேவனும் ருத்ரனும் ஸர்வேச்வரனான நாராயணனால் உண்டாக்கப்பட்டவர்கள் என்பதைப் புராணங்களில் அந்த பிரும்மாவினுடையவும், ருத்திரனுடையவும் மொழிகள் மூலம் கூறப்பட்டிருப்பதைச் சாணலாம். இவர்களும் கர்மாக்கள் அல்லது விணைகளுக்குட்பட்டுச் சில செய்கைகள் மூலம் எம்பெருமானைப் பூஜித்து தம்தம் பதவிகளைப் பெற்றார்கள் என்றும் கூறப்பட்டிருக்கிறது. மேலும் இவர்கள் எம்பெருமானுக்குக் கட்டுப்பட்ட மாயை என்கிற ப்ரக்ருதிக்கு வசப்பட்டவர்கள் என்றும், ஸத்வம், ரஜஸ்ஸு, தமஸ்ஸு என்கிற மூன்று குணங்களுக்கும் அடங்கியவர்கள் என்றும் இவர்களுடைய அறிவுக்கு சுருக்கமும், மலர்ச்சியும் உண்டு என்றும் பல புராணக்கதைகள் கூறுகின்றன. இந்த பிரும்மாவும், ருத்திரனும் தங்களுக்குள் அந்தர்யாமியாக இருக்கின்ற எம்பெருமான் கொடுத்த அறிவு முதலியவைகளைக் கொண்டு அவனுக்கு ஏவல் தேவைகளைச் செய்கிறார்கள் என்றும் கூறப்பட்டிருக்கிறது. இவர்கள் சுபர்களும் அல்ல. ஆச்ரயிக்கக் கூடியவர்களும் அல்ல. அதாவது உபாஸனம் செய்பவர்களின் பாவத்தைப் போக்கக் கூடிய தன்மையும் இவர்களுக்கு இல்லை. இவர்கள் த்யானத்திற்குப் புலப்படக் கூடிய தன்மையும் இல்லாதவர்கள். இவ்விதம் பராசரர், சுகர்,

சௌநகர் முதலியவர்கள் புராணங்களில் கூறி உள்ளார்கள். இவர்கள் எம்பெருமானை அடுத்து இருப்பவர்கள் என்றும், எம்பெருமான் யாருக்கும் கீழ்ப்படிந்தவர் இல்லை என்றும் பகவானே அருளிச்செய்தும் இருக்கிறார்.

எல்லா உலகங்களும் எம்பெருமான் கட்டளைக்குக் கீழ் பட்டவைகள் என்று கூறுமிடத்தில் பிரும்மாவும், ருத்திரனும் அப்பொருள்களுடன் சமமாகக் கூறப்பட்டு அவர்களும் எம்பெருமானுடைய ஊழியர்களாகவும் சொல்லப் பட்டார்கள். எல்லாப் பொருட்களும் ஈச்வரனுக்கு உடல், ஈச்வரன் இவைகளுக்கு ஆத்மா என்றும் பிரும்மாவையும் ருத்திரனையும் இவருக்கு உடல்களாகவும் கூறப்பட்டுள்ளது. இவர்கள் எம்பெருமானுக்கு ஊழியர்கள். எம்பெருமான் இவர்களுக்கும் ஸ்வாமீ என்பதை மந்திர ராஜபதஸ் தோத்திரத்தில் எல்லாம் அறிந்த ருத்திரன் தானே சொல்லியும் இருக்கிறார்.

எம்பெருமானுக்கு சமமானவரோ மேம்பட்டவரோ ஒருவரும் கிடையாது; அவர் நிகரற்றவர் என்று பல இடங்களிலும் புராணங்கள் முதலியதில் கூறப்பட்டுள்ளது. கருவிலிருக்கும்போதே எம்பெருமான் கடாக்ஷிக்கும் புண்ணியம் செய்து பிறக்கும்போது அவனால் கடாக்ஷிக்கப் பட்டவன் மோக்ஷமடையும் நோக்கமுள்ளவனாவான் என்றும் பிரும்மாவாலோ, ருத்திரனாலோ பார்க்கப் படுபவன். ரஜோ குணத்தோடும், தமோகுணத்தோடும் கூடி கீழ் நிலைமையில் இருப்பர் என்றும் இவர்களை அடுத்திருப்பவரைப் பற்றியும் சொல்லப்பட்டுள்ளது. மோக்ஷத்தை விரும்புகின்றவர்கள் பிரும்மாவையோ, ருத்திரனையோ உபாஸிக்கக் கூடாதென்றும், இவர்களுக்கும் காரணமான ஸர்வேச்வரனையே அவர்களும் மற்றுமுள்ள மோக்ஷத்தை அடைய விரும்புகிறவர்களும் உபாசிக்க வேணும் என்றும் சொல்லப்பட்டது.

சில இடங்களில் புராணங்களில் பிரும்மாவையும், ருத்திரனையும மோக்ஷத்தைப் பெற உதவியாகக் கூறப் பட்டிருந்தாலும், அவர்கள் ஆசிரியர்களைப் போல் அறிவைக் கொடுக்கக்கூடியவர்கள் என்று கருத்து. அவர்களை அறிவு அல்லது ஞானத்தைப் பெற உபாஸித்தாலும் எம்பெருமானோடு சமம் என்கிற எண்ணத்தோடு தொழுதால் கெடுதலே உண்டாகும். எம் பெருமானுடைய பக்தர்கள் என்றேதான் தொழவேண்டும்.

எம்பெருமான் ஒருவனை சிக்ஷிக்கத் தகுந்தவனாக நினைத்தால் அவனை பிரும்மாவோ ருத்திரனோ மற்ற எந்த தேவதையும் ரக்ஷிக்கமுடியாது என்று ஸ்ரீமத் ராமாயணத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது. எம் பெருமான் ஒருவனைக் காப்பாற்ற வேண்டும் என்று நினைத்தால் அவனைக் காப்பாற்றத் தன்னைச் சேர்ந்தவர்கள் தடுத்தாலும் அவர்களுக்குத் தக்கவாறு எடுத்துரைத்தும், அவனுக்கு எதிரிகளையும் அழித்துக் காப்பாற்றி விடுவான். விபீஷணன் சரணடைந்த போழ்து அவனைச் சேர்க்கக்கூடாதென்று எதிர்த்த சுக்ரீவனுக்குத் தக்க பதில் சொல்லி அவனை விபீஷணனுக்கு அனுகூலமாக இருக்கும்படி செய்து அவனுடைய எதிரியான இராவணனை வீழ்த்தி விபீஷணனை உடன் சேர்த்துக்கொண்டு அவன் கோரினதை அவனுக்குக் கொடுத்து எம்பெருமானான ஸ்ரீராமன் அவனைக் காப்பாற்றியது ஒரு சான்றாகும்.

எம்பெருமானைத் தவிர வேறு தேவதைகளை அண்டினால் மோக்ஷம் நீங்கலாகச் சிறிய பயன்கள் விரைவில் கைகூடும். அதுவும் எம்பெருமான் அவர்களுக்குக் கொடுத்த பெருமையின் காரணமாக ஏற்படுவதால் எம்பெருமானுக்குக் கீழ்ப்பட்டுதான் நடக்கிறது. எந்த விதத்திலும் மோக்ஷத்தை எம்பெருமானைத் தவிர மற்ற தேவதைகள் மூலம் பெற முடியவே முடியாது.

ஸர்வேச்வரனான எம்பெருமானை அடைந்தால் பிரும்மா முதலானவர்கள் அளிக்கும் செல்வத்தைவிட மேன்மையான ஐச்வர்யம் முதலியதையும் பெறமுடியும். எம்பெருமானிடம் செல்வத்தை விரும்பி அடைந்தாலும், கங்கையில் விடாய்த்ர ஒருவன் குளித்தாலும் அவனுடைய பாவம் கழிவது போல், இவனுக்கு எம்பெருமான் கிருபையால் பாவமும் நீங்கி ஸத்வகுணம் மேலிட்டு, ஜனகர், அம்பரீஷன், கேகய மஹாராஜன் பெற்றது போல் மோக்ஷத்தில் ருசி உண்டாகி மோக்ஷத்தையும் பெற முடியும். ஆனால் நேராக மோக்ஷத்தையே விரும்பி எம்பெருமானை அடைகிற வனுக்கும், ஐச்வர்யத்தில் ஆசைப் பட்டு பின்பு மோக்ஷம் அடைகிறவனுக்கும், காலத்தில் வித்யாஸமுண்டு. மோக்ஷத்தையே விரும்பி அதற்கான உபாயத்தை அனுஷ்டிக் கின்றவனுக்கு, கடைப்பிடிக்கின்றவனுக்கு தாமதமின்றி மோக்ஷம் கிட்டும். ஐச்வர்யத்தையும் விரும்பி மோக்ஷம் அடைய விரும்புவனுக்குக் கர்மயோகம், ஞானயோகம் என்கிறவாறு நாளடைவில், தாமதித்துத்தான் பக்தியில் இரங்கி மோக்ஷத்தைப் பெறமுடியும். ப்ரபத்தி செய்கின்றவனுக்கு இவன் விரும்பும் காலம் தவிர, வேறு தாமதம் மோக்ஷத்தை அடைவதில் இல்லை. இதனால் பக்தியோகம் செய்கின்றவர்களுக்கு அதில் கஷ்டம் அதிகமிருந்தாலும் தாமதித்துத்தான் பலன் கிடைக்கு மென்றும், ப்ரபத்தி பண்ணுகிறவர்களுக்குத் தாமதமின்றி பலன் உண்டு என்றும் தெரிந்து கொள்ளவேண்டியது. கஷ்டப்பட்டு செய்யும் உபாயத்திற்குத் தாமதமான பலனும், சுலபமான உபாயத்திற்குச் சீக்கிரம் பலன் என்பதும் ஸர்வேச்வரனுடைய கட்டுக்கடங்காத போக்கின் காரணமாக நடக்கிறதென்று சாஸ்திரங்கள் கூறுவதால், சாஸ்திரத்தில் நம்பிக்கை உள்ள நாம் ஒப்புக்கொள்ள வேண்டும். இவ்வுண்மையை அறியாதவர்கள்தான் எம்பெருமானைத் தவிர வேறு தெய்வத்தைத் தொழுவார்கள்.

ஆனால் எல்லா தேவதைகளும் எம்பெருமானுக்கு உடல் தானாகையால் அவர்களுக்குச் செய்யும் பூசை முதலியதும், அரசன் உடலில் பூசும் சந்தனம் அவனது ஆத்மாவை திருப்தி செய்து வைப்பது போல், எம்பெருமானுக்குத்தான் உண்மையில் போய்ச்சேரும். இருப்பினும் இப்பூசைகள் முறைப்படி எம்பெருமானுக்குச் செய்யப்படாததால் அது பலனைக் கொடுக்காது. சிறிய பலன்களை விரைவில் பெற விரும்பி மற்ற தேவதைகளைத் தொழுபவர்கள் அத் தேவதைகள் எம்பெருமானுடைய உடல் என்றறிந்து செய்தால் பலன் கிட்டும், இவ்வுண்மையை அறிந்து எம் பெருமானை, மோக்ஷம் தவிர மற்ற பலன்களுக்காகவும் செய்தால், அப்பலன்கள் மற்ற தேவதைகளால் அளிக்கப் படுவதைவிட மேம்பட்டதாக இருக்கும், மோக்ஷத்தையே நாடி எம்பெருமானைப் பற்றினார்க்கும் உடல் நலம், செல்வம், சுகம் இவையனைத்தையும் தானே கொடுப்பான். மோக்ஷமும் கிடைக்கும். அதற்குச் சிறந்த சான்றாகத் திகழ்பவர் குலசேகர ஆழ்வார்.

இவ்விதமாக எம்பெருமானுக்கு பிரும்மா, சிவன் இவர்களைவிட உள்ள வேறுபாட்டையும், ஏற்றத்தையும் ஆழ்வார்கள் பல இடங்களில் அருளிச் செய்துள்ளார்கள். எம்பெருமான்தான் ஸர்வேச்வரன் - உயர்ந்த தேவதை என்கிற உண்மையை திருமந்திரத்தில் முதல் எழுத்தான அகரத்திலும் நாராயணன் என்கிற சொல்லிலும், த்வய மந்திரத்தில் ஸ்ரீமந்நாராயண, ஸ்ரீமதே நாராயணாய என்கிற இடங்களிலும், சரமச்லோகத்தில் "மாம்" "அஹம்" என்கிற சொற்களாலும் அநுஸந்திக்க வேண்டும்.

இவ்வாறு பரதேவதையைப் பற்றின உண்மையை அறிந்தவனுக்குத்தான் எம்பெருமானைத் தவிர வேறு ஒருவரையும் சரணம் அடையாமல் அவ்வரையை சரண் அடைவது நிறைவேறும். எம்பெருமானுடைய அடியார்

களையும் தொழுவது அவசியம் என்று ஆழ்வார்கள் கூறியுள்ளார்கள்.

எம்பெருமானைப் பிராட்டியுடன் சேர்த்தே, இருவரையும் சமமாகவே தொழவேண்டும். அவர்கள் இருவருமே ஆழ்வார்களாலும், விஷ்ணு புராணத்திலும் சமமாகச் சேர்ந்து தொழ வேணுமாய்க் கூறப் பட்டுள்ளார்கள்.

## மோக்ஷத்தில் விருப்பப்படுவது

இதுவரையில் முன் நான்கு அதிகாரங்களால் நாம் இந்த பின்வரும் விஷயங்களைத் தெளிவாக அறிகிறோம். வேதாந்த சாஸ்திரங்கள் ஆத்மாவின் உண்மையான ரூபத்தைக் கூறுகின்றன. இந்த ஜீவாத்மா தானே ஒளிப்பவன், அறிவுள்ளவன், செய்கையுள்ளவன், அனுபவிப்பவன், உடலிலுள்ளிருப்பவன், அணுவானவன், பிறப்பும் இறப்பும் இல்லாதவன், அவயவம் இல்லாதவன், வெட்டவோ வேறு எந்த அழிவுக்கோ உடன் படாதவன், ஏற்றமோ சுருக்கமோ இல்லாதவன் என்கிற இவ்விஷயங்கள் எல்லாம் சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ளன. இதனால் இவன் இருக்கும் இடமான உடலையும் இவனுக்கு உதவியான இந்திரியங் களையும் விட இவன் வேறுபட்டவன் என்று தெளிவாகத் தெரிந்துகொள்ளப்படுகிறது. இப்படி அறிந்து இந்த ஆத்மா இவ்வுடலைவிட்டுப் பிரிந்த பிறகு வேறு உடலை மறுபடி பெறுவதே. அல்லது வேறு உலகம் செல்வதோ நிச்சயம் என்று இவன் தெரிந்து கொள்கிறான். பொதுவாக இந்த லோகத்தைவிட வேறு லோகத்தில் சென்று சில பலன்களை அனுபவிக்கத் தகுதியுள்ளவன் என்று தெரிந்து விடுகிறது.

அவ்வாறு அடையும் லோகம் நரகமாக இருந்தாலும் சரி வேறு பிறவி இந்த லோகத்தில் ஏற்பட்டாலும் அதன் கஷ்டங்களை உணர்ந்து அதற்கு பயப்பட்டு அவைகளை

அடைவதற்குக் காரணமான வினைகளைச் செய்வதிலிருந்து விலகிவிடுகிறான்.

மேலும் எம்பெருமானுக்கும் தனக்குமுள்ள வேறுபாடுகளை அறிவதாலும் பகவானுக்கு தானும் உடல் தான் என்றும் அறிவதாலும் தன்னுடைய உண்மையான நிலைமையில் உள்ள குறைகளை அறிவதலும் எம் பெருமானுடைய கைங்கர்யம் தனக்கு இயற்கையில் உள்ள பெருமை என்றும் அறிவதாலும் அப்பெருமையை அபேக்ஷிக்கிறான். இவ்வளவால் இந்த உண்மைகளை முன் அதிகாரங்களில் சொன்னபடி அறிவதால் பொதுவாக வேறு லோகத்தில் கிடைக்கும் பலத்தை அபேக்ஷிப்பதற்கும் அதிலும் மோக்ஷத்தில் கிடைக்கும் எம்பெருமானுக்குச் செய்ய வேண்டிய கைங்கர்யத்தை அபேக்ஷிப்பதற்கும் இதைத் தவிர வேறு பயன்களை விரும்பாமல் பாவங்களைச் செய்யாமலும் இருப்பதற்கும் காரணமாக இருப்பதால் இவ்வறிவு மோக்ஷத்தை விரும்புவதற்கு உபயோகமானது என்று தெரிகின்றது. இம்மாதிரியான விவேகம் அல்லது உண்மை அறிவால் 'தான்' என்கிற அஹங்காரமும், என்னுடையது என்கிற மமகாரமும் நீங்குகின்றது.

இந்த 'நான்', 'என்னுடையது' என்கிற எண்ணம் நீங்க நமக்கு வேண்டியதை எல்லாம் சுருக்கமாகக் காட்டும் திருமந்திரத்தைக் கொண்டு முக்கியமான பொருள்களை நாம் நன்றாகச் சிந்திக்க வேண்டும். அதில் முதல் பதத்தின் மூன்றாவது எழுத்தான 'ம' காரத்தால் தெரிவிக்கப்படுகிறது. இந்த ஆத்மா ஞானரூபமாயும் அறிவுள்ளவன் என்னும் உண்மை. இதையறிவதால் சரீரத்தில் நான் என்கிற எண்ணமும் சரீரத்தைச் சேர்ந்த பொருள்களில் என்னுடைய என்கிற தவறான எண்ணமும் நீங்கிவிடுகிறது.

முதல் எழுத்தான அகாரத்தின் பின் மறைந்திருக்கும்

நான்காம் வேற்றுமையின் பொருளான எம்பெருமானுக்கே உரியவன் என்கிறதை அறிவதாலே, உடலைவிட ஆத்மா வேறு, அதன் குணங்கள் வேறு என்று அறிந்தாலும் தனக்குத்தானே வல்லவன் என்கிற எண்ணம் இதன் மூலம்தான் நீங்குகின்றது. எம்பெருமானுக்கு அடிமை என்பதால் தனக்கோ தன்னைச் சேர்ந்த பொருள்களுக்கோ தான் எஜமானன் இல்லை என்று அறிந்து இவ்விதமான தான், தனது என்கிற எண்ணம் நீங்குகின்றது.

முதல்பதத்தின் நடு எழுத்தான உகாரத்தின் பொருளாக நான் எம்பெருமானுக்கே அடியவன், மற்றயாருக்கும் கீழ்ப்பட்டவன் இல்லை என்ற கருத்து அறியப்படுவதால் எம்பெருமானைத் தவிர வேறு ஒருவருக்கு உரியவன் நான் என்கிற எண்ணமும் எம்பெருமானைத் தவிர வேறு ஒருவன் எனக்கு எஜமானன் என்கிற எண்ணமும் நீங்குகிறது.

திருமந்திரத்தின் நடுப்பதமான நம: என்பது எனக்கு ஒன்றிலும் சுதந்திரம் இல்லை என்று கூறுவதன் மூலம் தன்னைக் காப்பாற்றிக்கொள்ள யாருதவியுமில்லாமல் நானே உபாயத்தை ஏற்றுக்கொள்ள முடியும் என்கிற எண்ணம் நீக்கப்படும்.

இவ்விதம் திருமந்திரத்தின் உட்கருத்தினையறிந்து முன் கூறப்பட்ட தவறான எண்ணங்கள் எல்லாம் நீங்கி உண்மையான அறிவைப் பெற்று இவ்விதம் இவ்வுலகில் பெறக்கூடிய இன்பங்களும், ஸ்வர்க்கம் முதலிய மேல் லோகங்களில் கிடைக்கும் இன்பங்களும் குற்றமுள்ளவைகள் என்றும் எம்பெருமானுடைய ஸ்ரீவைகுண்டத்தில் கிடைக்கக் கூடிய இன்பமே குற்றமற்றது என்றும் பல ப்ரமாணங்களாலும் அறிகிறான். கேவலமான அதாவது தனிப்பட்ட ஆத்மாவை அனுபவிப்பதும் குறையுள்ளது. ஸ்ரீவைகுண்டத்தில் அனுபவிக்கும் பேரின்பமே எந்த

குற்றமுமில்லாத அழியாத இன்பம் என்று அறிந்து கொள்கிறான். இதனால் மற்ற இன்பங்களிலெல்லாம் ஆசையைவிட்டு அழிவில்லாத பேரின்பத்தைபெற விரும்புகிறான். இவன் தான் முமுக்ஷு அதாவது மோக்ஷத்தை விரும்புகிறவன்.

இவ்விதமாக மோக்ஷத்தை விரும்புகிறவர்களும் சாஸ்திரங்கள் மூலம் கீழ்ச் சொன்னவாறு அனைத்தும் அறிந்தும் உலகபற்றைவிட்டு உத்தமமான புருஷார்த்தமான மோக்ஷத்தை அடைவதற்கு வேண்டிய உபாயத்தில் இறங்காவிட்டால் அவன் படித்ததெல்லாம் வீணாகும். பலரும் அவனை இகழ்ந்து பேசுவர் ஆதலால் தாங்கள் கற்ற சாஸ்திரங்களில் சொன்னவாறு அவைகளைப் பின்பற்றி மேன்மையான பதவியை அடைவதற்கு வேண்டிய உபாயத்தில் தாமதமேயில்லாமல் ஈடுபடுகிறவர்களைத் தேவர்கள்கூட புகழ்வார்கள். அவர்கள் மிக்க ஏற்றத்தைப் பெறுவார்கள்.

## அதிகாரி விபாகாதிகாரம்-
## அதிகாரிகளின் மாறுபாடுகள்

இப்படி உயர்ந்த பயனான மோக்ஷத்துக்காக உபாயங்களில் பற்றுள்ளவர்கள் இரண்டு வகைப்படுவார்கள். மோக்ஷத்தையே விரும்பி ப்ரபத்தி பண்ணுகிறவர் நேராக ப்ரபத்தி செய்பவராவர். பக்தி செய்து மோக்ஷம் பெறவிரும்பி பக்தி சரியாக நிறைவேற ப்ரபத்தி பண்ணுகிறவர் மற்றவர்கள்.

இந்த ப்ரபத்தியிலும் உக்தி நிஷ்டை என்றும் ஆசார்ய நிஷ்டை என்றும் இரண்டுவிதம். எப்படி ஏழுவிதமான ஸ்நானத்திற்கும் அந்தந்த அதிகாரியைப் பொருத்து பயன் ஒரே மாதிரியானதோ அவ்விதமே அந்தந்த அதிகாரிக்குத் தக்கவாறு ப்ரபத்திக்கும் ஒரே மாதிரியான பலன்தான். உக்தி

நிஷ்டை என்பது பின்வருமாறு. ப்ரபத்தியின் அங்கங்களில் விரிவான அறிவு பெறாமலிந்தாலும் எம்பெருமானைத் தவிர வேறு போக்கற்றிருப்பதுடன் எம்பெருமானைத் தவிர வேறு போக்கற்றிருப்பதுடன எம்பெருமானை நாடினால் அவர் காப்பாற்றுவார் என்கிற பூரணமான நம்பிக்கை உடனிருக்க வேண்டும். எம்பெருமான் அறியும்படி ஆசார்யன் உபதேசம் செய்யும் பூர்ணமான ப்ரபத்தி செய்யும் சொற்களைக் கொண்டு என்னைக் காப்பாற்றுவது உனக்கே பொறுப்பாக ஏற்றுக் கொள்ளவேண்டுமென்பது. இதுதான் உத்திநிஷ்டை. இதை ஆசார்யன் சொல்ல ஒருவன் சொன்னால் இவனுக்கு இதன் பொருள் சரியாகத் தெரியாமல் சொன்னாலும்கூட இவன் பூரணமான நம்பிக்கையுடன் மட்டும் ஆசார்யன் சொன்னதைச் சொல்லி ப்ரபத்தி பண்ணினால் எம்பெருமானுக்கு இது விளங்க கூடியதாகையால், அவன் மிகவும் கருணை உள்ளவனாகையால் அவன் இந்த ப்ரபத்தியை ஏற்றுக்கொண்டு பலனைக் கொடுக்கின்றான். அறிவில்லாமல் இருப்பவனும்கூட இவ்விதமான உத்தி நிஷ்டையாகிய ப்ரபத்தியை பண்ணினானாகில் எம் பெருமானுடைய கருணை இவனைப் பலன் கொடுத்துக் காக்கும்.

ஆசார்ய நிஷ்டை என்பது ஆசார்யனே தன்னை அடைந்தவனுக்கு அவனுக்காகத் தானே ப்ரபத்தி பண்ணுவது. ஆனால் ப்ரபத்தி உத்தி நிஷ்டையோ, ஆசார்ய நிஷ்டையோ இரண்டில் ஒன்றுதான் செய்யலாம். உத்தி நிஷ்டைக்கே பலன் உண்டு என்னும்போது ஆசார்ய நிஷ்டை பண்ணுகிறவனுக்குப் பலனில் கொஞ்சமும் சந்தேகமே கிடையாது. ஆனால் உத்தி நிஷ்டையோ ஆசார்ய நிஷ்டையோ இரண்டில் ஒருவிதமான ப்ரபத்தி பண்ணாதவனுக்கு எம்பெருமான் மோக்ஷத்தினைக் கொடுககமாட்டான். மிருகமாயிருந்தாலும், பறவையாயிருந்

தாலும், யாருக்குமே ஸ்ரீவைஷ்ணவ ஆசார்யன் ப்ரபத்தி பண்ண மோக்ஷம் நிச்சயமாக உண்டு. ஆனால் வைஷ்ணவர்களை அடுத்திருப்பதும் நல்ல தலங்களில் வாசம் பண்ணுவதும் நேராக மோக்ஷத்தைக் கொடுக்காவிட்டாலும் மோக்ஷத்திற்கு உபாயமான பக்தியிலோ, ப்ரபத்தியிலோ, இவனைத் தூண்டி இவனை மோக்ஷம் அடையுமாறு செய்யும். பக்தி பண்ணு கிறவனுக்கு நல்ல தலத்தின் வாஸத்தினால் அப்பக்தியானது மேலும் மேலும் வளரும். ப்ரபத்தி பண்ணினவனுக்கும் இங்கு எம்பெருமானுடைய கைங்கர்யத்தில் ஆசையை வளரச் செய்யும், வ்யாஸர் முதலியோர் போன்று பக்தியோகம் பண்ணத் தகுதியுள்ளவனாயுமிருந்து எளியவனாகவும் இல்லாமல், தாமதித்து மோக்ஷம் கிடைப்பதையும் விரும்புகிறவன் பக்தி பண்ணினால் அந்த பக்தி சரியாகத் துடங்கலின்றி நிறைவேற ப்ரபத்தி பண்ணுகிறவனுக்கு இப்பரத்தி, இவனுடைய ப்ராரப்த கர்மாவின் முடிவுரையில் உடல் துவக்குண்டாதலால் இறுதிவரையில் இந்த பக்தியை நிறைவேற்றச்செய்து கடைசி காலத்தில் எம்பெருமான் நினைவு வருமாறு செய்து மோக்ஷம் கிட்டுமாறு செய்யும். இதனால் பக்தி பண்ணுகிறவர்களுக்குத் தாமதித்தே மோக்ஷம் கிட்டும். அத்தாமதத்திற்கு காரணம் இவன் ப்ராரப்த கர்மாவின் முடிவுரையில் பல சரீரம் எடுக்க வேண்டி இருந்தால் எந்த சரீரத்தில் ப்ராரப்த கர்மம் முடிகின்றதோ அந்த சரீரம் முடியும் போழ்து எம்பெருமான் நினைவு ஏற்பட்டு அவன் மோக்ஷத்தையடைவான். எத்துணை சரீரங்கள் உண்டு என்று கூறமுடியாது.

ஆனால் ப்ரபத்தி பண்ணுகிறவனுக்கு இந்த சரீரத்தின் முடிவிலேயே மோக்ஷம் கிடைத்துவிடும். வேறு சரீரம் எடுப்பது கிடையாது. ப்ரபத்திக்கு எல்லோருமே தகுதி உள்ளவர்கள். இது எல்லா கஷ்டங்களையும நீக்கும். எல்லா விருப்பங்களையும் நிறைவேற்றும். சுலபமானது, ஒரேமுறை

தான் செய்யவேண்டியது. விரைவாகச் செய்து முடிக்கக் கூடியது. இதற்கு யாதொரு தடங்கலும் உண்டாகாது. ஆனால் பிரும்மாஸ்திரம், வேறு அஸ்திரம் போட்டால் அது நீங்கிவிடும், அதுபோல் மற்றொரு உபாயத்தை இதே பலனுக்கு நாடினால் இது பலன் தராது. இவ்வாறு ப்ரபத்தி பண்ணுகிறவனுக்கு மோக்ஷம் உடனே கிடைப்பதற்கு வேறு எந்தத் தடங்கலும் கிடையாது. ஆனால் ப்ரபத்தி பண்ணியவுடனே மோக்ஷத்தை அடைவதாகத் தெரிய வில்லை. ஏன் என்றால் இப்ப்ரபன்னர்கள் இந்த சரீரத்தின் முடிவில் மோக்ஷம் வேணுமென்று எம்பெருமானிடம் ப்ரபத்தி பண்ணுவதால் இந்த சரீரம் நீடித்திருக்க இப்ப்ரபன்னன் விரும்புவது இவ்வுலகத்திலும் எம்பெருமானுடைய அர்ச்சா ரூபத்திலும் கைங்கர்யம் ஒரு இடம், காலம் இவைகளுக்குட்பட்டது. இந்த சரீரத்திலேயே எம்பெருமானுடைய அர்ச்சா ரூபத்தின் பெருமையைக் கண்டு கைங்கர்யம் செய்ய விரும்பியே இந்த சரீரத்தின் முடிவில் மோக்ஷத்தை எம்பெருமானிடம் ப்ரபத்தி செய்யும் போது ப்ரார்த்திக்கிறான். ஆதலால் இந்த சரீரம் இருக்குமளவும் கைங்கர்யம் செய்து பிறகு மோக்ஷத்தில் நிகரற்ற கைங்கர்யம் செய்கிறான். மோக்ஷபலம் கிடைப்பது போலவே ப்ரபத்திமூலம் எம்பெருமானிடமிருந்து இவன் எந்த பலனை அபேக்ஷித்து ப்ரபத்தி பண்ணாலும் இவன் கோரின காலத்தில் இவன் விரும்பிய எப்பயனும் கிட்டும். ஆதலால்தான் பல இடங்களிலும் ப்ரபத்தியைப் பற்றிப் புகழ்ந்து கூறப்பட்டிருக்கின்றது.

ப்ரபத்தி பண்ணுகிறவனுக்கு இவ்வுலகத்தில் எம்பெருமானுக்குச் செய்யும் கைங்கர்யம்தான், இவன் கோரினதுக்கு தக்கவாறு பலவேறுபட்டிருக்கும். ஆனால் மோக்ஷத்தில் இவன் பெறும் கைங்கர்யத்திலும் ஆனந்த அனுபவத்திலும் எந்த ஏற்றத் தாழ்வும் கிடையாது.

மோக்ஷத்தில் இவனுக்குக் கிடைக்கும் கைங்கர்யம் இவனுடைய வினையைப் பொருத்ததில்லை. எம் பெருமானுடைய திருவுள்ளத்திற்குட்பட்டு இவனுக்கு எந்த விதமான கைங்கர்யமும் கிட்டும். எல்லா கைங்கர்யங்களையும் பெறுதற்குத் தகுதியுள்ளவனாகிறான்.

ப்ரபத்தியோ பக்தியோ இல்விரண்டிற்குள் ஒன்றைச் செய்யாதவனுக்கு எம்பெருமான் தனது இடமான ஸ்ரீ வைகுண்டத்தை அளிக்கமாட்டார். பக்திக்கும் ப்ரபத்திக்கும் பயன் ஒன்றுதான். இருப்பினும் ப்ரபத்தி பண்ணுகிறவனுக்கு விரைவில் பயன் கிட்டும். ஆனால் எம்பெருமானைத் த்யானம் செய்யும் ஆனந்தம் இவனுக்குக் குறைவு. பக்தி செய்கிறவனுக்கு எம்பெருமானைத் த்யானம் செய்யும் சுகம் ஏராளமானது. ஆனால் மோக்ஷம் தாமதமாகக் கிடைக்கும். இதுதான் வேற்றுமை. பயனில் வேற்றுமை இல்லை, ஆகவே பக்தியையோ ப்ரபத்தியையோ செய்யாமல் மோக்ஷத்தை அடையமுடியாது.

## உபாயவிபாகாதிகாரம்

பக்தியையோ ப்ரபத்தியையோ மோக்ஷத்தைப் பெறுவதற்காகச் செய்கின்றவர்களுக்கு செய்யவேண்டிய இந்த உபாயம் அறிவின் மலர்ச்சியில் ஒருவிதமாகும். இந்த உபாயத்தால் பெறப்படும் ஒரு பொருளும் அறிவின் மலர்ச்சியின் மற்றொரு விதம்.

இந்த இரண்டில் உபாயமான அறிவு மலர்ச்சி மனதாகிற இந்திரியத்தின் உதவியைப் பெற்றிருக்கும். சாத்திரங்களால் கட்டளையிடப்பட்டிருக்கும் ஸத்யம் முதலிய ஐந்து குணங்களோடு கூடியதாயும் ஒவ்வொரு வித்யையிலும் உபாஸனம் செய்யும்படி கூறப்பட்ட குணங்களோடு கூடியதுமான பரப்ரும்மத்தைப் பற்றியதாக இருக்கும். அடையப் பெறும் அறிவின் மலர்ச்சி எந்த இந்திரியத்தையும்

அபேக்ஷிக்காமலும் எப்பொழுது இருப்பதாயும் குணங்களோடு கூடியதான எல்லாம் நிறைந்த ப்ரும்மத்தைப் பற்றியதாக இருக்கும். அதாவது உபாயமான அறிவு சிற்சில குணங்களோடு கூடிய ப்ரும்மத்தைப் பற்றியதாக இருக்கும். அடையப்படும் அறிவு எல்லாக் குணங்கள் நிறைந்த ப்ரும்மத்தைப் பற்றியதாக இருக்கும்.

ஆனால் எப்படி உபாஸனம் பண்ணுகின்றானோ அவ்விதம்தான் பலன் கிடைக்கும் என்கிற நியாயப்படி உபாஸனத்தில் த்யானம் செய்யும் குணங்கள் தான் அடையும்போதும் வருமென்று தோன்றலாம். அவ்விதமில்லை. இவன் உபாஸிக்கும் போது தோன்றும் குணங்கள் அடையும்போதும் வரும் மற்றகுணங்களும் தோன்றத்தான் செய்யும். அதனால் மற்ற குணங்கள் தோன்றாது என்பது கிடையாது.

மோக்ஷத்தில் இந்த ஆத்மாவுக்குக் கிடைக்கும் பலம் எம்பெருமானுக்குச் செய்யும் கைங்கர்யம். அதுதான் அறிவின் ஒருவித மலர்ச்சி என்று சொன்னது. அதாவது இவன் எம்பெருமானை எல்லாக் குணங்களோடும் கூடியவராக அனுபவிக்கும் போது ஆனந்தம் வெள்ளமாக பெருகுகிறதுதான் கைங்கர்யம்.

ஸர்வேச்வரனான எம்பெருமானே உபாயமாகவும் உபயோகமாவும் இருக்கிறான். அதாவது அவனே முக்தர்களால் அடையவும் படுகிறான். அவனே அதற்கு உபாயமாகவும் இருக்கிறான். அது எப்படி என்றால் உபாயமாகிற அறிவிற்கு இவன் விஷயமாக இருப்பதும் நேரில் பயனைக் கொடுப்பதும் ஆகியவைகளால் இவன் உபாயமாகவும் ஆகிறான். அவ்விதமே அடையக்கூடிய ஆனந்த அனுபவத்திற்கு விஷயமாயும் இவனையே அந்த ஆத்மா கண்டு ஆனந்தப் படுவதாலும் உபேயமாகவும் ஆகின்றான்.

மோக்ஷத்தைப் பெறுதற்காக நேராகப் ப்ரபத்தி பண்ணுகிறவனுக்கு ப்ரபத்தியினால் கருணை கூர்ந்து அருள் புரியும் இந்த எம்பெருமான் எவ்விதத் தாமதமில்லாதவாறு மோக்ஷத்தை அளிக்கின்றான். பக்தியோகத்தால் மோக்ஷத்தை விரும்புகிறவர்கள் பக்தி நிறைவேற ப்ரபத்தி பண்ணினால் பக்தி பூர்த்தியாகித் தாமதமாகவே மோக்ஷம் கிட்டும். மோக்ஷத்துக்காகவே ப்ரபத்தி பண்ணுகிறவனுக்கு பக்தியின் மூலம் கிடைக்கும் மோக்ஷம் தாமதமின்றி நேராகக் கிடைப்பதற்கு இந்த எம்பெருமான் தானே அருள்புரிந்து உடனே கொடுப்பதால் இந்த எம்பெருமான் மற்றொரு உபாயமாகவும் ஆகின்றான். அதுபோன்று பக்தியோகத்தில் மோக்ஷத்தையடைய விரும்பி பக்தி செய்பவர்களுக்கும் பக்தியோகம் நிறைவேற ப்ரபத்தி பண்ணினால் அந்த ப்ரபத்திக்கு இணங்கி எம்பெருமான் கர்மயோகம் முதல் அந்த பக்தி பூர்த்தியாகும் வரை நடுவில் அப்பக்தனுக்கு நேரக்கூடிய எல்லாவிதமான துன்பங்களையும் அகற்றி அந்த பக்தி பூர்த்தியாக உதவி செய்கிறான்.

மோக்ஷத்தை அடைய ஒருவன் செய்யவேண்டிய உபாயம் நான்கு விதமாக இருக்கும். அதாவது கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம், ப்ரபத்தி என்று நான்கு யோகங்கள். இவைகளில் பக்தியோகமோ அல்லது ப்ரபத்தியோதான் மோக்ஷத்திற்கு நேரான உபாயம். இரண்டில் ஒன்றைத்தான் உபாயமாக அனுஷ்டிக்கலாம். இரண்டையும் செய்தல் கூடாது. அதிலும் ப்ரபத்தியை மோக்ஷத்திற்காக ஒரேமுறைதான் செய்யலாம். கர்மயோகமும், ஞானயோகமும் பக்தி மூலமாகத்தான் மோக்ஷத்திற்கு உபாயமாகும். இவைகள் மூலம் நேராக மோக்ஷத்தை அடையமுடியாது.

கர்மயோகமாவது கர்மாக்களைச் செய்வது. அதாவது சாஸ்திரங்கள் மூலம் ஆத்மாவினுடையவும் பரமாத்ம:

வினுடையவும் உண்மையை அறியவேணும். அவ்வறிவினைப் பெற்றுத் தனக்கு முடிந்ததான காம்யமான கர்மாவையும் கூட அதன் பயனை விரும்பாமல் செய்வதும், நித்யமானதும் நைமித்திகமான கர்மாக்களைச் செய்வதும் இவைகளோடு கூட சாஸ்திரத்திற்குக் கட்டுப்பட்டுச் செய்யும் சில கர்மாக்களைச் செய்வது கர்மயோகம், கர்மாக்கள் மூன்று விதம், நித்யம், நைமித்திகம், காம்யம் என்று, நித்யம் என்பது ஸந்த்யாவந்தனம் முதலியது. எதைச் செய்யாவிட்டால் பாபம் உண்டோ, ப்ராயச்சித்தம் உண்டோ அது நித்யம், நைமித்திகம் என்பது சில காலங்களில் மட்டும் செய்ய வேண்டியவை. க்ரஹணம் பிடித்தால் ஸ்நானம் முதலியது செய்வது. இதையும் அந்தந்த காலத்தில் செய்யாவிட்டால் பாபம் உண்டு. காம்யம் என்பது ஸ்வர்க்கம் முதலிய பலனை வேண்டி யாகங்கள் செய்வது. இது செய்தால் அந்த பலன் கிடைக்கும். செய்யாவிட்டால் குற்றமில்லை. ஆனால் அப்பலனை விரும்பாமல் எம்பெருமானுடைய ப்ரீதிக்காகச் செய்வதுதான் கர்மயோகத்திற்கு உபயோகமானது. பலனை விரும்பி செய்வது விலக்கத் தக்கது. இவைகளைச் செய்வதுடன் சில கர்மாக்களைச் செய்வது கர்மயோகம். அவைகளுள் எம்பெருமானுக்கு அர்ச்சனை. ஆராதனம் செய்வது, தவம் செய்வது, புண்ணியத் தீர்த்தங்களுக்குப் போவது, தானம் செய்வது, யாகங்கள் செய்வது முதலியதும் கர்மயோகத்தின் ஒரு பகுதியாகும். வேதாத்யயனம், வேதங்களின் அர்த்தங்களை விசாரிப்பது, மூன்றுவிதமான ப்ராணாயாமங்கள் முதலியவைகளும் கர்மயோகத்தின் பகுதி.

இந்த கர்மயோகம் ஆத்மாவைக் காண்பதற்கு உபாயமாகும். ஆனால் எவ்விதம் சிலருக்குப் ப்ரபத்தி நேராகவே மோக்ஷத்திற்கு உபாயமாகவும், மற்றும் சிலருக்கு பக்தியின் மூலமாக உபாயம் ஆகிறதோ அவ்விதமே

கர்மயோகமும் ஞானயோகத்தின் மூலமாகவோ அல்லது நேராகவோ யோகத்தின் மூலம் ஆத்மாவைக் காண்பதற்கு வழியாகும்.

ஞானயோகமாவது கர்மயோகத்தாலே மனதை வென்றவனுக்கு ஆத்மாவைப் பற்றியதாக எப்பொழுதும் விடாமல் த்யானம் செய்வது. ஆத்மாவை ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்டவனாகவும் ஈசுவரனுக்கு உடலாக அவனுக்கு கீழ்ப்பட்டும் அவனால் தாங்கப்படுவதாகவும் அவ்வுண்மையான ரூபத்தில் த்யானம் செய்ய வேண்டும்.

இந்த கர்மயோகம் ஞானயோகம் இவைகளால் யோகத்தின் மூலம் ஆத்மாவைப் பார்த்தால் ஆத்மாவை அனுபவிக்கும் சுகம் ஏற்படும். மற்ற வெளி சுகங்களில் இவனுக்கு ஆசை நீங்கும். ஆனால் இந்த ஆத்மாவை அனுபவிக்கும் சுகத்தில் ஈடுபட்டு அதோடு நிற்காமல் அதில் அகப்பட்டுக் கொள்ளாமல் மேன்மையான புருஷார்த்தமான பகவானையே அனுபவிக்கும் மோக்ஷத்திற்கு உபாயமான பக்தியோகத்தில் தொடர்ந்து ஈடுபட்டானாகில் அந்தர்யாமியான எம்பெருமானைக் காண்பதற்கு அவனுடைய சரீரமான ஜீவாத்மாவினுடைய தோற்றமும் இவனுக்கு உபயோகமாவதால் பக்தி யோகத்திற்கு பயன் படும் கணக்கில் இது சேர்ந்துவிடும்.

பக்தியோகம் என்பது எம்பெருமானை விடாமல் த்யானம் செய்வது. அந்த எம்பெருமானை விட்டு வேறு ஒன்றிலும் நோக்கமில்லாமலும், அவனைத் தவிர வேறு யாருக்கும் கீழ்ப்படாதவனாகவும் இருந்துகொண்டு அவனுக்கே சேஷபூதன் என்கிற எண்ணத்தோடு எம்பெருமானைப் பற்றி மிகவும் ஸந்தோஷத்துடன் த்யானம் செய்ய வேண்டும். இந்த த்யானம், எண்ணெய் தொடர்ந்து சொட்டுவது போல் இடைவிடாமல் செய்யப்படவேண்டும்.

த்யானம் எம்பெருமானை நேரில் காண்பது போல் அத்துணைத் தெளிவான தோற்றத்தோடு இருக்க வேண்டும். மோக்ஷத்துக்குப் போகும் நாள்வரையில் ஒவ்வொரு நாளும் செய்யப்படவேண்டும். இவ்விதம் தொடர்ந்து செய்யும் த்யானத்தால் கடைசியில் எம்பெருமானையே த்யானம் செய்து உயிர் நீங்க வேண்டும். இப்படிச் செய்வதுதான் பக்தியோகம். இந்த பக்திசெய்கிறவன் வர்ணாச்சரம தர்மங்களையும் செய்ய வேண்டும். அதனால் அவனுடைய அறிவு வளர்ந்து நல்ல வழியில் சென்று தப்புகள் செய்யாமல் இருக்கமாறு பக்திக்கு உதவியாக இருக்கும்.

இந்த பக்தியோகம் சில நம்பிக்கைக் குறைவானவர்களுக்கு மோக்ஷத்தில் நம்பிக்கையை ஏற்படுத்துதற்காக அவர்கள் விருப்பத்திற்குத் தக்கவாறு செல்வம் முதலியதைப் பெறுதற்கும் உதவியாக இருக்கும் என்கிற கருத்தில் பகவத்கீதையில் நான்கு விதமானவர்கள் தன்னை உபாஸிப்பதாக கீதாசார்யன் அருளிச் செய்திருக்கிறார். ஆனால் அதே இடத்தில் தொடர்ந்து கீதாசார்யன் தன்னையேநாடி வேறு எந்த தேவதையையும் அடையாமல் மோக்ஷத்தையே விரும்பி மற்றபலனை நாடாமல் பக்தி செய்பவன்தான் ஏற்றமுள்ளவன் என்று கூறியுள்ளார். இப்படி மோக்ஷத்தை விரும்பிச் செய்யும் பக்தியோகம் பரபக்தி என்று சொல்லப்பட்டிருக்கிறது. இப் பரபக்திக்குக் கீழ்ப்பட்டது பக்தி. இந்த பக்தி பரபக்திக்கு உபயோகமாய் எம்பெருமானிடத்தில் மிக்க அன்பாகும். எம்பெருமானைத் தெளிய அறிய வேணும் என்கிற எண்ணத்தை இவ்வன்பு உண்டாக்கும், இப்படி இப்பக்கதியின் மூலம் உண்டான பரபக்தி எம்பெருமானை நேரில் காண வேண்டுமென்னும் எண்ணத்தை உண்டாக்கி 'எம்பெருமானே! நீ உன்னை எனக்கு நேரில் காண்பிக்க வேணும், என்று அழச் செய்து அவன் விருப்பத்தின் காரணமாக எம்பெருமானுடைய

அருள் ஏற்பட்டு அவ்வேளையில் மட்டும் ஏற்படும் எம்பெருமானுடைய தோற்றம் உண்டாகும்படி செய்யும். இவ்விதமாக ஏற்படும் எம்பெருமானுடைய தோற்றம் பரஜ்ஞானம் என்று கூறப்பட்டிருக்கிறது. இவ்விதமாக மிகவும் ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடிய இந்த எம் பெருமானுடைய உருவத்தைக் காண்பதால் பெரும்விடாய் உள்ளவன் குளத்தைக் காண்பது போல் உண்டான மிகுதியான அன்புதான் பரமபக்தி. பரமபக்தி நம்மாழ் வாருக்குபோல், இனிப் பேரின்பம் பெறாமல் இருக்க முடியாத நிலையில் இவனுக்கு பெரிய அவாவை உண்டாக்கி எம்பெருமானை ஆணையிட்டுக் கூப்பிட்டு அவனை இணங்கச் செய்து மோக்ஷத்தைப் பெறச் செய்யும்.

ப்ரபத்திதான் எம்பெருமானைச் சரண்புகுவது. பக்தி யோகத்திற்குப் ப்ராம்மணர், க்ஷத்திரியர், வைச்யர் ஆகிய மூன்று வர்ணத்தார்தான் அதிகாரி. இம்மூன்று வர்ணத்திற்கு வெளிப்பட்டவர் மோக்ஷம்பெற ப்ரபத்தியை அனுஷ்டிக்க வேண்டும். இம்மூன்று வர்ணத்திலும் பக்தியோகம் செய்வதற்கு வேண்டிய ஞானமில்லாதவர்களும் அதற்கு வேண்டிய சக்தி இல்லாதவரும் ப்ரபத்திக்கு அதிகாரி. இவைகளனைத்தும் இருந்தும் தாமதத்தைத் தாங்காமல் விரைவாகப் பலனை விரும்புகிறவர்களும் ப்ரபத்தியால் பலனைப் பெறலாம். இந்த ப்ரபத்தி விரும்பிய பலன் அனைத்தையும் அளிக்கக்கூடியது. இதுவே பரபக்திக்குப் பதிலாக உபாயமாகக் கூறப்பட்டிருக்கின்றது.

இவ்விதமாகப் பக்திக்கும், ப்ரபத்திக்கும் அந்தந்த அதிகாரிக்குத் தக்கவாறு இரண்டில் ஒன்றைத்தான் செய்ய வேண்டும். இரண்டுக்கும் பலனில் எவ்வித மாறுபாடும் கிடையாது. பக்தி பண்ணுவதற்கு வேதங்களில் பல பக்கங்களில் பலவிதம் சொல்லப்பட்டதுபோல் ப்ரபத்தி செய்யும் மந்திரங்களும் சிற்சில இடங்களில் சில

மாறுபாடுகளுடன் கூறப்பட்டிருக்கின்றன. பக்தியோகம் பலவிதமாக இருந்தாலும் அவைகளில் ஒன்றைத் தான் செய்ய வேண்டும்.

ப்ரபத்திக்கும் பல இடங்களில் மந்திரங்களில் மாறுபாடு இருந்தாலும் அவைகளில் ஒன்றைமட்டும்தான் பின்பற்றி ப்ரபத்தி பண்ணவேண்டும். ஒரு பலனை உத்தேசித்து பக்தியையோ ப்ரபத்தியையோ இரண்டில் ஒன்றைத்தான் செய்யவேண்டும். இரண்டையும் செய்யக்கூடாது. ப்ரபத்தியை ஒரேமுறைதான் ஒரு பலனுக்காகச் செய்ய வேண்டும். அவரவர்கள் அதிகாரத்திற்குத் தக்கவாறு இரண்டில் ஒன்றைச் செய்தால் பலன் ஒரே மாதிரிதான் கிடைக்கும்.

உபாயவிபாகாதிகாரம் முற்றிற்று.

* * * * * *

## ப்ரபத்தி-யோக்யாதிகாரம்

இவ்விதம் தான் விரும்பும் பலனுக்கு வேறு உபாயங்களில் ஆசை வைக்காமல் ப்ரபத்தி என்கிற ந்யாஸ வித்தையயிலே இழியுமவனுக்கு இந்த வித்யைக்கு வேண்டிய அதிகாரம் முதலியதை அறிய வேண்டும். அதிகாரம் என்றால் அப்பலனைப் பெற முயற்சி செய்கிறவனுக்கு அந்தப் பலத்தில் விருப்பமும், அதை அடைவதற்குச் செய்யவேண்டிய உபாயத்தைச் செய்வதில் திறமையுமாகும். அந்தத் திறமை என்பது சாத்திரத்தில் கூறியிருப்பதை அறிவதும், அறிந்தவாறு நடத்த வல்லமையும், சாத்திரத்தில் சொல்லப்பட்ட ஜாதி, குணம் முதலியவைகளைப் பெற்றிருப்பதுமாகும். இது உள்ளவன் பெறக்கூடிய பலன் இவனுக்கு உபயோகமாச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த பலனைப்பெறச் செய்யவேண்டியதாகக் கட்டளை

இடப்பட்டிருப்பது உபாயமாகும். இங்கு மோக்ஷத்தைப்பெற விரும்பி அதற்கு உபாயமாக ப்ரபத்தி பண்ணுகிறவனுக்குச சாத்திரத்தில் கூறப்பட்டிருக்கும் எம்பெருமானுக்கும் தனக்கு முள்ள தொடர்பு முதலியதைப்பற்றி அறிய வேண்டியது. பக்தி பண்ணுகிறவனுக்கு எப்படியோ அப்படியே இவனுக்கும் அவசியமாகும். ஆனால் ப்ரபத்தி பண்ணு கிறவனுக்குத் தனிப்பட்ட அதிகாரம் தன்னுடைய எளிமையும் வேறு கதியில்லாமையுமாகும். எளிமை என்பது ப்ரபத்தியைத் தவிர வேறு உபாயத்தில் திறமை இல்லாமல் இருப்பது. வேறுகதி இல்லாமையாவது மோக்ஷத்தைத் தவிர வேறு பலனை விரும்பாமல் இருப்பதும், எம்பெருமானைத் தவிர வேறு ஒருவரைத் தஞ்சமாக அடையாமலிருப்பது மாகும். பல சாஸ்திரங்களிலும், புராணங்களிலும் எம் பெருமானைத் தவிர வேறு தேவதைகளை அடைபவர்கள் சிறிய பலன்களைத்தான் பெறமுடியும், மோக்ஷத்தை அடைய முடியாதென்றும், எம்பெருமானையே சரணம் அடைபவர்கள்தான் மோக்ஷத்தைப் பெற முடியுமென்று கூறப்பட்டிருக்கிறது. உடனே மோக்ஷத்தைப் பெற வேண்டு மென்று கொள்கை இல்லாமல் இவ்வுடம்பு தொடர்ந்து இருந்து அர்ச்சையில் எம்பெருமானை ஸேவிப்பது முதலிய வேறு பலன்களிலும் பற்றிருந்து மோக்ஷத்தை அடைய வேண்டுமென்று ப்ரபத்தி பண்ணுகிறவர்களுக்கு அவர்கள் விரும்பும் வேறு பலனை அனுபவிக்கும் வரை இந்த உடல் இருந்து பிறகு மோக்ஷம் கிடைக்கும்.

ப்ரபத்தியைத் தவிர வேறு உபாயத்தைச் செய்வதில் அதற்கு வேண்டிய ஞானமும் சக்தியும் அவசியமாகையால், அப்படிப்பட்ட ஞானமும் சக்தியும் இல்லாதவனாய்த் தாமதித்து மோக்ஷம் கிடைப்பதையும் பொறுக்காதவன் ப்ரபத்தியை அனுஷ்டிக்க வேண்டும். இந்நிலைமையைத்தான் ப்ரபத்தி பண்ணுகிறவனுக்கு எளிமையும் வேறு போக்கற்ற

ருப்பதும் தனிப்பட்ட பொறுப்பாகச் சொல்லப் பட்டிருக்கிறது. மேலும் எம்பெருமானைத் தவிர வேறு ஒருவரையும் சரணமடைவதில்லை என்கிறதும் மோக்ஷத்தைத் தவிர வேறு பலனை நாடுவதில்லை என்பதும் ப்ரபன்னனுக்கு அவசியமான நிலைமையாகும். இம்மாதிரியான நிலைமையைப் பெற்றவர்கள் எச்சாதியில் பிறந்திருப்பினும் ப்ரபத்தி செய்தற்குத் தகுதியுள்ளவர்கள், பக்தியோகத்துக்குப்போல் இதற்கு சாதியைப் பற்றின கட்டுப்பாடு கிடையாது. எல்லோருமே ப்ரபத்தி செய்யத் தகுதியுள்ளவர்கள்.

ப்ரபத்தியோக்யாதிகாரம் முற்றிற்று.

* * * * * *

## பரிகார விபாகாதிகாரம்

இந்த ப்ரபத்தியும் பக்தியைப்போல் ஒரு வித்யையாகும். பக்திக்கு முப்பத்திரண்டு வித்யை வேதத்தில் சொல்லப் பட்டிருக்கின்றது. அதுபோல் ப்ரபத்தியும் ஒருவித்யை. இதற்கு ந்யாஸவித்யை என்று பெயர். இதுவும் வேதத்தில் சொல்லப்பட்டதே.

இந்த ந்யாஸ வித்யைக்குப் பரிகாரங்கள் அல்லது தேவையானவைகள் ஐந்து, அதாவது அனுகூலமானதைச் செய்யும் தீர்மானமான எண்ணம், எதிரிடையானதை விலக்குவது, எளிமை பெரும் நம்பிக்கை, காப்பாற்றும்படி வேண்டிக்கொள்வது என்கிற ஐந்தும் ப்ரபத்திக்கு அவசியம் தேவை. ப்ரபத்தி என்பது இந்த ஐந்தோடு தன்னை எம்பெருமானுக்கு ஒப்படைத்துவிடுவதாகும். இதற்கு ந்யாஸவித்யை என்று சொல்லுவது. ந்யாஸம் என்றால் ஒரு நம்பிக்கையுள்ளவனிடம் ஒப்படைப்பது என்று அர்த்தம். எம்பெருமானிடம் தன்னை ஒப்படைப்பது தான் ப்ரபத்தியாகிறது.

இந்த ப்ரபத்தியில் மோக்ஷத்தை வேண்டிச்செய்யும் ப்ரபத்திக்குப் பலத்தையும் எம்பெருமானிடமே ஒப்படைப்பது மற்றொரு தேவையான அங்கம். ஆகையால் மோக்ஷத்துக்கான ப்ரபத்தி பண்ணும்போது பலனில் தனக்குப் பற்றில்லை என்பதையும் சேர்த்து அனுஸந்தானம் பண்ணவேண்டும்.

இந்த ஐந்து அங்கங்களைப்பற்றிப் பின்வருமாறு தெரிந்து கொள்ளவேண்டும். எம்பெருமானுக்கு அனுகூலமானதைச் செய்வதாகத் தீர்மானமான எண்ணம், எதிரிடையானதைச் செய்யாமல் இருப்பதுமான இவ்விரண்டு அங்கங்களும் முக்கியமாக இருப்பதற்குக் காரணம் எம்பெருமான் தனக்கு ஸ்வாமியாகையால் அவனுடைய விருப்பப்படி நாம் அவன் சொன்னதைச் செய்து அவன் கூடாதென்று விலக்கியதை விலக்கி அவனுக்குத் திருப்தியை உண்டுபண்ணவேண்டும். அதாவது சாத்திரங்கள் எம்பெருமானுடைய உத்தரவு. அவைகளில் செய்யும்படி கட்டளையிட்டதைச் செய்ய வேண்டும். விலக்கும்படி கூறியிருப்பதை விலக்கவேண்டும். இப்படிச் செய்து எம்பெருமானை மகிழ்வித்துத்தான் அபாயத்திலிருந்து நீங்கவேண்டும். சாத்திரப்படி நடக்கா விட்டால் எம்பெருமானுடைய சிக்ஷைக்கு ஆளாக வேண்டிவரும்.

அடுத்தபடியான அங்கம் எளிமை. தன்னுடைய எளிமையைத்தான் நினைக்கவேண்டும். அதனால் இவனுடைய கர்வம் நீங்கவேண்டும். எம்பெருமானுக்குக் கருணை உண்டாகும்படித் தாழ்மையாக நடந்து கொள்ள வேண்டும். இப்படி இருப்பதினால் எம்பெருமானுக்கு இவனிடம் கருணை ஏற்படும். இந்த எளிமை பிறகு இவனுக்கு எம்பெருமானை அடுத்திருப்பதைத் தவிர வேறு வழியில்லை என்பதற்கும் உபயோகமாக இருக்கும்.

அடுத்தப்படியாக உள்ள அங்கம் எம்பெருமானிடம் மேன்மையான நம்பிக்கை. நம்மைக் காப்பாற்றுவான் என்கிற அசைக்கமுடியாத நம்பிக்கை இருந்தால்தான் இவனுக்கு ஸந்தேகமில்லாமல் இந்த ப்ரபத்தி நிறைவேறும். ஸந்தேகமிருந்து நம்பிக்கைக் குறைந்தால் ப்ரபத்தி நிறைவேறாது. இந்நம்பிக்கை ப்ரபத்தியையும் பூர்த்திசெய்து பின்னும் இந்த ப்ரபத்தி பண்ணுகின்றவனுக்கு எக்கவலையும் இல்லாமலிருப்பதற்கு உதவியாகும்.

ஐந்தாவதான அங்கம் எம்பெருமானை "என்னை நீ காப்பாற்ற வேண்டும்", என்று வேண்டிக்கொள்வது. இதுவும் இன்றியமையாததுதான். இந்த மோக்ஷமும் நான்கு விதமான புருஷார்த்தங்களில் ஒன்று. புருஷார்த்தம் என்றால் புருஷனால் ப்ரார்த்திக்கப்படுவது என்று அர்த்தம். மற்றவைகள் எப்படியோ அப்படியே மோக்ஷமும் புருஷனால் ப்ரார்த்திக்கப்பட்டால்தான் புருஷார்த்தமாகும். ஆகையால் எம்பெருமான் மோக்ஷமென்கிற புருஷார்த்தத்தைப் புருஷனால் ப்ரார்த்திக்கப்பட்ட பிறகுதான் அளிக்க வேண்டும். ஆகவே "நீ என்னைக் காக்கவேண்டும்" என்று எம்பெருமானை ப்ரபத்தி செய்கிறவன் ப்ரார்த்திப்பதும் ஓர் அங்கமாகும்.

இவ்விதமாக இவ்வைந்து அங்கங்களுமில்லாமல் ப்ரபத்தி அதாவது தன்னை எம்பெருமானிடம் அர்ப்பணித்தல் இயலாது. இவ்விதமான ப்ரபத்தி அல்லது சரணாகதியை இராமாயணம் முதலிய க்ரந்தங்களில் பல இடங்களில் காணலாம்.

திரிஜடை என்கிறவள் மற்ற அரக்கிகளை, சீதா பிராட்டியிடம் சரண்புகுமாறு அழைக்குமிடம் ஒன்று. அரக்கிகளிடம் இந்த திரிஜடை "சீதையைக் கடுமையாகப் பேசாதீர்கள், அவளை அன்புடன் அழையுங்கள்" என்று

கூறியதற்கு எதிர்ப்பில்லாமையும், அனுகூல எண்ணமும் தெரிவிக்கப்பட்டது. "இராமன் மூலம் அவர்களுக்கு பெரிய ஆபத்து ஏற்படப்போகின்றது" என்று எளிமையும் அதன் மூலம் அவ்வரக்கிகளுடைய கர்வம் அடங்குவதும் தெரிவதால் ப்ரபத்தியின் மூன்றாவது அங்கம் புலப் படுகின்றது. "இப்பெரிய ஆபத்தினின்று நம்மை சீதை காப்பாற்ற முடியும்" என்று கூறியதால் பெரும் நம்பிக்கை இருப்பது காணப்படுகிறது. "சீதையை நாம் வேண்டிக் கொள்வோம்" என்றதால் காக்குமாறு வேண்டுவது என்பது தெரிகின்றது. தன்னை ஒப்படைப்பது என்கிற ப்ரபத்தியும் அடைக்கலம் புகுந்தால் காப்பாற்றுவாள் என்பதால் காட்டப்பட்டது. பிராட்டியும் அவ்வரக்கிகள் தடை சொல்லாமல் இருந்ததையே பெரிதாக எண்ணி "உங்களை காப்பாற்றுகிறேன்" என்றுரைத்தாள். அவ்விதமே அரக்கிகளை அழிப்பதற்கு உத்தரவு தருமாறு வேண்டிய அனுமாரிடமிருந்து அவர்களைக் காப்பாற்றியும் விட்டாள். இவ்விதமாக இவ்விடத்தில் ஐந்து அங்கங்களுடன் சரணா கதியை நாம் காணலாம். த்ரிஜடை அரக்கிகளின் சார்பாக சரணாகதி அடைந்ததால் அனைவரும் காப்பாற்றப் பட்டனர்.

விபீஷணாழ்வான் செய்த சரணாகதியிலும் இவை களைக் காணலாம். விபீஷணனுடன் வந்த அரக்கர்களும் விபீஷணன் செய்த சரணாகதியால் அடங்கினார்கள். விபீஷணன் தனது மூத்தோனான இராவணனிடம் "ராமனிடம் சீதையைக் கொடுத்துவிடு, நாம் சுகமாக வாழலாம்" என்று கூறியதால் ராமனுக்கு அனுகூலம் செய்யும் எண்ணம் விபீஷணனிடம் காணப்படுகின்றது. இவ்வாறு விபீஷணனின் நல்வார்த்தைகளை ஏற்காததோடு நில்லாத இராவணன் அவனை இகழ்ந்து பேசவும் செய்ததாலே, இராவணனுடன் இனி இருத்தல் நல்லதல்ல

என்ற முடிவினை எடுத்து இராமனிடம் வந்து "இலங்கையை விட்டு விலகி வந்துவிட்டேன்" என்றதால் எதிரியாக இருத்தல் கூடாது என்கிற மூன்றாவது அங்கம் காணப் படுகிறது. "எல்லோரையும் காப்பாற்றுகின்ற மகாத்மாவான இராமனிடம் 'நான் விபீஷணன் வந்திருக்கிறேன்' என்று சொல்லுங்கள்" என்று கூறியது இராமனிடம் பெரிய நம்பிக்கையை காட்டுகின்றது. "இராமனைச் சரணம் அடைந்தேன்" என்பது காப்பாற்றுமாறு வேண்டுவதை குறிக்கின்றது. ஆக இவ்வைந்து அங்கங்களுடன் விபீஷணன் தன்னை இராமனிடம் அடைக்கலமாக ஏற்றுக்கொள்ளக் கூறியதும் சேர்ந்து பூரணமான ப்ரபத்தியை இங்கும் பார்க்கலாம்.

ஆகையால் இவ்வைந்து அங்கங்களுடன் எம் பெருமாளைச் சரணமடைவதாகிற ப்ரபத்தியென்னும் தன்னை ஒப்படைத்தால் தாமதமின்றி நிச்சயமாக மோக்ஷம் பெறலாம்.

பரிகார விபாகாதிகாரம் முற்றிற்று.

* * * * * *

## ஸாங்கப்ரபதனாதிகாரம் அல்லது அங்கங்களோடு ப்ரபத்தி செய்வது

மோக்ஷத்தை விரும்புகிறவன் செய்யும் ப்ரபத்தியில் அங்கி அல்லது முக்கியமானது. தக்கபடி தன்னை எம்பெருமானிடம் ஒப்படைப்பது. அதாவது ப்ரணவத்தில் முதல் எழுத்தான அகாரத்தால் எல்லோரையும் காப்பாற்று கிறவனாயும் எல்லோருக்கும் ஸ்வாமியாயும் தோன்றும் எம்பெருமானிடம் தன்னை ஒப்படைப்பதை முக்கியமாகக் கொண்ட அவனுக்குத் தான் ஊழியன் என்னும் கொள்கை. அதில் தான் எம்பெருமானுக்கே கீழ்ப்பட்டவன் என்றும்

தனக்கு எந்தவிதமான உரிமையும் இல்லை என்னும் எண்ணம் இருக்கவேண்டும். தன்னையோ தன்னைச் சேர்ந்தவர்களையோ காப்பாற்றுவதிலோ அவ்விதம் காப்பாற்றும் பலத்திலோ தனக்கு உரிமையோ யாதொரு லாபமோ இல்லை என்கிற எண்ணமும் வேண்டும். இப்படிச் செய்யும் காரியம்தான் ப்ரபத்தியாகும். இப்படி எம்பெருமானிடம் ஒப்படைப்பதாகிய ப்ரபத்தி செய்யும் விதம் பின்வருமாறு.

ஸ்வாமியாயும் சுதந்திரத்துடன் கூடினவனுமான என்னைத் தன் ப்ரயோஜனத்துக்காகவே தானே ரக்ஷிக்கின்றான். நானே எம்பெருமானைத் தவிர வேறு யாருக்கும் உரியவனுமில்லை. வேறு யாருக்கும் அடங்கினவனுமில்லை. அவன் ஒருவனுக்கே ஊழியன். அவனுக்கே அடங்கியவன். எனக்கும் நான் கட்டுப்பட்டவன் இல்லை. எந்தப் பொருளையும் என்னுடையது என்று சொல்லவும் எனக்கு உரிமை கிடையாது. என்னையும் என்னைச் சேர்ந்ததாக உள்ளவற்றையும் நானே முக்கியமாக அவைகளால் பலன்களை அடையும் படி காப்பாற்றிக்கொள்ளத் தகுதியுடையவன் இல்லை. நானும் என்னைச் சேர்ந்தவை எல்லாம் எம்பெருமானுக்கே உரியவை. என்னையும் என் பொருள்களையும் காப்பாற்றும் பொறுப்பும், காப்பாற்றும் பயனும் எம்பெருமானைச் சேர்ந்ததே என்று தான் நினைப்பதுதான் ப்ரபத்தி செய்யும் விதம்.

ஆனால் மோக்ஷம் என்கிற பலத்தைத் தனக்கு வேண்டும் என்று விரும்பி அல்லவா ப்ரபத்தி செய்கிறான். ஆகையால் பயன் ஜீவாத்மாவுடையது தானே! எம்பெருமானுடையது தான் பலன் என்பது எவ்வாறு பொருந்தும் என்று நினைக்கலாம். உயிரில்லாதவைகளைத் தான் ஆள்வதுபோல் எம்பெருமான் ஜீவர்களுக்கும் கொடுக்கும் பயன் எல்லாம் தான் எஜமானனாகையால் தனக்காகவே தான் செய்வதால்

பலத்துக்குரியவன் எம்பெருமான்தான். ஒருவன் உயிரில்லாத பொம்மைகளுக்கு ஆடை, ஆபரணம் பூட்டி களிப்பதுபோல் உயிருள்ள கிளிக்குப் பால் கொடுத்தும், பேசவிட்டும் களிக்கின்றது எப்படியோ அப்படியே ஈச்வரன் ஜீவர் களுக்குப் பலன்களைக் கொடுத்து அதன் மூலம்தான், தான் அந்தப் பலன்களை அனுபவிக்கின்றான்.

இந்த ப்ரபத்தியை ஐந்து அங்கங்களுடன் கூட, த்வயமந்திரத்தில் முதல் பாகத்தில் "ப்ரபத்யே" என்கிற பதத்தில் "சரணம்" என்கிற சொல்லுடன் சேர்த்து அனுஸந்திக்க வேண்டும்.

இந்த ப்ரபத்தியை மோக்ஷத்தைப் பலமாக வேண்டி ஒரே தடவைதான் செய்யவேண்டும். இது வேதத்தின் மூலம் அறியப்பட்டதாகும்.

இந்த ப்ரபத்தியில் "பரஸமர்ப்பணம்" என்பதான தன்னை எம்பெருமானிடம் ஒப்படைப்பதே முக்கியமானது.

அங்கங்களுடன் ப்ரபத்தி பண்ணுவது பின்வருமாறு தீர்மாணிக்கப் பட்டிருக்கிறது. தான் இதை செய்கிறவன் என்கிற எண்ணத்தையும், என்னுடையது என்பதையும் பலன் என்னைச் சேர்ந்தது என்பதையும், பலத்திற்கு உபாயமானவன் என்பதையும் விட்டுவிட வேண்டும். எம் பெருமானுக்கு அனுகூலமானவன் என்பது முதலிய முன்கூறிய ஐந்து அங்கங்களும் வேண்டும். ஆசார்யர்களுடன் பரம்பரையை ஸ்தோத்திரம் செய்யவேண்டும். பிறகு த்வய மந்திரத்தைச் சொல்லி ஸ்வரூபவம், பலம் இவைகளையும் எம்பெருமானுக்கு ஒப்படைப்பது. இதுதான் சரியான ப்ரபத்தி என்று தீர்மானிக்கப்பட்டுள்ளது.

தான் கர்த்தா அதாவது இதைச் செய்கிறவன் என்கிற எண்ணம் போகவேண்டியதற்குக் காரணம், தான்

செய்வதெல்லாம் எம்பெருமானால் அளிக்கப்பட்ட உரிமை என்றும் எக்காலத்திலும் எம்பெருமானுக்கே அடிமை என்றும் அறிவதற்காகவேதான்.

என்னுடையது என்கிற எண்ணம் நீங்குவதற்கும் பலமும் தன்னுடையதில்லை என்று எண்ணுவதற்குக் காரணம். இவைதானும் பகவானுக்கு அடிமையாகையாலே அவனுடைய ப்ரயோஜனமே தனக்கு பலமாகையால் தான் அடிமை என்கிற எண்ணம் பலத்தையும் அவனுக்கு அளிப்பதற்குக் காரணம். தன்னுடையவைகள் எல்லாம் பகவானுக்கு உரியதானதாகையால் தான் செய்யும் ப்ரபத்தி என்னும் உபாயமும் அவனுக்கே உரியதாகையால் என்னுடையது என்கிற எண்ணம் போவதற்கு இது காரணம்.

பகவானே இந்தப் பலனை அடைவதற்கு உபாயமாகவும் ஆகிறான். ஏனெனில் அவன் இயற்கையான அன்பினால் இவ்வுடலை ஜீவனுக்குக் கொடுத்து முதலாக த்வயத்தைச் சொல்லும்படி பண்ணும் வரையில் எல்லாவற்றுக்கும் முதற்காரணமாக இருந்து அருள்புரிய வேண்டும் என்கிற தீர்மானத்தோடு மோக்ஷத்தைக் கொடுக்க நேர்காரணமாக இருக்கிறான். வேறு உபாயத்தை நாடாதவர்களுக்கு அந்த உபாயத்தின் ஸ்தானத்தில் தானே நிற்கின்றான்.

இங்கு அங்கங்களுடன் ப்ரபத்தி செய்வதற்கு நடாதூரம்மாள் சுருக்கமாக அருளிச் செய்திருக்கிறார். "தொன்று தொட்டு தேவரீருக்கு வேண்டாததைச் செய்து இந்த வாழ்க்கையில் சுடுபட்டேன். இன்றுமுதல் அனுகூலமாக நடந்து கொள்வேன். எதிராகச் செய்யமாட்டேன். தேவரீரைப் பெறுகைக்கு என் கையில் ஒரு முதலில்லை. தேவரீரையே உபாயமாகப் பற்றினேன். தேவரீரே உபாயமாக வேண்டும். வேண்டாததை நீக்கவோ வேண்டியதைப் பெறவோ எனக்கு இனி எந்த பொறுப்பும் இல்லை" என்றார்.

இந்த ஐந்து அங்கங்களும் ஒரே தடவைதான் செய்வது ப்ரபத்திக்கு அவச்யமானது. ஆனால் இப்படி எம் பெருமானுக்கு அனுகூலமாயிருப்பது முதலியது எப் பொழுதும் இவனுக்கு இருக்க வேண்டியதாயினும் அது ப்ரபத்தியின் பலன்தான். ப்ரபத்திக்கு அங்கங்கள் ஆக மாட்டாது. ஆகையால் இந்த ஜீவன் இவ்வுடலுடன் இருக்கும் வரையில் குற்றமின்றி எம்பெருமானுடைய கைங்கர்யத்தையும் இச்சரீரம் போகும் பொழுது மோக்ஷத்தையும் வேண்டி ப்ரபத்தி பண்ணுகின்றவர்கள் சிறந்தவர்கள்.

## க்ருத க்ருத்யத்யாதிகாரம்

இவ்விதமாகப் ப்ரபத்தி என்கிற உபாயத்தைச் செய்தவன் இந்த ப்ரபத்தி செய்தபிறகு இதனுடையப் பலனைப் பெறுவதற்காக இவன் மீண்டும் செய்யவேண்டியது எக்காலத்திலும் வேறு ஒன்றும் கிடையாது. இவன் எந்தப் பலனை வேண்டி ப்ரபத்தி செய்தானோ அதை ஒரு முறைக்கு மேல் மறுமுறை செய்யக்கூடாது. ஒரே தடவை செய்து அவன் கோரின பலத்துக்கு உரிமையைப் பெற்றுவிடுகிறான். எம்பெருமானும் தன்னிஷ்டப்படி நடக் கக்கூடியவனாயும் உண்மையைக் கைப்பிடிப்பவனாயும் இருப்பதால் அவனே பலனைக் கொடுப்பவனாகையாலும் அவன் "இனி நீ துக்கப்படாதே" என்று அருளிச் செய்துவிடுகிறான். ஆகையால் ப்ரபத்தி பண்ணினவன் கவலையற்றவனாக ஆகிறான். "என் ஒருவனையே சரணமாக அடைவாயாக" என்று கூறியபடி எம்பெருமானும் உபாயமாக ஏற்றுக்கொள்ளப்பட்டு அந்த ஸர்வேச்வரன் தானும் "நான் உன்னை எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுவித்து மோக்ஷமளிப்பேன்" என்று தீர்மானித்தபடியாலே இவ்விதமாக நம்பக் கூடியவனாயும், காப்பாற்றும் திறனுள்ள வனாயும், உபாயமாகவும் உள்ள ஸர்வேச்வரனைப்

பார்த்துத் தனக்குப் பலன் கிட்டுவதில் இந்த ஜீவாத்மா எவ்விதமான ஆனந்தமும் இல்லாமல் இருக்கின்றான். பயமற்றுமிருக்கின்றான். ஒரு ஏழை தன் முயற்சி இல்லாமலேயே புதையல் கிடைத்தால் அதைத் கண்டு மகிழ்வது போல் இந்த மோக்ஷத்துக்காகப் ப்ரபத்தி பண்ணினவனும் தான் பெறப்போகும் பேரின்பத்தை நினைந்து மனதில் சந்தோஷப்படுகிறான்.

ப்ரபத்தி பண்ணியவன் வேத சாத்திரங்களில் கூறப்பட்டத் தனது வர்ணத்திற்கும் ஆச்ரமத்திற்கும் ஏற்ற கர்மாக்களைச் செய்யவேண்டியது அவச்யமானாலும் அந்த கர்மாக்களில் ப்ரும்மா, ருத்ரன் முதலிய வேறு தேவதைகளைப் பூஜிப்பதாக அது தோன்றினாலும் உண்மையில் அவர்களுக்கும் அந்தர்யாமியான எம் பெருமானைத்தான் இவன் பூஜிக்கின்றான். அந்த வேறு தேவதைகள் பெயர்களும் நேராகவே எம்பெருமானையே குறிக்குமென்று ப்ரும்ம சூத்திரம் கூறுகின்றது. இந்த ப்ரபன்னன் ப்ரபத்தி பண்ணின பிறகு எம்பெருமான் தவிர வேறு எந்த தேவதைக்கும் உட்பட்டவனுமில்லை. அவர்களைப் பூஜிப்பவனுமில்லை. இவன் எம்பெருமான் ஒருவனைத்தான் பூஜிப்பான். மோக்ஷத்தில் எம்பெருமானுக்கு முக்தர்கள் கைங்கர்யம் செய்வது நேரில் எம்பெருமானுடைய அபிப்ராயத்தை அறிந்து செய்வது போல் இங்கு இந்த ப்ரபன்னன் ஸர்வேச்வரன் கட்டளையாயும் விருப்பமாயும் வேதங்களில் கூறப்பட்டிருப் பவைகளைப் பின்பற்றி அவனுடைய கைங்கர்யங்களை இங்கே செய்கிறான். ஆகையால் இவன் செய்த உபாயம் பூர்த்தி அடைந்ததும் இவன் கோரின பலன் கிடைப்பது நிச்சயமாகையாலும் இவன் கவலையற்று இனிச் செய்யவேண்டிய உபாயம் ஒன்றுமில்லை என்று நிம்மதியாக இருக்கின்றான். இவ்வாறு இந்த ப்ரபன்னனுடைய எண்ணம் நிறைவேறி அவனுடைய நிம்மதியான நிலைமை சாத்திரங்

களும் அந்தச் சாத்திரங்களில் நம்பிக்கை உள்ள ஆசார்யர்கள் முதலியவர்களாலும் புகழ்ந்து கூறப்பட்டிருக்கிறது.

இக்கருத்தையே ஸ்ரீபாஷ்யகாரரும் தாம் அருளிச் செய்த சரணாகதி கத்யத்தில் அருளிச் செய்திருக்கிறார். காலவரம்பின்றி எம்பெருமானுடைய கட்டளையான வேதசாத்திரங்களில் கூறியவைகளை மீறி நடந்ததால் எம்பெருமானுடைய சீற்றத்திற்குட்பட்டு நாம் வாழ்க்கையில் உழன்று கொண்டிருந்தோம். எம்பெருமானுடைய இயற்கையான கருணை நம்மை ரக்ஷிக்கத் தகுந்த வேளையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. அதனால் நல்ல ஆசார்யனுடைய கடாக்ஷம் அல்லது கருணை ஏற்பட்டு அவர் உபதேசித்த த்வய மந்திரத்தை அவர் சொன்ன பிறகு சொல்லி ப்ரபத்தி செய்துவிட்டோம். இவ்விதம் ப்ரபத்தியை அனுஷ்டித்த பிறகு சரண்புகுந்தவனைக் காப்பாற்றும் எம்பெருமானைச் சந்தோஷப்படுத்த வேறொன்று வேண்டியதில்லை. எம்பெருமானும் இந்த சரண்புகுந்தவன் முன்பு செய்த குற்றங்கள் எல்லாம் பொறுத்துக் கொண்டு பின்பு குற்றம் செய்தால் அவனைத் திருத்திப் பணி கொள்கிறான். பகவான் தன்னுடைய பொறுப்பாகவே தானே இந்த ஜீவனை ரக்ஷிக்கின்றான். இவ்விதமாக எண்ணத்தோடு 'நீ கவலையற்று இரு' என்று நமக்கு கூறி இருக்கின்றார்.

கீதாசார்யனும் சரமச்லோகத்தில் கடைசியாக "துக்கிக்காதே" என்று சரணாகதியை ஏற்றுக் கொள்பவனே அருளிச் செய்தார். ப்ரபத்திக்கு முன் உனக்கு இருந்ததாயும் அவ்வாறு அவச்யம் இருக்க வேண்டியதுமான துக்கம் ப்ரபத்தி பண்ணின பிறகு உனக்கு வேண்டாம் என்ற கருத்துடன் எம்பெருமான் கீதையில் கடைசியாக அருளிச்செய்தார். ஆகவே ப்ரபத்திக்குப் பிறகு இவன் செய்யவேண்டியது மோக்ஷத்தைப் பெறுவதற்காகவன்றி வேறில்லை.

க்ருத க்ருத்யாதிகாரம் முற்றிற்று.

## ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநாதிகாரம்

ப்ரபத்தி எம்பெருமானிடம் செய்தவன் தனது நிஷ்டையை, அதாவது தனது அசைக்க முடியாத கொள்கையை அறிய வேண்டியது அவச்யம். அந்த நிஷ்டை மூன்றில் வேண்டும். அதாவது தனது ஸ்வரூபத்திலும், தான் செய்த உபாயத்திலும், தான் பெறப்போகும் மோக்ஷமென்கிற புருஷார்த்தத்திலும் இவனுக்கு. நிஷ்டை அதாவது தீர்மானமான அறிவு வேண்டும்.

முதலில் தன் ஸ்வரூபத்தில் தனக்கு நிஷ்டை உண்டென்று அறிவதெப்படி என்பதைப் பார்க்கலாம். பிறரால் தனக்கு ஏதாவது அவமானம் முதலியவை ஏற்பட்டால் அதை அவர்கள் தனது உடல் முதலியதைப் பற்றி குற்றம் கூறினார்கள் என்றும் அது தனது ஸ்வரூபத்தில் தட்டாது என்றும் அறிந்து அதற்காக எந்த விதமான வருத்தமும் படக்கூடாது. "ஒருவன் திட்டினால் திட்டப்படுபவனுடைய பாபம் இவனுக்கு வந்துசேரும்." என்று சாத்திரம் கூறுவதால் ஒருவன் தன்னை தூஷித்தால் தன்னுடைய பாபத்தை அவன் வாங்கிக் கொண்டான் என்று அந்தப் புத்தி கெட்டவனிடம் கருணை கொள்ளவேணும். மேலும் தன்னுடைய குற்றங்களைத் தான் அறிந்து அவைகளை நீக்கவேண்டியது அவசிமாகையால் அந்த விதம் தன்னை தூஷித்தவன் தனக்குக் குற்றங்களை எடுத்துக்காட்டி அவைகளை நீக்க உதவி செய்தார் என்று அவனிடம் நன்றி உள்ளவனாகவும் இருக்க வேண்டும். எம்பெருமானுக்கு எல்லா ஆத்மாக்களும் அடங்கியவர்கள். இவர்கள் கர்மாவுக்கும் வசப்பட்டவர்கள். ஆகவே இந்த ப்ரபன்னன் தன்னைத் தூஷிக்கின்றவனையும் எம்பெருமான் இந்த நிலைமையில் நிறுத்தி எம்பெருமான் ஆனந்தப்படுகிறான் என்று நினைத்து அந்த எம்பெருமானால் தூண்டப்பட்டுத் தன்னை இவன் தூஷிக்கிறான் என்று நினைத்து தன்னை தூஷிப்பவனிடம் மனதில் எவ்விதமான கெட்ட எண்ணமும்

உண்டாகக்கூடாது. இதனால் நம்முடைய பாபங்கள் நீங்கத் தொடங்கின என்று மனதில் மகிழ்ச்சியே ஏற்பட வேண்டும். இப்படிப்பட்ட அறிவு உண்டானால்தான் தன் ஸ்வரூபத்தைத்த தான் அறிந்தான் என்று தீர்மானிக்கலாம். இவனுடைய ஸ்வரூபம் அசித்துக்களைக் காட்டிலும் வேறுபட்டது. எல்லாப் பிராணிகளிடமும் நல்லெண்ண முள்ள அறிவைப் பெற்றுள்ளது, எவ்விதமாகவும் எளிமையை உணர்ந்திருக்கும் எம்பெருமானுக்கு எந்த விதத்திலும் அடங்கியுள்ளது. இவ்விதமான தன் ஸ்வரூபத்தை நன்கு அறிந்ததாக இதன் மூலமாக அறியலாம்.

அடுத்தபடியாக உபாயத்தில் நிஷ்டை அறியும் விதம். தனக்கு ஸர்வேச்வரனைத் தவிர வேறு ஒருவரும் தான் உள்பட தஞ்சம் இல்லை என்றுணரவேண்டும். தனக்கழிவே ஏற்படும்படி பயத்திற்கு இடம் உண்டானாலும் பயப்படக் கூடாது. இவன் இறந்தபிறகு என்ன துக்கமோ கஷ்டமோ ஏற்படுமோ என்று கவலைப்பட அவசியம் இல்லாமல் இவன் மோக்ஷத்தை இந்த சரீரம் நீங்கியதும் அடைவது நிச்சயமாகையால் அந்தத் திடமான நம்பிக்கையோடு இவன் கவலையற்று சந்தோஷமாக இருக்வேண்டும். எம்பெருமான் தன்னைக் காப்பாற்றுவதாக தீர்மானித்துவிட்டான் என்கிற நம்பிக்கையுடன் தைரியமாக இருக்க வேண்டும். காப்பாற்றும் பொறுப்பை ப்ரபத்தி செய்து எம்பெருமானிடம் வைத்து விட்டபடியால் இவனுக்கு இனி யாதொரு பொறுப்பும் இல்லை என்கிற எண்ணம் இருக்கவேண்டும். ஆகவே தனக்கு வேண்டியதைச் செய்வதும், வேண்டாததை விலக்குவதும் எம்பெருமான் பொறுப்பு என்றும் இருக்கவேண்டும். இப்படிப்பட்ட அறிவு இருக்குமாகில் எல்லாப் பலன்களையும் கொடுக்கக்கூடிய ப்ரபத்தி என்கிற உபாயம் நிலைத்தது என்றறியலாம்.

மூன்றாவதாக, புருஷார்த்தத்தில் ப்ரபன்னனுடைய நிஷ்டை அறியப்படுவது எவ்விதம் என்று பார்க்கலாம்.

பிறப்பும், இறப்பும் எவ்விதம் நமக்கு வசப்பட்டதில்லையோ அவ்விதமே வாழ்க்கையும் நமது இஷ்டத்தில் இல்லை என்று உணர்ந்து முன் வினையின் பயனாக ஈச்வரன் நடத்திக் கொடுக்கும் உலக வாழ்க்கையில் கவலையற்று இருக்க வேண்டும். அப்படி கவலைப்பட்டாலும் ஈசுவரன் நினைக்கிறபடிதான் நடக்குமே தவிர இவன் இஷ்டப்படி நடக்காது என்றுணரவேண்டும். தனது முயற்சி இல்லாமலே கிடைக்கும் பொருள்களையும், அவைகள் சாத்திரங்களால் விலக்கப்படாமல் இருந்தால். அவைகள் ஈசுவரனால் தனக்கு அளிக்கப்பட்டவை என்றெண்ணி விலக்காமல் ஏற்றுக் கொண்டு அவைகளை அநுபவிக்கலாம். இப்படிக் கிடைக்கும் பொருள்களில் ஸந்தோஷமோ, துக்கமோ இருக்கக்கூடாது. எம்பெருமானுடைய கைங்கர்யத்திலேயே ஆசை இருக்கவேண்டும். சீக்கிரமாக தான் கோரின மோக்ஷம் கிடைக்கவேண்டும் என்று ஆசைப்படவேண்டும். இப்படிப் பட்ட நிலைமை வந்தால் புருஷார்த்தத்தில் தீர்மானமான பத்தி உண்டு என்று அறியலாம். இவ்விதம் தன்ஸ்வரூபத்திலும், தான் செய்த ப்ரபத்தியாகிற உபாயத்திலும் நாம் அடையப்போகும் மோக்ஷம் என்கிற புருஷார்த்தத்திலும் தனது நிலைமை அல்லது நிஷ்டையை உணர்ந்தவனுக்கு எப்படிப்பட்ட பயத்தை உண்டுபண்ணக் கூடியவைகளாலும் பயம் உண்டாகாது. அதுபோல் உயர்ந்த இவ்வுலக இன்பங்களில் ப்ரீதியும் உண்டாகாது. ஆனால், பெரியோர்களிடம் ஏதாவது தனக்கு அபசாரமோ, குற்றமோ நேர்ந்துவிடுமோ என்று மாத்திரம்தான் பயப்படுவான். அவ்விதமே எம்பெருமானுக்கு தன் ஸ்வரூபத்திற்கேற்ற கைங்கர்யத்தில் ப்ரீதியையும், சந்தோஷத்தையும் பெறுவான். எதிர்பாராமல் கஷ்டமோ, சுகமோ ஏற்பட்டாலும் அதனால் பயமோ, ப்ரீதியோ இவனுக்கு இருக்காது.

ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநாதிகாரம் முற்றிற்று.

## உத்தரக்ருத்யாதிகாரம்

இவ்விதமாக ப்ரபத்தி பண்ணியவன் தன் கடமையைப் பூர்த்தி செய்துகொண்டும் தனது ஸ்வரூபம், உபாயம் புருஷார்த்தம் இவைகளைப் பற்றிய தீர்மானமான அறிவையும் பெற்றுப் பிறகு தான் இவ்வுலகில் வாழும் வகையில் செய்யவேண்டியதை இப்பொழுது கவனிக்க வேண்டியது.

இந்த ப்ரபன்னன் மோக்ஷத்தைப் பெறுவதாக மறுமுறை செய்யவேண்டிய உபாயம் வேறு கிடையாது. வேறு உபாயத்தையோ, ப்ரபத்தியையோ மறுமுறை மோக்ஷத்திற்காகச் செய்யவும் கூடாது. ஆனால் இங்கே வாழும் நாள் சரீரம் முடியும்வரையில் செய்ய வேண்டியது தன் வாழ்க்கையில் இங்கும் இன்பம் பெறுவதற்காகவே எம்பெருமானுக்கு மோக்ஷத்தில் முக்தர்களுடைய தொண்டு போல் இங்கும் சில தொண்டுகள் உண்டு. இந்த செய்கைகளுக்கு எம்பெருமானுடைய உகப்பே ப்ரயோஜனம். ஆனால் சாத்திரங்களில் சொல்லியவாறு காலத்துக்கு ஏற்றதாக இருக்கவேண்டும். பின் இவன் மோக்ஷத்தை அடைந்து செய்யப்போகும் எம்பெருமானுடைய கைங்கர்யத்திற்குத் தொடர்பு ஏற்படும்படி இங்கும் கைங்கர்யங்கள் நடக்கக்கூடியதாக இருக்கவேண்டும்.

சிறப்பு ப்ரபத்தி செய்ததை மறக்காமலிருப்பதற்காக எப்பொழுதும் சொல்ல வேண்டியவைகளில் முக்கியம் த்வய மந்திரம். எம்பெருமான் திருவுள்ளம் என்றும் தனக்கு அனுகூலமாக விலக்கப்பட வேண்டியவைகளில் முக்கியமானது பாகவதர்களிடம் அபசாரம். மேலும் முக்கியமாகச் செய்ய வேண்டியவைகள் சாத்திரங்களுக்குக் கீழ்ப்பட்டு பகவானுக்கும் பாகவதர்களுக்கும் கைங்கர்யங்கள்.

அதாவது இங்கு பகவானுக்குச் செய்யும் கைங்கர்யங்கள்

இரண்டு வகைப்படும். ஒன்று ஆக்ஞா கைங்கர்யம். அதாவது எம்பெருமானுடைய கட்டளைப்படி செய்வது. அவைகள் சாத்திரங்களில் கூறப்பட்டிருக்கும் நித்யமான ஸந்த்யாவந்தனம் போன்ற கர்மாக்கள். இவைகளும் கைங்கர்யங்கள். இவைகளைச் செய்யாவிட்டால் தண்டனை உண்டு. ப்ராயச்சித்தம் செய்யவேண்டும். மற்றொன்று, அனுஜ்ஞா கைங்கர்யம். அவைகள் எம்பெருமானுக்கு அர்ச்சையில் கோவில்களில் புஷ்பம் சாற்றுவது முதலிய கைங்கர்யங்கள். இவைகளை செய்யாததால் குற்றமில்லை. ஆனாலும் இந்த கைங்கர்யங்களையும் சாத்திரங்களில் கூறியிருக்கும் முறைப்படிதான் செய்யவேண்டும். செய்யா விட்டால் குற்றமில்லாவிட்டாலும் முறைதவறிச் செய்தால் குற்றமாகும். இந்த கைங்கர்யங்களால் எம்பெருமானுக்கு ஸந்தோஷம் உண்டாகி இவனிடம் ப்ரீதி ஏற்படும். தான் ஏற்கனவே தனது ஸ்வரூபத்திற்குத் தக்கவாறு சில விஷயங்களைத் தெளிவாக அறிந்திருந்தாலும் தனக்கு இனித் தெரியவேண்டியது ஒன்றுமில்லை என்று இராமல் மேலும் தனக்குத் தெளிவற்ற விஷயங்களையும் அறிந்துகொள்ள வேண்டும். அதனால் தனக்கு எம்பெருமானைப் பற்றிய அனுபவம் பூரணமாகும். எம்பெருமானிடம் நம்பிக்கையும் இருந்து கொண்டே இருக்கும். எம்பெருமானிடம் ப்ரபன்னன் மற்ற வேறு எதையும் வேண்டக்கூடாதானாலும் அவனுடைய திருவடிகளில் பக்தியையும், ஞானத்தையும் வேண்டலாம்,அதில் குற்றமில்லை. தனக்கு பகவானிடம் மனதுக்கு ப்ரீதி பிறப்பதற்காக நல்ல பரமேயகாந்திகளிடம் நல்ல விஷயங்களைக் கேட்கவேண்டும். நல்லவர்களுடைய சேர்க்கையால் நல்ல அறிவு ஏற்படும். ஆகையால் நல்லவர்களுடன் தொடர்பு அவசியமாகும். இவன் தனது ஜாதிக்கும். ஆச்ரமத்திற்கும், கோத்ரத்திற்கும், குணங்களுக்கும் தக்கவைகள் எவை என்று அறிந்து அவைகளை அனுஷ்டிக்க வேண்டும். தான் நல்ல அனுஷ்டானத்தைச் செய்வதால்

சிறந்தவன் என்று தன்னைப் பற்றி மேன்மையாகவும் பிறரைத் தாழ்மையாகவும் நினைத்துக் கர்வப்படக்கூடாது. அது இவனைப் படுகுழியில் தள்ளிவிடும். தனக்குப் பகவானுடைய விசேஷமான கருணையால் நம்மாழ்வார், நாதமுனிகள் முதலியவர்களுக்கு கிடைத்தமாதிரி ஸ்ரீம் பெருமானை நேரில் சேவிப்பது முதலிய பலன் கிடைக்கும் வரிசைகள் நேர்ந்தாலும் அது தனது முயற்சியால் வந்ததாக எண்ணாமல் எம்பெருமானுக்குத் தான் கீழ்ப் படிந்தவன், அவன் திருவுள்ளத்தால் நேர்ந்தவைகள் என்று நினைத்துக் தனது எளிமையை என்றும் கடைப்பிடித்திருக்க வேண்டும்.

முன்பு தான் நல்ல வழியில் நடக்காததையும் அதனால் எம்பெருமானுடைய கைங்கர்யத்தை இழந்திருந்ததையும் நினைத்து மனம் கலங்காமல் எம்பெருமானுடைய அவதாரத்தின் ரஹஸ்யங்களை எல்லாம் ஆசார்யர்கள் உபதேசிக்க கீதை முதலியதன் மூலம் அறிந்து மனதில் தேறுதல் உண்டாகும். முன் தனக்கிருந்த நல்வழியில் செல்லத் தகுதியுற்ற தன்மையைக் கண்டு துக்கப்படாமல் இப்பொழுது எம்பெருமான் கருணையால் தனக்கேற்பட்ட நல்லபுத்தியைக் கண்டு மகிழ்ந்து இனி ஓடும் தண்ணீரை அணைக்கட்டித் தடுத்துப் பாய்ச்சுவது போல் எம்பெருமானுடைய ஆஜ்ஞை அனுஜ்ஞையாகிய கைங்கர்யங்கலில் ஈடுபடவேண்டும். ஆகாரம் சாப்பிடுவதெல்லாம் ஸாத்விகமான வஸ்துவாக இருக்கவேண்டும். அதனால் பகவானை அனுபவிப்பதில் எல்லா இந்திரியங்களும் தகுதியுள்ளவைகளாக ஆகும். தகாத விஷயங்களில் அவைகள் செல்லாமலிருக்கும். சாத்திரத்திற்குக் கட்டுப்பட்டு ஆஜ்ஞைகைங்கர்யம் அனுஜ்ஞை இவைகளைச் சாத்திரத்தில் குறிப்பிட்ட காலம் முதலிய நியமங்கள்படி செய்யவேண்டும். வியாதியுள்ளவன் வியாதி நீங்கப் பால் அருந்துவதுபோல் இல்லாமல் வியாதி இல்லாதவன் தனக்குத் தான் வேண்டாமலே கிடைத்த

பாலை அருந்துவதுபோல் இந்த கைங்கர்யங்களைச் செய்ய வேண்டும். அர்ச்சையில் எம்பெருமான் எழுந்தருளி இருக்கின்ற கோவில்களில் சென்று அந்த எம்பெருமானின் பிம்பத்தில் பூரணமான பகவத்ஸ்வரூபம் இருப்பதாக நம்பிக்கையுடன் சேவிக்கவேண்டும். திருவடி முதல் திருமுடி வரை எம்பெருமானை அப்பிம்பத்தில் சேவிப்பதால் எல்லா பாவங்களும் நீங்கும். இவன் சேவிப்பதால் புண்ணியம் பெறுகிறான். மேலும் புத்தியில் தவறான எண்ணங்களும் சாத்திரங்களில் நம்பிக்கைக் குறைவு இவைகள் இருந்தால் அவையெல்லாம் எம்பெருமானை அர்ச்சாரூபத்தில் சேவிப்பதால் நீங்கும். இந்த அர்ச்சா ரூபத்தில் எம்பெருமானை ஆச்ரயிப்பவன் நினைக்கிறவாறு மனதினாலும், வாயாலும் சொல்லமுடியாத கருணையுடன் அவனுக்கு அடங்கியருக்கிறான். எம்பெருமான். இவனுடைய மனதைக் கவர்ந்தும் விடுகிறான். பகவானை ஒரு பதிவ்ரதை தன் கணவனை உபசரிப்பது போலும், தாய் குழந்ததையை வளர்ப்பது போலும், ஆசார்யன் சிஷ்யனிடத்தில் அன்பு கொள்ளுவது போலும், நண்பனைப் போலவும் பல வகையிலும் அன்பு வைத்து நடந்துகொள்ள வேண்டும். சாஸ்திரப்படி வழிதப்பாமல் சம்பாதித்த பொருள்களைக் கொண்டே எம்பெருமானுக்கு உபசாரங்கள். செய்ய வேண்டும். இவ்வாறு பகவானுக்குக் கைங்கர்யமும பாகவத கைங்கர்யமும் தனக்கு கிடைத்ததற்கு முக்கிய காரணமானது நல்ல ஆசார்யனின் சம்பந்தம் தனக்குக் கிடைத்ததுதான் என்ற நம்பிக்கை இருக்க வேண்டும். தனக்கு அவ்வாசார்யார்கள் செய்த உபதேசங்களால்தான் இந்த விதமான கைங்கர்யங்கள் கிடைத்தன என்று அவர்களிடம் நன்றி உள்ளவனாகவும் இருக்கவேண்டும். இவ்வாறு இவனுக்குத் தற்செயலான புண்ணியமும் முதலாக ப்ரபத்தி செய்ததும் அதன்பின் இதுவரையில் குறிப்பிடப்பட்ட ப்ரபத்திக்குப் பின் செய்ய வேண்டிய செய்கைகளும்

முக்கியமாக எம்பெருமானுடைய இயற்கையான கருணையால்தான் என்று அறிந்து அந்தப் பகவானிடத்திலும் நன்றி இருக்க வேண்டும்.

ப்ரபத்தி பண்ணின பிறகு மனம், வாக்கு, உடல் என்கிற மூன்றாலும் ப்ரபத்தி செய்தவன் செய்ய வேண்டிய வைகளையும் விலக்க வேண்டியவைகளையும் சுருக்கமாக இவ்விதம் அறியவும், மோக்ஷம் என்கிற புருஷார்த்தத்தில் ஆசை தொடர்ந்து நின்று கெடாமல் இருப்பதற்காக மறக்கவேண்டியவைகளில் முக்கியமானது விஷயங்கள் அல்லது ்பலன்களில் ஆசை நன்றி கெடுவது நேராமைக்காக நினைக்க வேண்டியவைகளில் முக்கியம் ஆசார்யன் கடாக்ஷம் தனக்குக் கிடைத்ததும் அவர் செய்த உபகாரமும், தன்னுடைய எளிமையை மறவாமல் தொடர்ந்து பெற்றிருப்பதாக, சொல்லாமல் இருக்கபட வேண்டிய வைகளில் முக்கியம் தன்னைப்பற்றிய சிறப்பு. பிரபத்தி செய்ததை மறக்காமல் இருப்பதற்காக எப்பொழுதும் செய்ய வேண்டியவைகளில் முக்கியம் த்வய மந்திரம். எம்பெருமான் திருவுள்ளம் என்றும் தனக்கு அனுகூலமாக இருப்பதற்காக விலக்கப்பட வேண்டியவைகளில் முக்கியமானது பாகவதர் களிடம் அபசாரம். மேலும் முக்கியமாக செய்ய வேண்டி யவைகள் சாஸ்திரங்களுக்குக் கீழ்ப்பட்டு பகவானுக்கும் பாகவதர்களுக்கும் கைங்கர்யங்கள்.

உத்தரக்ருத்யாதிகாரம் முற்றிற்று.

* * * * * *

## புருஷார்த்த காஷ்டாதிகாரம்

பகவானுக்குக் கைங்கர்யம் செய்வதுபோல் பாகவதர் களுக்கும் கைங்கர்யம் செய்ய வேண்டும் என்று முன் அதிகாரத்தில் கூறப்பட்டது. அவ்வாறு கூறுவதற்கு காரணம் பின் வருமாறு அறிய வேண்டியது.

இந்த ஜீவன் சேஷன் என்றும் எம்பெருமான் சேஷி என்றும் சாத்திரம் கூறுகிறது. இதற்குப் பொருள் வேதார்த்த ஸங்க்ரஹத்தில் ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச் செய்துள்ளார். அதாவது அயலானுடைய ப்ரயோஜனத்தையே தனக்கு முக்கியமான ப்ரயோஜனமாக உடையவன் எவனோ அவன் சேஷன். அந்த ப்ரயோஜனத்தைப் பெறுகிறவன் சேஷி என்பதாகும். ஆகவே பகவானுக்கு சேஷனான ஜீவாத்மா பரமாத்மாவிற்கு ஒரு ப்ரயோஜனத்தைச் செய்தால்தான் இவன் அவனுக்கு சேஷனாவான். அந்த ப்ரயோஜனம் அந்தந்தப் பொருளின் திறமையைப் பொறுத்தது. இப்பொழுது ஜீவனுக்கு ஈச்வரனைப் பற்ற செய்யக்கூடிய ப்ரயோஜனம் எதென்றால் அவனுக்கு இவன் சரீரமாக இருந்து கொண்டு நடத்துவதாகும். ஆனால் அந்த சரீரமாக இருப்பது ஜீவனுக்குத் தனிப்பட்டதில்லை. அசித்துக்கும் இது பொது. ஆகையால் இந்த ஜீவன் தனிப்பட்ட முறையில் செய்யும் ப்ரயோஜனம் இவனுடைய அறிவின் மூலமாகும்.

இவ்வாறு இந்த ஜீவாத்மா செய்வதான கார்யங்கள் சாத்திரங்களுக்குட்படாமல் அவைகளுக்கு எதிராகச் செய்தால் தவறுக்குத் தண்டனையே அளிக்கும் ஈசுவரனுக்கு இவன் விளையாட்டை மட்டும் அவனுக்கு ப்ரயோஜனமாக்கி அந்த விதமாக அவனுக்கு உபயோகப் படுகிறான். சாத்திரங்களுக்குக் கட்டுப்பட்டுச் செய்தால் ஈசுவரனுக்கு மகிழ்ச்சியை உண்டாக்கி அவனுடைய தாராளத்தன்மை முதலிய குணங்கள் வீணாகாதபடி செய்து அவனாலேயே கொண்டாடப்படுவான். அவ்வாறே நித்யரும், முக்தரும் ஈச்வரனுடைய அபிப்ராயத்தை நேரில் அறிந்து அவனுடைய கைங்கர்யங்களைச் செய்வதால் எம் பெருமானுக்கு ப்ரயோஜனப்படுகின்றார்கள். இவ்விதமே சாத்திரங்கள் எம்பெருமானுடைய கட்டளைகள் ஆகையால் அவைகள் மூலம் அவனுடைய அபிப்ராயத்தை அறிந்து

ப்ரபன்னர்களும் அதேமாதிரி கைங்கர்யங்களைச் செய்து அவனுக்கு உபயோகப்படுகிறார்கள். சாத்திரங்களுக்கு எதிராகச் செய்வதால் ஈசுவரனுக்கு விளையாட்டை மட்டும் கொடுத்து தனக்கு இந்த ஜீவாத்மா கெடுதலைப் பெறுகிறான். முக்தனானால் நேரில் ஈசுவரனுடைய அபிப்ராயத்தை அறிந்தும் இவ்வுலகத்தில் பக்தனாக இருக்கும்போது சாத்திரங்கள் மூலம் அவனுடைய அபிப்ராயத்தை அறிந்தும் செய்யும்போது எம்பெருமானுக்கு விளையாட்டு முதலியமகிழ்ச்சியை உண்டாக்குவதுடன் தானும் தனக்கிஷ்டமான மகிழ்ச்சியைப் பெறுகிறான். ஆகவே ஜீவாத்மா தன் பக்தியோடு ஒரு காரியம் செய்யும்பொழுது தன்னுடைய ப்ரயோஜனமும் அதனால் நிறைவேறு மானாலும் அதுவும் ஈச்வரனுடைய எண்ணத்திற் கேற்றபடி வரவேண்டியதாகையால் ஈச்வரனுடைய அபிப்ராயத்தை ஆராய்ந்து பார்த்தால் பாகவதர்களுக்குச் செய்யும் கைங்கர்யமே அவனுக்கு எல்லாவற்றிலும் மேம்பட்டதென்று பல புராணச்லோகங்கள் மூலம் தெரிகின்றது. அரசனுக்கு அவனுடைய குமாரனை மகிழ்விப்பதால் உண்டாகும் மகிழ்ச்சி போல் பாகவத கைங்கர்யத்தால் எம்பெருமானுக்கு அதிகமான ஸந்தோஷம் என்று அப்புராணங்கள் மூலம் தெரிவதால் எம்பெருமானுக்கு சேஷனான இந்த ஜீவாத்மாவிற்குப் பாகவத கைங்கர்யம் அவசியம் என்று தெளிவாக அறியப்படுகிறது. மேலும் பாகவதர்களுக்கு திருப்தி அளிக்கும் கார்யம் அனைத்தும் அவர்களுக்கு அந்தர்யாமி உள்ளிருக்கும் எம்பெருமானுக்கே திருப்தி யளிக்கும். இதுவும் எம்பெருமானுடைய ஆராதனமேயாகும்.

பாகவதர்களுக்குக் கைங்கர்யம் செய்யவேண்டுமென்று சொல்லப்படுவதால் இந்த ப்ரபன்னனும் பாகவதனா கையால் இவர்கள் இருவருக்குள் ஒருவருக்கொருவர் சேஷனாயும், சேஷியாயும் ஆக ஏற்படக்கூடியதால் இது

முரண்பட்டதாகாதா என்று தோன்றும். ஒருவருக்கொருவர் உலகத்தில் உபகாரம் செய்வதுபோன்று இதில் ஒன்றும் முரண்பாடில்லை. ஒரு பாகவதருக்கு மற்றொரு பாகவதர் கைங்கர்யம் செய்யும்பொழுது, கைங்கர்யம் செய்யும் பாகவதர் மற்றவருக்கு சேஷனாக ஆகின்றார். கைங்கர்யத்தை ஏற்றுக்கொண்ட பாகவதரே மற்றொரு சமயம் இந்த கைங்கர்யம் செய்த பாகவதருக்குத் தொண்டு செய்தால் அப்பொழுது இவர் அவருக்கு சேஷனாக ஆவார். ஆகவே பாகவதர்கள் ஒருவருக்கொருவர் தொண்டு செய்வதில் ஒன்றும் தவறில்லை. அவ்வாறு செய்வதுதான் சரியானது ஆகையால் சாஸ்திரம் ஒன்றும் தவறுதலாகக் கூறவில்லை. எம்பெருமானுடைய திருவுள்ளப்படி பாகவதர்களுக்குள் சேஷனாயும், ஸ்வாமியாயும் இருப்பது உசிதமானது. ஆகவே பாகவத கைங்கர்யம் எம் பெருமானுக்கே மிகவும் ஸந்தோஷத்தைக் கொடுக்கக் கூடியது. ஒரு பாகவதருடைய குணங்களைக் கண்டு. இளைய பெருமாள் எவ்விதமாக பெருமாளுடைய குணங்களில் ஈடுபாடு கொண்டு தம்பி என்கிற நிலைமையைவிட தாஸன் என்கிற நிலையை விருப்புற்றுச் செய்தாரோ, அவ்விதமே இவரும் அந்தப் பாகவதருக்குக் கைங்கர்யம் செய்தால் இது எம்பெருமானுடைய திருவுள்ளத்தால் மட்டுமின்றி, தானே விரும்பிச் செய்ததால் அதிகமான மகிழ்ச்சியைக் கொடுக்கும். இவ்வாறு பாகவதர்களுக்கு ஏற்படும் ஸ்வாமி அல்லது சேஷி என்கிற நிலைமை எம்பெருமானுடைய சுதந்திரத் தன்மையுடன் கூடியிருப்பதால்தான் ஏற்படுகிறது. இவ்விதமாக ப்ரபன்னன் பாகவதர்களைப் பற்றிய சேஷனாயும், சேஷியாயும் நிலைமை பெறுவது எம் பெருமானுடைய சந்தோஷத்திற்காகவே எம்பெருமான் திருவுள்ளவத்தாலேயே அவன் ஈசுவரன் என்கிற முறையால் ஏற்பட்டதுதான். இவ்வாறு தனது புருஷார்த்தத்தின் நிலைமையைத் தீர்மானமாக உணர்ந்து தனது நிலைமையை

நன்றாகத் தெரிந்து கொண்டவர்கள், பகவானிடமும், பாகவதர்களிடமும் அபசாரப்பட மாட்டார்கள். அவர் களுக்கு ஒரு துன்பமும் நினையார். சந்தேகப்பட மாட்டார்கள். எம்பெருமானைத் தவிர வேறு தேவதையை நாடார். தன் சுகத்துக்காகவோ, தன் சுதந்திரத்தால் சுகப்படுவதாக நினைத்தோ ஒன்றும் செய்யார். அவ்வாறு செய்வதோ, எண்ணுவதோ தவறு என்றறிவர். பாகவதர் களுடைய கிருபையே தனக்கு மிகவும் ப்ரயோஜனமுள்ளதாக அறிந்து கொள்வர். அவ்விதமே விரும்புவா.

புருஷார்த்தகாஷ்டாதிகாரம் முற்றிற்று.

* * * * * *

## சாஸ்த்ரீய நியமனாதிகாரம்

இவ்விதம் இந்த ப்ரபன்னன் எம்பெருமானுக்கு சேஷன் என்கிற தொடர்பின் மூலம் பகவானுக்கும், பாகவதர்களுக்கும் கைங்கர்யம் செய்ய வேண்டுமென்று கூறப்பட்டது. இந்த கைங்கர்யம் சாத்திரத்தைப் பின்பற்றியோ அல்லது பின்பற்றாமலோ என்று தெரிய வேண்டும். இந்த அறிவில்லாத நிலைமையில் வைக்கும் பூமியில் இருக்கின்ற இவனுக்கும் சாத்திரம்தான் அறிவை ஊட்டக்கூடியது. ஆகவே சாத்திரத்தையொட்டியே இவன் நடக்கவேண்டும். சாத்திரத்தில் எவ்விடத்தில் இவன் இஷ்டப்படி செய்யுமாறு கூறுப்பட்டிருக்கின்றதோ அதில் இவன் இஷ்டப்படி ஒன்றை பின்பற்றி நடக்கலாம். அது எவ்வாறு என்றால்:

எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யகாரர் இவ்வுலகை விட்டுத் திருநாட்டிற்கு எழுந்தருளும் சமயத்தில் அவருடைய சிடர்கள் படும் துன்பத்தையறிந்து அவர்களை அழைத்துத் தன்னுடன் அவர்களும் உயிரை விடக்கூடாதென்று

ஆணையிட்டார். அதனால் அவர்கள் கலங்கித் துயரம் ஓங்கத் தாங்கள் இனி செய்யவேண்டியது என்ன என்று விண்ணப்பித்தனர். எம்பெருமானார் அருளிச் செய்த வார்த்தை பின்வருமாறு:

ஒருவன் ப்ரபத்தி பண்ணிய பின்பு அவனைக் கடைத்தேறச் செய்யும் பொறுப்பு பகவானைச் சேர்ந்த தாகையால் இவனுக்கு இதைப் பற்றி எண்ணவேண்டிய அவசியம் இல்லை. பொறுப்பு உண்டென்று நினைத்து அதற்கு வேண்டியதை ஏதாவது செய்வானேயானால் இவன் செய்த ப்ரபத்தியானது பயனற்றுப்போய்விடும். பொய்யாக முடியும். இவனுடைய இவ்வுலக வாழ்க்கையும் இவன் செய்த வினைக்கு ஏற்றதாக நடக்குமாகையால் அதற்காகத் துக்கப்படுவதில் அர்த்தமில்லை. ,அவ்வாறு கவலைப் பட்டால் இவன் நாத்திகனாகி விடுவான். ஆகையால் இவ்வுலக வாழ்க்கைக்கோ, பிறகு அடையக்கூடிய நிலைக்கோ செய்ய வேண்டியது ஒன்றுமில்லை. ஆனால் இவன் விருப்பத்திற்கு ஏற்ப எது வேண்டுமானாலும் செய்யலாமோ என்றால் அது இவனது ஸ்வரூபத்திற்கு தகந்ததன்று. அவ்வாறு இவன் செய்யும் கார்யம் எதுவாகிலும் அது உபாயமான ப்ரபத்தியைப் பற்றியவரை எவ்விதமான ஸம்பந்தமும் இல்லாவிடினும் கைங்கர்யத்தைப் பற்றியவரை இச்செய்கைகளுக்கு ஸம்பந்தம் உண்டு.

இந்த ப்ரபன்னன் இவ்வுலகில் வாழும் காலம் முழுவதும் செய்ய வேண்டிய கைங்கர்யம் ஐந்து உண்டு. அவைகள் பின்வருமாறு:

ஸ்ரீ பாஷ்யத்தைப் படித்துப் பிறருக்கும் அதை எடுத்துச் சொல்லிப் பிரசாரம் செய்வது. அதற்குத் தகுதி இல்லாவிடில் ஆழ்வார்களுடைய அருளிச் செயல்களான திவ்யப்ரபந்தங் களைச் செவியுற்று அவைகளைப் பிரசாரம் செய்வது.

அதற்கும் தகுதியில்லையெனில் திவ்யதேசங்களில் எம்பெருமானுக்குத் தளிகை சமர்ப்பிப்பது. சந்தனம், பூமாலைகள் முதலியதை சமர்ப்பிப்பது, திருவிளக்கேற்றுவது முதலான கைங்கர்யம் செய்வது. அதுவும் செய்ய முடியாவிட்டால் த்வய மந்திரத்தின் பொருளை த்யானம் செய்வது. அதுவும் இயலாது போனால் ஸ்ரீவைஷ்ணவனை அடுத்து அவனுடைய அபிமானத்தைப் பெற்றிருப்பது. இவ்விதம் நடப்பவர்கள் முன்னடி பார்த்து நடக்க வேண்டியதில் கவனிக்க வேண்டியது மூன்றாகும்

பழக வேண்டியவர்களில் மூன்றுவிதம். அனுகூலம், பிரதிகூலம் (எதிரி). இரண்டுமில்லாதவர் ஆக மூன்றுவிதம் இதில் ஸ்ரீ வைஷ்ணவர்கள் அனுகூலர், பகவானை விரோதிப்பவர் எதிரி, இரண்டிலும் சேராத ஸம்ஸாரிகள் மூன்றாவது.

அனுகூலர்களைக் கண்டால் சந்தனம், புஷ்பம் முதலியவைகள் போலவும், நிலவு, தென்றல் போன்றும் எண்ணி உவப்புடன நடந்து கொள்ள வேண்டும். எதிரிகளைக் கண்டால் பாம்பு, நெருப்பு இவைகளைக் கண்டது போல் விலகி நிற்க வேண்டும். இரண்டிலும் சேராதவர்களைக் கண்டால் அற்பமான பொருள் போல் பொருட்படுத்தாமலிருக்க வேண்டும். அப்படி இந்த எதிரியும். நடுநிலைமையில் இருப்பவரும் கூட உதவி செய்து அனுகூலமாக நடந்துகொண்டால் இவர்கள் நல்லறிவு ஊட்டலாம். எதிரியாக இருந்தால் அவர்கள் பேரிலும் கருணையுடன்தான் இருக்க வேண்டும். இவ்வாறு நடக்காவிட்டால் பொருளிலும், ஆசையிலும் ஈடுபட்டதாக ஆகும், பொருளுக்காகவோ, காமத்துக்காகவோ ஸ்ரீவைஷ்ணவர்களை அலக்ஷியம் செய்தால் அரசனுக்கெதிரில் அவன் புதல்வனை அவமானப்படுத்தினால் அரசனுக்கு கோபம் ஏற்படுவது போல் எம்பெருமானுடைய திருவுள்ளம் சீறும்.

இவ்விதம் பொருளுக்காகவோ, காமத்துக்கு இணங்கியோ எம்பெருமானுக்கு எதிரியை ஆதரித்தால் அரசன் மனைவி வேறு அல்பனிடம் பிச்சை எடுத்தால் அரசனுக்கு அதனால் அவமானத்தை உண்டாக்கி அவள் வெறுக்கப்படுவதுபோல் எம்பெருமானுடைய வெறுப்புக்கு ஆளாவான்.

இரண்டிலும் சேராதவர்களிடம் பொருளுக்காகவோ, இன்பத்திற்காகவோ நேசம் பெற்றால் ரத்தினத்திற்கும், கல்லிற்கும் வேறுபாடு அறியாதவன் போல் இவன் பெற்ற அறிவு உபயோகமற்று இருப்பதை எண்ணி எம்பெருமான் இவனை ஏற்றுக்கொள்ளமாட்டார்.

இவ்விதம் ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச் செய்தார். இப்படி நியமித்து அருளிச் செய்தது சாத்திரத்தைப் பின்பற்றியதாகும். சாத்திரங்களில் தர்மத்திற்கு விரோதமான பொருளும், இன்பமும் கூடாதென்று பொதுவாக எல்லோருக்குமே கூறப் பட்டிருக்கிறது. ஆகவே ப்ரபன்னனுக்கு இந்த சாத்திர முறை தவிர்க்கக் கூடாதென்பது எம்பெருமான் திருவுள்ளம். அனுகூலரை ஆதரிக்காவிட்டால் எம்பெருமானுக்கு அவனிடம் அன்பு இராதென்றும், பிரதிகூலரிடம் சேரக் கூடாதென்றும் பல உயர்ந்த நூல்களில் கூறப் பட்டிருக்கின்றது.

பிரதிகூலரிடம் சேர்ந்தாலும் எம்பெருமானுடைய அன்பை இழக்க வேண்டி வரும் என்றும் சொல்லப் பட்டிருக்கின்றது. அவ்வாறே இவ்விரண்டிலும் சேராதவர் களையும் அல்பர்களாக நினைக்க வேண்டும். இவ்விதமாக முன்னடி பார்த்து நடக்க வேண்டியதெல்லாம் சாத்திரங்களை அறிந்துதான் அதன்படி நடக்க வேண்டு மென்று எம்பெருமானார் திருவுள்ளம் தன் விருப்பப்படி செய்யாமல் சாத்திரங்களைப் பின்பற்றியே எந்தக் கைங்கர்யத்தையும் ப்ரபன்னன் செய்ய வேண்டுமென்றும்

அறியும்படி அருளிச் செய்துள்ளார். ஏனெனில், 'வேண்டிற்றுச் செய்து திரிய அமையுமோ என்னில் அது இவனுக்கு ஸ்வரூபம் அன்று' என்று அருளிச் செய்ததாலும் ஆளவந்தாரும் சாத்திரத்திற்கு மீறி நடக்கக் கூடாதென்றும் அருளிச் செய்ததாலும் எம்பெருமான் தானும் வேதமும் தர்மசாத்திரமும் என்னுடைய கட்டளைகள். அவைகளை மீறி நடப்பவன் எனக்கு விரோதி, என்னிடம் பக்தியுள்ளவனாக இருந்தாலும் அவன் வைஷ்ணவன் இல்லை, என்று கூறி இருப்பதாலும் சாத்திரத்திற்குட்பட்டே ப்ரபன்னனும் கைங்கர்யங்களைச் செய்ய வேண்டும். மேலும் சாத்திரத்தில் சொல்லியதை மீறி நடந்தால் அரசனுக்குப் பிரியமானவன் கூட அரசன் உலகத்திற்கு உபகாரமாகக் கட்டிய அற்றை அவன் பாழாக்கினால் அவனுக்குக் கடுமையான சிக்ஷையைக் கொடுப்பதுபோல் எம்பெருமான் அந்த ப்ரபன்னனுக்கும் பிரியமில்லாதவனாவான். இந்த ப்ரபன்னன் பகவானுடைய பிரீதிக்கு பாத்திரனாகாதபோது அந்த குற்றத்திற்காக எம்பெருமானைப் பொறுத்துக் கொள்ளவேண்டுமென்று. ப்ராயச்சித்தமாக மறுபடி ப்ரபத்தி செய்யவேண்டும். அப்படி ஒன்றும் செய்யாவிட்டால் எம்பெருமான் அவனுடைய குற்றத்திற்கேற்ப சில கஷ்டங்களை விளைவிப்பார்.

இது நிற்க இந்த ப்ரபன்னன் ஸாத்விகனாக இருந்தால் இவனுக்கு எம்பெருமானுடைய திருவுள்ளத்திற்கு விரோதமாக நடந்ததே நரகம் போன்று இருக்கும். ஆகவே ப்கவானுடைய ப்ரீதிக்குத் தடங்கலைப் போக்கப் பொறுத்துக் கொள்ளுமாறு ப்ரார்த்திக்க வேண்டும். அந்த பகவானுடைய சீற்றம் போகுமளவும் இவனுக்குப் பெரிய மனக்கஷ்டம் இருக்கும். அவ்விதமாக இவனுக்கு அதனால் மனதில் யாதொரு சங்கடமும் உண்டாகவிட்டால் இவன் ப்ரபத்தி பலித்ததா என்று சந்தேகப்படவேண்டியதுதான்.

இவனுக்கு மோக்ஷத்தில் ஆசை இருப்பது சந்தேகம்தான். சாத்திரத்திற்குட்பட்டு நடந்து கொண்டால் இந்த ப்ரபன்னனில் உபாயம் பூர்த்தியாகாதவனுக்கு. உபாயம் பூர்த்தியாவதற்கு ஏதாவது தடங்கல் இருப்பின் அதை நீக்கி எம்பெருமானுக்கு ப்ரீதியை உண்டுபண்ணும். உபாய பூர்த்தி உள்ளவனுக்கு சாத்திரத்தை மீறியதால் ஏற்படும் எம்பெருமானுடைய சீற்றம் ஏற்படாமல் செய்து கொண்டு அவருடைய ப்ரீதிக்குக் காரணமாக இருக்கும்.

சாத்திரங்களில் கைங்கர்யம் இரண்டு விதமாகக் கூறப்பட்டிருக்கின்றது. ஒன்று அஜ்ஞை அல்லது கட்டளை. மற்றொன்று அனுஜ்ஞை அல்லது ஒப்புக்கொள்ளப் பட்டது. ஆஜ்ஞை கைங்கர்யத்தை எம்பெருமானிடம் சிக்ஷை பெறாமலிருப்பதற்காகவும் அனுஜ்ஞை எந்தப் பலனுக்காகச் செய்கிறானோ அப்பலனைப் பெறுவதற்காகவும் செய்ய வேண்டும். ஆனால் அனுஜ்ஞையை சாத்திரங்களில் கூறியுள்ளவாறுதான் செய்ய வேண்டும், அதை மீறினால் குற்றமாகும். சந்த்யாவந்தனம் முதலிய கார்யங்கள் ஆஜ்ஞை. கோவில் கைங்கர்யம் பகவானுடைய நாமாவை உச்சரிப்பது அனைத்தும் அனுஜ்ஞை. ஆஜ்ஞை செய்யாவிடில் குற்றமுண்டு. அனுஜ்ஞையை செய்யின் அதற்கேற்ற பலனுண்டு. செய்யாவிடில் குற்றமில்லை

சாஸ்த்ரீய நியமனாதிகாரம் முற்றிற்று.

* * * * * *

## அபராத பரிகாரதிகாரம்

இப்படி இந்த ப்ரபன்னன் பகவானுக்குச் சேஷன் என்கிற எண்ணமுள்ளவனாய் சாத்திரங்களுக்குட்பட்டு கைங்கர்யம் செய்கின்றவனாகையால் இவனுக்கு அபத்து ஒன்றும் நேராவிட்டால் வேண்டுமென்றே தெரிந்து

எப்பாவமும் செய்யமாட்டான். அது அவன் ஏற்றுக்கொண்ட கைங்கர்யத்திற்கு விரோதமாகுமல்லவா? ஒரு ஸமயம் முன் செய்த வினைப்பயனாக தண்ணீர் இல்லாத இடம் போன்ற இடத்தின் கோளாறினாலோ. பஞ்சம் போன்ற காலத்தின் கொடுமையாலோ; துக்கம் முதலிய நிலையிலோ ஏதேனும் தவறு செய்துவிட்டால் அதைப் பகவான் பொறுத்துக் கொண்டு அதற்குத் தண்டனை விதிக்கும் எண்ணத்தைக் கொள்ளமாட்டார்.

அவ்விதம் தெரிந்தே பாவம் செய்துவிட்டாலும் இயற்கையில் நல்லெண்ணமுள்ள, எம்பெருமான் காப்பாற்று வதாகத் தீர்மானித்துவிட்டபடியால் அப்பாவங்கள் மின்னல் போன்று தொடராமல் அவன் அப்பொழுது செய்த குற்றத்தை உணர்ந்து அதற்காக அவன் வெட்கப்பட்டு அதற்காக மீண்டும் ப்ராயச்சித்தமாக ப்ரபத்தி பண்ணி, அப்பாவத்திலிருந்து நீங்குவான்.

இந்தவிதமாக ப்ராயசித்தம் செய்யாமல் முன்வினைப் பயனாகப் பிடிவாதமாக இருந்துவிட்டானானாலும் கூட எம்பெருமானைச் சரணமடைந்தவர்களுக்கு நரகம் கிடையா தென்று பல புராணங்களுக்கு மூலமான வேதத்தில் கூறி இருக்கின்றபடியால் அந்த ப்ரபன்னனுக்குத் தானே எம்பெருமான் கருணையின் காரணமாகக் கண்களைப் போக்குவது போன்ற சிக்ஷைகளைக் கொடுப்பார். அரசன் தன்னை நெருங்கி அடுத்திருப்பவர்களுக்கு குற்றம் செய்தால் சிறிய தண்டனை அளிப்பது போன்று குற்றத்திற்குத் தக்கவாறு அதிகக் கொடுமையின்றி தண்டனையைக் குறைத்துக் கொடுப்பார். எந்த விதத்திலும் இந்த ப்ரபன்னன் இறுதியில் மோக்ஷம் அடைவது திண்ணம். செய்த குற்றத்திற்கு ஏற்றவாறு மோக்ஷம் கிடைத்தற்குத் தாமதம் ஏற்படலாம். சிலருக்கு ஆயுளை வளரச்செய்து அக்குற்றத்திற்கேற்றவாறு கஷ்டத்தை அனுபவிக்கச் செய்து

இச்சரீரம் அழியும்போழ்து மோக்ஷத்தினைக் கொடுப்பார். எவ்விதத்திலும் ப்ரபன்னனுக்கு மறுபிறவி கிடையாது. இச்சரீரம் அழியும் தருணம் மோக்ஷம் நிச்சயம்.

ப்ரபத்தி மோக்ஷத்திற்காகச் செய்த ப்ரபன்னன் மீண்டும் பாவங்கள் செயய நேரிடின் அதற்கு பிராயச்சித்தமாக மறுபடியும் ப்ரபத்தி பண்ணுவது உசிதமானது. அதனால் பாவங்கள் நீங்கிவிடும். அதன்மூலம் பகவானுடைய ப்ரீதியை இழக்காமலிருக்க முடியும். செய்த பாவங்களுக்குச் சிறிதளவும் தண்டனை ஏற்படாது.

ப்ராயச்சித்தமாகப் பிரபத்தி பண்ணியபின்பு எக்குற்றமும் செய்தல் கூடாது. மீண்டும் செய்யின் அதற்குத் தண்டனை கிட்டும். இவ்வாறு செய்யும் தவறுகளுக்கு தலையாய காரணம் விவேகமின்மை. அவ்வறிவு இல்லாமையில் முக்கியமானது சரீரத்தையே ஆத்மாவாக எண்ணுவது. ஈசுவரனுடைய ஸ்வரூபமான தனக்குதானே எஜமானன் என்ற எண்ணம், சுதந்திரம், வேறு யாருக்கும் தான் பணியக்கூடிய நிலையில்லை என்ற மதர்ப்பு. இவையெல்லாம் ஜீவன் தன்னுடையதாக எண்ணுவது. இவ்வறியாமை நீங்கி நல்லறிவு பெறுதல் வேண்டும்.

ப்ரபத்தி செய்யும் பொழுது ப்ரபன்னன் செய்த பாவங்களில் ப்ராப்தம் தவிர மற்றவைகளும், ப்ராப்தத்திலும் இவன் ஒப்பாதவைகள் நீங்கிவிடும். இவன் ஒப்புதல் கொண்ட ப்ராப்தங்கள் பலன் கொடுக்கத் தயாராக இருந்துவிட்டால் ப்ராப்தங்களான முன் செய்த பாவங்களையும் போக்க ப்ரபத்தி பண்ணும் நேரத்தில் மற்றொன்றும் செய்தால் அவை நீங்கிவிடும் இல்லாவிடில் பின்பு அப்பாவங்கள் நீங்க மற்றொரு ப்ரபத்தி பண்ணிவிட்டால் அப்பாவங்கள் நீங்கி விடும். ப்ரபன்னன் செய்யும் குற்றங்களில் மிகவும் பெரியது பாகவத அபசாரம். பாகவத அபசாரம் செய்தால் அதை எம்பெருமான்

பொறுத்துக் கொள்ளமாட்டார். ஆகையால் எந்த பாகவதரிடம் அபசாரப்பட்டாலோ அவரிடம் மன்னிப்புக்கோரி அவரை சமாதானம் செய்ய வேண்டும். அப்பொழுதுதான் எம்பெருமானுடைய ப்ரீதியைப் பெறமுடியும். பாகவதர்களில் எந்த ஜாதி என்பது போன்று ஏற்றத்தாழ்வு கிடையாது. எந்த ஜாதியைச் சேர்ந்த பாகவதரிடம் அபசாரப்பட்டாலும் அவருடைய மன்னிப்பைப் பெறாதவரின் குற்றம் நீங்காது. எம்பெருமானுடைய அருளைப்பெறமுடியாது. இதற்குப் புராணங்களிலும் ஸ்ரீமத் ராமாயணத்தில் சுக்ரீவன் இளைய பெருமாளிடத்தில் மன்னிப்புப் பெற்றதிலும் போன்று இன்னும் பல த்ருஷ்டாந்தங்கள் காணலாம். ஆகவே அபராத பரிகாரம் இன்றியமையாத ஒன்று.

அபராத பரிகாராதிகாரம் முற்றிற்று.

* * * * * *

## ஸ்தான விசேஷாதிகாரம்

ப்ரபன்னன் தான் இவ்வுலகில் வாழ்வதற்கு ஏற்ற இடம் எவ்விதம் இருக்க வேண்டுமென்பதனை அறிய வேண்டும். ஆர்யவர்த்தம் முதலிய புண்ணிய ஸ்தலங்கள் இந்த யுகத்தில் வர்ணாச்ரம தர்மத்தைச் சரியானபடி கொண்டாடுபவர்கள் வசிக்கப்படாததால் அவை வாழ்வதற்கு ஏற்றதல்ல. ஆகையால் எங்கே நான்கு ஜாதியில் உள்ளவர்களும் அவரவர் தர்மங்களைச் சரியாக அனுஷ்டானம் செய்கின்றார்களோ அவ்விடத்தில் தான் ப்ரபன்னன் வசிக்க வேண்டும். அதிலும் பாகவதர்கள் அதிகமாக இருக்ககூடிய இடம் ப்ரபன்னனுக்கு மிகவும் வாழ்வதற்குச் சிறந்ததாகும். ஸ்ரீபாகவதத்தில் கலியுகத்தில் நாராயணனையே அடுத்திருப்பவர்களான பாகவதர்கள் சிற்சில இடங்களில் மட்டும் இருக்கப் போகின்றார்கள் என்றும், அதிலும், தாமிரபரணி ஆறு, வைகை, பாலார், காவேரி, இவ்வாறுகளின் சமீபத்தில் தமிழ்நாட்டில் மிகுதியாக இருக்கப்போகின்றனர் என்று சொல்லி இருப்பதால் தமிழ்நாடு பாகவதர்களுக்கு வாழ்க்கைக்கேற்ற இடம். பாகவதம் ஆழ்வார்களும், ஆசார்யர்களும் உகந்தருளிய ஸ்தலங்கள் வாசத்திற்குகந்தவை. ஆனால் ஸ்ரீபாஷ்யகாரர் ஸ்ரீரங்கத்திலேயே சுகமாக வாசம் செய்யுமாறு அருளிச் செய்திருப்பினும் அது மற்ற திவ்ய ஸ்தலங்களுக்கு ஒரு த்ருஷ்டாந்தமாகவேதான் கூறப்பட்டது. மகாபாரதத்தில் ஆரண்ய பர்வதத்திலுள்ள தீர்த்தயாத்ரா பர்வத்திலும் ஸ்ரீமத்ராமாயணத்திலும் எம்பெருமான் எழுந்தருளி இருக்கும் இடம் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. ஸ்ரீராமாவதாரம், ஸ்ரீகிருஷ்ணாவதாரம் இவைகளில் எம்பெருமான் எழுந்தருளி இருந்த இடத்தைச் சிறப்பாகக் கூறியது போன்று பாஞ்சராத்ரத்தில் அர்ச்சாவதாரத்தில் ஸ்வயம் வ்யக்தமான ஸ்ரீரங்கம், திருவேங்கடம் முதலிய எட்டு ஸ்தலங்கள், மற்ற

பக்தர்களால் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட ஸ்தலங்களும் விசேஷமாக எடுத்து கூறப்பட்டிருக்கின்றன. இப்படிப்பட்ட ஸ்தலங்களில் வாசம் செய்தால் கடைசி காலம் வரையில் புத்தி நேர்மையாகவே இருக்கும். ஏதாவது கைங்கர்யம் 'செய்தோ செய்யாமலோ ஸ்தலவாஸம்' சிறந்ததாகும். எப்படியும் எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் ஸ்தலமும் பாகவதர்கள் நிறைந்திருக்கும்' இடமும் வாசத்திற்கு ஏற்றதாகும். ஆனாலும் காசி முதலிய புண்ணிய க்ஷேத்ரமானாலும் கூட எம்பெருமானுடைய திவ்ய சரித்ர ப்ரபாவத்தை எடுத்துரைக்கும் பாகவதர்கள் வாழாவிடில் அவை வாசத்திற்கு தகுதியுள்ளவையாகாது.

ஸ்தான விசேஷாதிகாரம் முற்றிற்று.

* * * * * *

## நிர்யாணாதிகாரம்

ப்ரபன்னனுக்குப் பிரபத்தியின் பலனாக இச்சரீரத்தின் இறுதியில் மோக்ஷம் உறுதிஎன முன்புரைக்கப்பட்டது. இவன் எக்குற்றமும் செய்யமாட்டான் என்றும் செய்யினும் அதைநீக்க மீண்டும் ப்ரபத்தி செய்வான் என்றும், அல்லது மீண்டும் ப்ரபத்தி செய்யாவிடினும் எம்பெருமான் லேசான சிக்ஷையளித்து, இறுதியில் அவனுக்கு மோக்ஷம் கிட்டும்படி செய்வார் என்று குறிப்பிடப்பட்டிருந்தது. ஆனால் வேறு தெய்வத்தைத் தொழுதால் அது மிகத் தவறானாலும் அதையும் எம்பெருமான் அது தவறு என்பதனை உணரச் செய்து. அக்குற்றம் நீங்கிய பின்பு மோக்ஷம் அளிப்பார். ஆனால் அவன் தொடர்ந்து வேறு தெய்வத்தைத் தொழுதால் அவனுக்குப் பிரபத்தி பலிக்கவில்லை என்பதாகும். ப்ரபத்திக்கு அத்யாவச்யமானது எம்பெருமானிடம் பூரண நம்பிக்கை. அது வேறு தெய்வத்தைத் தொழுகின்றவனுக்கு

இல்லை என்று தெரிவதால் ப்ரபத்தி பலிக்கவில்லை. மோக்ஷமும் கிடையாது.

ஆகவே இச்சரீரத்தின் இறுதியில் மோக்ஷம் உறுதியாகக் கிடைப்பவர்களுக்கு ப்ராப்தகர்மா இருக்கும்வரையில்தான் இச்சரீரம் இருக்கும். பிறகு எந்நேரத்தில் உயிர் நீங்கினும் மோக்ஷம் என்பது திண்ணம். உத்தராயணம், பகல்வேளை இவைகளில் இறப்பவர்களுக்கு நற்கதி என்பது ப்ரபன்னன் தவிர மற்றவர்களைப் பற்றியது. பக்தர்களுக்கும், ப்ரபன்னருக்கும் இன்னின்ன காலம் வரை வரையரை கிடையாது.

இவ்வாறு மோக்ஷம் செல்லும் அதிகாரியினை எம் பெருமான் தானே ப்ரும்மநாடி வழியினைக் காண்பித்து, அதன் வழியாக வெளிப்படுத்தி, சூர்யகிரணங்கள் வழியாய் அர்சித்த மார்க்கத்தால் அவனை மோக்ஷம் அடையச் செய்வார்.

இறுதி காலத்தில் உயிர் நீங்கும் பொழுது எம்பெருமானைப் பற்றி எண்ண வேண்டுமென்ற நியதி ப்ரபன்னனுக்கில்லை. அவ்வமயம் நினைக்காவிடினும் மோக்ஷம் அவர்களுக்கு நிச்சயம். இருப்பினும் கீதை முதலிய நூல்களில் ப்ராணன் போகின்ற நிலையில் எம்பெருமானை நினைக்கவேண்டியது அவசியம் என்று கூறப்பட்டிருப்பது ப்ரபன்னர்களல்லாத மற்ற அதிகாரிகளுக்குத்தான்.

நிர்யாணாதிகாரம் முற்றிற்று.

* * * * * *

## கதிவிசேஷாதிகாரம்

இவ்வாறு தலைவழி இருக்கும் நாடியிலே வந்தடைந்த ஜீவாத்மாவை இவ்வுடலிலிருந்து தலையிருக்கும் நாடியின்

வழியாக வெளியில் பரமாத்மா எடுத்துச் சென்று தேவமார்க்கமாகக் கொண்டு செல்வர், அலச்சிஸ், அஹஸ், பூர்வபஹம், உத்தராயணம், ஸம்வத்ஸரம், வாயு, ஆதித்யன், சந்திரன், ப்ரஜாபதி என்பவர் துணையைக் கொண்ட அமாநவன் என்கிற வைத்யுதன் மூலமாயும், தானே முக்கியமாக ஜீவாத்மாவை பகவான் நடத்திச் செல்கின்றார். அவ்வவ்விடங்களில் பல போகங்களையும் அனுபவிக்கச் செய்கின்றான். பிறகு ஸ்ரீவைகுண்டத்திற்கு அழைத்துச் சென்று, கர்மத்தால் ஏற்பட்ட உடலை விட்டு வேறுபட்டதான வழி நடப்பதற்கான வித்தையின் பெருமையால் உண்டான ஸூக்ஷ்ம சரீரத்தையும் அங்கு விடுமாறு செய்து, ப்ரக்ருதி ஸம்பந்தமற்ற உடலைக் கொடுக்கின்றான், பிறகு ஜரம்மதீயம் என்கிற குளத்தின் வரை செலுத்தி, ஸோமயவனம் என்ற அரசமரத்தினிடம் அழைத்துச் செல்கின்றார். அங்கு ஹாரம், ஆபரணங்கள், ஆடைகள் முதலியவைகளை வைத்திருக்கும் ஐநூறு அப்சரஸ்திரீகளை கொண்டு அழகாக அலங்காரம் செய்விப்பார். மிக்க மணம், ரஸம், தேஜஸ் ஆத்மாவிற்கு ஏற்படச் செய்கின்றார். பிறகு அழகிய கிரீடம் முதலான ஆபரணங்கள் பூண்ட நித்யஸூரிகள் எதிர்கொண்டழைக்க கோபுரத்திற்குச் சென்று ப்ரஜாபதிகள் என்கிற வாசற் காப்பாளர்களிடம் போகச்செய்து ராஜோபசாரங்களை செய்விக்கின்றார். பிறகு ஆனந்தமயமான மண்டபத்தில் எழுந்தருளியிருக்கும் பிராட்டியோடு தன்னைக் காண்பிக்கின்றார். மற்ற நித்ய ஸூரிகளுடனும், முக்தர்களுடனும் தன் பாதகமலங்களின் கீழ் சேர்த்துவிடுகின்றான். இவனுடைய உண்மையான ஸ்வரூபம் அங்கு ஏற்பட்டு மற்ற முக்தர்களுடனும், நித்யஸூரிகளுடனும், எந்தவித மாறுபாடுமின்றி எல்லாவிதமான கைங்கர்யமும் செய்வான் இந்த ஜீவாத்மா.

இவ்விதமான கதி அல்லது வழியைப் பற்றி பக்தியோகம் செய்கின்றவர்கள் அதற்கு அங்கமாக நாள்தோறும் அனுஸந்தானம் பண்ண வேண்டும். ஆனால் ப்ரபன்னன் பக்திக்கு அங்கமாக அனுஸந்தானம் செய்ய வேண்டிய அவசியமில்லை. ஆயினும் இவ்வுபாயத்தில் இறங்கும்போழ்து இதன் பயன் எப்படிப்பட்டது என்பதறிய உபயோகப்படும். பிறகு தான் பெறப்போகும் மோக்ஷத்தைப் பற்றியதாகையால் இவைகளை நினைக்க நினைக்க ஸந்தோஷத்தைக் கொடுக்கும். நன்றாகவும், விரிவாகவும் அறியமுடியா விடினும், பொதுவாக அறிந்தாலும் இவன் விருப்பம் நிறைவேறும்.

கதிவிசேஷாதிகாரம் முற்றிற்று.

* * * * * *

## பரிபூர்ணப்ரும்மானுபவாதிகாரம்

இந்த வழியில் சென்றவன் பரிபூர்ணமாக ப்ரப்ருமத்தைப் பின்வருமாறு அனுபவிப்பான்.

எல்லா நேரத்திலும், எல்லா இடத்திலும் எல்லா நிலைமையிலும் ஸர்வேச்வரனை இந்த மோக்ஷம் சென்ற ஜீவாத்மா பல உடல்கள், குணங்கள், விபூதிகள் நடத்தைகள் இவைகளில் ஒன்றும் குறைவு இல்லாமல் மிகவும் ஆனந்தத்தோடு பார்த்துக் கொண்டிருப்பான். இவ்வெல்லா போகங்களும் ஈச்வரனுக்கும் இவனுக்கும் முற்றிலும் சமமாகையால் இருவரும் சமம் என்று கூறப்படுகிறது. பகவானுடைய ஸ்வரூபமே இந்த முக்தனுக்கு மிகவும் ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடியது. மற்றுமுள்ள பொருளும் அரசன் மனைவிக்கு அரசன் ப்ரியமானால், அவனுடைய போகத்துக்கு வேண்டிய பொருள்கள் இவளுக்கு ப்ரியமாவது போல், இந்த முக்தனுக்கு ஆனந்ததைத் கொடுக்கும்.

இவ்விதம் எல்லா பொருள்களோடுகூடிய ஈசுவரன் இந்த முக்தனுக்கு ஆனந்தமளிப்பவன் என்று வேதம் முதலியவைகளில் தீர்மனமாகக் கூறப்பட்டுள்ளது.

பகவானுடைய ஸ்வரூபமே இவனுக்குப் பலவிதமாயும் அனுகூலமாக அடையக் கூடியதாகையால் அந்த ஸ்வரூபத்தையே பரமபதம் என்று சொல்லுவது. இந்த பகவானை அடைந்து ஆனந்தத்தைப் பெறுவது ஒரு இடத்துக்குச் சென்ற பிறகாகையால் இவ்விடத்தையும் பரமபதம் என்பதுண்டு. அதுபோன்றே இந்த முக்தன் இவ்வனுபவத்தை அனுபவிப்பதால் அதற்கிடமான இவனையும் பல குணங்களுடன் கூடிய ரூபத்தோடு பரமபதம் என்று கூறுவதுமுண்டு. இந்த லீலா விபூதியான இவ்வுலகத்திலுள்ள பொருளும் முக்தனான பிறகு அனுகூலமானவை. பக்தனாயிருந்தபோது வினைப்பயனாக இருந்தால் சிறிது அனுகூலமாயும் அநேகமாக விரோதியாகவும் இருப்பினும் முக்தனான பிறகு வினை ஸம்பந்தம் இல்லாமையால் இவ்வுலகப் பொருளும் முக்தனுக்கு அனுகூலமானவை. மோக்ஷத்தில் இவனுக்கு எம்பெருமானுடைய திருவுள்ளத்திற்கு அடங்கி இவன் இஷ்டப்படி எல்லாவித கைங்கர்யமும் போகமும் உண்டு.

இப்படி மோக்ஷம் அடைந்தவன் மீண்டும் இவ்வுலகத்திற்கு எப்பொழுதும் திரும்பிவரமாட்டான். இது வேதம் முதலியதால் கூறப்பட்டுள்ளது. தன் இஷ்டப்படி ஒருசமயம் இந்த லோகம் வந்தாலும் அவனுடைய ஆனந்தம் முதலியதற்கு ஒன்றிற்கும் குறைவு கிடையாது. ஆகையால் மறுமுறை திரும்புவதில்லை என்பதற்கு இதுதான் கருத்து.

மோக்ஷம் தேவர்கள், மானிடன், பிரும்மா அனைவருக்கும் உண்டு, எந்த சரீரத்திற்குப் பிறகு என்று சொல்லமுடியாது. பக்தி பண்ணுகிறவர்களுக்கு எந்த

சரீரத்தில் பக்தி பூர்த்தியாகின்றதோ அந்த சரீரம் முடியும்போது மோக்ஷம். ப்ரபன்னனுக்கு இந்த சரீரத்தின் முடிவிலேயே மோக்ஷம்.

மோக்ஷம் போகும்வரையில் இவ்வுலகிலோ ஸ்வர்க்கம் முதலியதிலோ எந்த வேற்றுமை இந்த ஜீவர்களுக்கு இருந்தாலும் மோக்ஷம் சென்றபிறகு ஒருவருக்கொருவர் ஆனந்தத்திலும் போகத்திலும் எந்த வேற்றுமையும் கிடையாது. வேற்றுமை உண்டென்றால் அது லோகத்திற்கு மாறானது. விரோதமானது.

ஈசுவரனுக்குள்ள உலகத்தை ச்ருஷ்டிப்பது முதலியது முக்தனுக்கு இல்லையானாலும் அதனால் ஏற்படும் ஆனந்தம் இவனுக்குண்டு. ஆகையால் முற்றிலும் ஈசுவரனுக்கு இவன் சமம் என்றது. இருவரும் ஒன்றாகிறார்கள் என்பதற்கெல்லாம் சமம் என்கிற பொருள் ஒன்றாக ஆவதில்லை.

பரிபூர்ண ப்ரும்மானுபவாதிகாரம் முற்றிற்று.

* * * * * *

## ஸித்தோபாய சோதனாதிகாரம்

இதுவரை இந்த ஜீவாத்மா அநாதிகாலமாக இவ்வுலக வாழ்க்கையில் உழன்று தற்செயலான எம்பெருமானுடைய கருணையால் சம்சாரக் கட்டிலிருந்து நீங்குகிறார் என்றும். நற்சாத்திரங்கள் மூலம் உண்மையினையறிந்து. மோக்ஷம் அடையவேண்டும் என்ற நோக்கம் ஏற்பட்டு, தனது நிலைமைக்கேற்ற உபாயத்தைச் செய்து, கடைத்தேறியவனாய், தன் நிலைமையையும் அறிந்து, அதற்குத் தக்கவாறு இவ்வுலகில் வாழும் நாட்களில் சாத்திரங்களுக்குட்பட்டு குற்றம் செய்யாமல் கைங்கர்யங்களைச் செய்யவேண்டும் என்றும். இவ்வுடல் நீங்கியபிறகு அர்ச்சிஸ் முதலிய வழியால்

எம்பெருமானுடைய திருநாட்டிற்குச் சென்று பூரணமான கைங்கர்யம் செய்வான் என்றும் கூறப்பட்டது.

இதுவரை கூறப்பட்டவைகளில் முக்கியமாக அறிய வேண்டிய ஸித்தோபாயம் பற்றியும் ஸாத்யோபாயம் பற்றியும் இவ்வுபாயங்களின் பெருமையினைப் பற்றியும் தெளிந்தறிய வேண்டும். இவைகளைத் தெளிவாக அறியாமலிருப்பதற்கு ஸர்வேச்வரன் இவன் செய்த பழைய குற்றங்களுக்காக இவனுக்கு சிக்ஷை கொடுக்கும் எண்ணம் காரணமாகும். அவ்வெண்ணத்தை மாற்ற இவனுக்கு மூன்று முக்கியமான வழிகள் உண்டு.

பிராட்டியை இந்த ஜீவாத்மா "எம்பெருமானுடைய திருவடிகளில் உண்மையான சரண்புகுதல் எனக்குக் கிடைக்கவேண்டும்", என்று வேண்ட பிராட்டியும் "உனக்குண்டாகட்டும். இச்சரணாகதியால் உனக்கு அனைத்தும் நிறைவேறும்" என்று பதில் கூறுவது ஒன்று.

இரண்டாவது நல்ல ஆசார்யனுடைய அருள், மூன்று, நல்ல ஸம்ப்ரதாயம் கிடைப்பது. நல்லாசார்யனுடைய அருள்பற்றி ஸ்ரீவிஷ்ணுபுராணம் முதலியதில் பல கதைகள் இருக்கின்றன. அவைகளைப் பார்த்து அறிந்து கொள்ள வேண்டும். நல்ல ஸம்ப்ரதாயம் கிடைப்பது, தான் நல்வழியிற் சென்று புகழ், இலாபம், பூஜை இவைகளில் ஆசையில்லாத கருணையுள்ள ஆசார்யனை அடைந்து முதல் ஆசார்யனான எம்பெருமான் முதல் ஏற்பட்ட நல்லுபதேசங்களைப் பெறுவது. சாத்திரங்களையெல்லாம் கற்பதும் அதன் மூலம் முக்யமானவைகளை அறிவதும் கடினமாகையால் ஆசார்யன் மூலம் உபதேசம் பெற்று முக்கியமானதை அறிவது பொதுவாக நல்லதாகும், சாத்திரங்களைக் கற்பதில் தக்க தகுதியில்லாதவர்கள் உண்மையில் நல்ல ஆஸ்திகர்களாக இருப்பின் ஆசார்யன் மூலம் உபதேசம் பெறுவதுதான் முக்கியம். சாத்திரங்கள் பொதுவாகச்

சிலருக்குப் புத்தி மயக்கத்தைக்கூட உண்டுபண்ணும். ஆசார்ய உபதேசத்தால் அறிவு பெறுவது மிகவும் நல்லது. ஆனால் நல்ல சாத்திரம் கற்கக்கூடிய அதிகாரிகள் சாத்திரங்கள் கற்பதால் மிகவும் தெளிவேற்பட்டு தப்பாக வாதம் பண்ணுகின்றவர்களையும் ஜெயிக்கவும் அவ்விதங்களாலே கலங்குவோரே தெளிவுபடுத்தவும் நல்ல யுக்தியோடுகூட கேட்பது நன்றாம். வேதத்தில் கூறியிருப்பதையும், தர்ம சாத்திரங்களில் இருப்பதையும் வேதமாகிற சாத்திரத்திற்கு விரோதமில்லாத யுக்திகளைக்கொண்டு தெளிவாக அறிகின்றவன்தான் நன்கு தர்மங்களை அறிந்தவனாவான். அவ்வாறு தீர்மானமாக அறியாதவர்கள் கோணலான யுக்திகளால் உண்மையான கருத்துகளை இழப்பார்கள். அவ்வாறு அவர்கள் இழப்பதில் எம்பெருமானைப் பற்றியும் அவனுடைய பெருமையினையும் பற்றி வேறுகருத்து ஏற்பட்டு நஷ்டமும் உண்டாகும். எம்பெருமானான ஸ்ரீமன் நாராயணன் இல்லை என்று கூறுவதும், வேறு ஒரு தேவதையை ஈச்வரனாகக்கூறி அவருக்கு எம்பெருமானைக் கீழ்ப்பட்டவராகச் சொல்லுவதும், எம்பெருமானைப் பற்றி தவறான அபிப்ராயம், அப்படியே எம்பெருமானுக்குப் பெருமை இல்லை என்று ஒருவிதத்தால் கூறுவதும், ஜீவாத்மா அவனுக்கு கீழ்ப்படிந்தவன் அல்லவென்று ரைப்பதும், இவ்வாறு பல தவறான அபிப்ராயங் களுண்டாகும். இப்படிப்பட்ட தப்பான கருத்துகளில் ஏதாவது ஒன்று மாத்திரம் கூடபேரறிவு பெறாத ப்ரபன்னனுக்கு செயற்கைக் குற்றத்தினால் ஏற்படுமாகில் அவன் திருடுபோன பொருளை கஷ்டப்பட்டு அடைந்து மீண்டும் இழந்தவனுக்கு ஒப்பாவான், ஆகையால் தவறான வாதம் செய்கின்றவர்களோடு சேராமலிருப்பது அவசியம். அம்மாதிரி கெட்டவர்கள் நட்பால் மதிமயக்கம் ஏற்பட்டு படுகுழியில் விழநேரும், ஆகவே தெளிவாகச் சாத்திரமான வேதத்தின் கருத்துகளை அறிவது நன்று.

இப்பொழுது ஸித்தோபாயத்தைப் பற்றிப் பலர் பலவிதமாகக் கூறி கலக்கங்களை உண்டாக்கி இருக்கின்றனர். அவைகளுக்கெல்லாம் ஸ்வாமி ஸ்ரீநிகமாந்த தேசிகன் இவ்வதிகாரத்தில் விரிவாகக் கேள்விகளும், பதில்களும் அருளிச் செய்துள்ளார். அவையனைத்தும் கூறாமல் சிற்சில விஷயங்களை மட்டும் கூறுகின்றேன்.

ப்ரபத்தி அனுஷ்டிக்க வேண்டியதில்லை என்று எம்பெருமானுடைய மேன்மையான குணங்களைக் காண்பித்தும், எம்பெருமானுக்கும் ஜீவனுக்குமுள்ள சம்பந் தத்தைக் கொண்டும், ஆக்ஷேபங்கள் சிலர் சொல்கின்றனர். அவைகளுக்குப் பதிலுரைத்து ப்ரபத்தி பண்ண வேண்டியது அவச்யமென்றும், ப்ரபத்தி பண்ணினால்தான் மோக்ஷம் கிட்டுமென்றும் தீர்மானமாக ஸ்ரீதேசிகன் அருளியிருக்கின்றார்.

பிறகு பிராட்டியோடு கூடவே எம்பெருமான் ரக்ஷிக்கக் கூடியவன் என்று பல சாத்திரங்களிலும் சொல்லி யிருப்பதால் இவ்விதம் பிராட்டியோடு சேர்ந்துதான் என்பதில் பலர் ஆக்ஷேபித்துள்ளனர். அதற்கும் சமாதானம் கூறுகின்றார். வேதம், தர்மசாத்திரம், ஸ்ரீமத் ராமாயணம், ஆழ்வார்களுடைய ஸ்ரீஸூக்திகள் ஆசார்யர்களுடைய தோத்திரங்கள் ஸ்ரீபாஷ்யகாரர் ஸ்ரீ வேதாந்த சங்க்ரஹத்தில் அருளிச் செய்தது இவை அனைத்தாலும் திவ்யதம்பதிகளான எம்பெருமானும் பிராட்டியும் சேர்ந்தே உபாயமான ப்ரபத்தியிலும், பலனாக மோக்ஷ கைங்கர்யத்திலும் மோக்ஷத்தை விரும்புகிறவர்களுக்கு அடையப்பட வேண்டிய வர்கள். சிருஷ்டிக்கோ, மோக்ஷம் அளிப்பதற்கோ எல்லாவற்றிற்கும் எம்பெருமான் பிராட்டிகளோடு சேர்ந்தே எதையும் நடத்துகின்றார் என்றும் இவர்கள் இருவருக்கும் எல்லா ஜீவர்களும் சேஷ பூதர்கள் என்றும் எல்லா ப்ரமாணங்களும் கூறுகின்றன. இவ்வாறு பல

ஆக்ஷேபங்களுக்குச் சமாதானம் கூறி ஸ்வாமி ஸ்ரீதேசிகன் பிராட்டிக்கும் எம்பெருமானைப் போலவே எல்லாப் பெருமையும் உண்டு. இருவரும் இணைந்தே எல்லோருக்கும் ஸகலவிதத்திலும் உத்தேச்யமானவர்கள் என்றும் தீர்மானமாக ஸாதித்தருளினார். நஞ்சீயரும், "எம் பெருமானைச் சொன்ன இடத்திலே பிராட்டியையும் சொல்லிற்றாம்" என்று தொடங்கி உடையவர் அருளிச்செய்த வார்த்தையை ஆசானிடமிருந்து கேட்டு பின் சுருக்கமாக அருளிச்செய்தார்.

ஆனால் லக்ஷ்மீ பகவானை விட்டுப் பிரியாமலிருந்தால் ஆலயங்களில் தனித்து தனிக்கோவில் நாச்சியராகி எழுந்தருளி இருப்பதும் அங்கே சேவிப்பதும் ப்ரபன்னரான பரமைகாந்திக்குக் கூடுமோ என்ற ஐயம் எழும். காம்யமான பலத்தைக் கொடுப்பதற்காக தனிக்கோவில் நாச்சியாராக எழுந்தருளச் செய்திருந்தாலும் அங்கும் எம்பெருமானுடைய பத்தினியாகவே எழுந்தருளியிருப்பதால் அங்கும் பிராட்டியைச் சேவித்தல் நற்பலனைக் தரும். எம்பெருமான் வலது பக்கத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீதேவி போகார்ச்சனை என்கிறது. எம் பெருமானுடைய திரு மார்பிலேயே எழுந்தருளியிருக்கும் பிராட்டி லயார்ச்சனை. இவைகளில் பிராட்டியைச் சேவிப்பது போலவோ காமயார்ச்சனாரூபமான தனிக்கோவிலிலும் எம் பெருமானுடைய காம்யார்ச்சனாரூபமான சந்தான கோபாலன் முதலான அர்ச்சாரூபத்தை சேவிப்பதுபோல் பிராட்டியினையும் காம்யார்ச்சனாரூபத்தில் சேவிப்பது உசிதம்தான்.

ஆகவே எம்பெருமான் பிராட்டி இருவரும் சேர்ந்தே சித்தோபாயம்.

ஸித்தோபாய சோதனாதிகாரம் முற்றிற்று.

## ஸாத்யோபாய சோதனாதிகாரம்

இதற்குமுன் சித்தோபாயமான எம்பெருமானைப் பற்றி வரக்கூடிய ஆக்ஷேபங்களுக்கும் கலக்கங்களுக்கும் ஸ்வாமி ஸ்ரீதேசிகன் தெளிவாக சமாதானம் சாதித்தருளினார். அதனால் எம்பெருமான் எல்லாம் அறிந்தவராயும், எல்லாவற்றிலும் வல்லவராயும், மிகவும் கருணையுள்ள வராயும், எல்லோருக்கும் ஸ்வாமியாயும், பிராட்டியான லக்ஷ்மியோடு எப்பொழுதும் கூடியவராயும், எல்லோர்க்கும் சரண்புகுந்தால் காப்பாற்றுபவனாயிருக்கும் சித்தமான உபாயம் என்றும் தெளிவாக விளக்கப்பட்டது. இதை நன்றாக அறியினும் நெடுங்காலமாகப் பகவானுடைய கட்டளையான சாத்திரத்தை மீறி நடப்பின் அவருடைய கோபத்திற்காளாகின்ற அந்த ஜீவன் அவருடைய கோபத்தைச் சாந்தப்படுத்த அவரே கூறிய சரண் புகுவதாகிற ப்ரபத்தியைப் பற்றியும் தெளிவாகவும், ஐயத்திற் கிடமில்லாமலும் அறியவேண்டும். அவ்வாறு அறியா விட்டால் சித்தோபாயனான எம்பெருமானைச் சாந்தப்படுத்தித் தனக்கு வேண்டியவராகச் செய்வதற்கு வேறு வழியில்லை.

முதலில் ப்ரபத்தியும் வேதத்தில் கூறப்பட்டிருப்பதால் வேதாத்யானம் செய்ய அதிகாரமுள்ள ஜாதியர்தான் ப்ரபத்தி பண்ணலாம் என்று கேள்வியுண்டாகும். ஆதலால் இந்த ப்ரபத்தியை எல்லோரும் செய்யலாம் என்பது சரியாகாது என்று ஆக்ஷேபம். இதற்குப் பதில் வேதத்தில் ச்வேதாச்வரச்ருதியிலும், ஸ்ரீமத் ராமாயாணத்திலும், ஸ்ரீ ஸாத்வதத்திலும், ஸ்ரீஸநத்குமார ஸம்ஹிதையிலும் எல்லோருக்கும் ப்ரபத்தியில் அதிகாரம் உண்டு என்று சொல்லித் தீர்மானமாக அறியலாம். பக்தி முதல் மூன்று ஜாதியர்தான் செய்யலாமாயினும் வேதத்தில் கூறியிருக்கும் உண்மை பேசுவது முதலியதில் எப்படி எல்லோருக்கும்

அதிகாரமோ அப்படியே ப்ரபத்தியிலும் எந்த ஜாதி கட்டுப்பாடுமின்றி எல்லோருக்கும் அதிகாரம் உண்டு. காகம் முதலியது கூட சரண்புகுந்ததை சாத்திரங்கள் மூலம் அறிகின்றோம். ஸ்ரீகிருஷ்ணனே ஸ்ரீபகவத்கீதையிலும் தன்னைச் சரண் புகுகின்றவர்கள் எந்த ஜாதியானாலும் நற்கதியடைவர் என்று அருளியுள்ளார். ஆகையால் யாராக இருப்பினும் எளிமையும் வேறு போக்கற்ற தன்மையும் இருந்தால் அவன் ப்ரபத்திக்குத் தகுதியுள்ளவன்.

ப்ரபத்தி என்பதைச் சரணாகதி என்றும் பரந்யாஸமென்னும் சொல்லுவது. இதில் இதைப் பற்றி முன்பே கூறப்பட்டுள்ளது. ப்ரபத்தியில் பரந்யாஸம் என்பதுதான் முக்கியம். பரந்யாஸமானது ஆத்மா தன்னை எம்பெருமானிடம் ஒப்புவித்து காப்பாற்றும் பொறுப்பை அவனிடம் விட்டுவிடுவது. சரணாகதி மந்திரத்தால் ஜீவாத்மா தன்னைப் பரமாத்மாவினிடம் ஒப்படைப்பது. இதுதான் ப்ரபத்தியின் முக்கிய பாகம். மற்ற விசுவாசம் முதலான ஐந்தும் அங்கங்கள். ஆனால் அங்கங்களும் இருந்தால் அங்கி பூர்த்தியாகும். முன்கூறியபடியோ எம்பெருமானுக்கு அனுகூலமாக நடப்பதாகத் தீர்மானம், எதிர்ப்பானதை விடுவது, எம்பெருமான் கண்டிப்பாகக் காப்பாற்றுவார் என்கிற பெரிய நம்பிக்கை. என்னைக் காப்பாற்ற வேண்டும் என்று கேட்பது, தன்னுடைய வேறு போக்கற்றிருக்கும் எளிமை இவைகளாகிற ஐந்தும் ப்ரபத்திக்கு அங்கங்கள் அல்லது துணை. இவ்வங்கங்கள் குறைந்தாலும் சரணாகதி பூர்த்தியாகாது. இவ்விடத்தில் சில பலன்களை வேண்டிச் செய்யும் சரணாகதிக்குச் சில இடத்தில் பலன் கிட்டாமல் போனால் அதைக் கண்டு மோக்ஷத்துக்கான சரணாகதியில் சிலர் சந்தேகம் பெறலாம். அது சரியன்றாம். இங்கேயே சிற்சில பலனுக்காகவும் இந்த அங்கங்களுடன் சரணாகதி செய்தால் பலன் நிச்சயமாக

உண்டு. இவருக்குப் பலன் கிடைக்காவிடின் ஐந்து அங்கங்களில் ஏதாவது குறையால்தான் பலிக்கவில்லை என்று தீர்மானிக்கலாம். மோக்ஷத்திற்கான ப்ரபத்திக்கும் இந்த ஐந்து அங்கங்களுடன் செய்யும் ப்ரபத்தி நிச்சயமாகப் பலிக்கும். ஐயம் உண்டானால் ப்ரபத்தி பலிக்கவில்லை என்று எண்ண வேண்டும். ஏனெனில் ப்ரபத்திக்கு பூரண நம்பிக்கைதான் முக்கியமான அங்கம்.

பக்தி, ப்ரபத்தி இரண்டும் மோக்ஷத்தைக் கொடுக்கக் கூடியவை. இவர்கள் இருவரும் வர்ணாச்சரமதர்மங்களை அனுஷ்டிக்க வேண்டும், அந்த கர்மாக்களில் வரும் தேவதைகள் பெயர் அந்தர்யாமியான எம்பெருமானையே குறிக்குமாகையால் அவையனைத்தும் எம்பெருமானுடைய ஆராதனம் தான்.

இவ்வதிகாரத்தில் பல கேள்விகளையும் ஸமாதானங் களையும் ஸ்ரீதேசிகன் சாதித்தருளினார்.

ஸாத்யோபாய சோதனாதிகாரம் முற்றிற்று.

* * * * * *

## ப்ரபாவவ்யவஸ்தாதிகாரம்

இதற்குமுன் ஸித்தோபாயம், ஸாத்யோபாயம் இவைகளைப் பற்றி ஏற்படக்கூடிய ஐயங்களுக்கும், குழப்பங் களுக்கும் ஸ்வாமி ஸ்ரீதேசிகன் விரிவாகப் பதில்களைத் தெளிவுடன் சாதித்தருளினார். இப்பொழுது இவ் வுபாயத்தின் பெருமையைப் பற்றி சிலர் ஏற்றிக் கூறுவதும், சிலர் இதைப்பற்றி நன்றாக அறியாது குறைத்துக் கூறியும் இருந்த நிலையினை நீக்க விரிவாக அருளிச் செய்திருக்கிறார் இவ்வதிகாரத்தில்.

ப்ரபத்தி என்ற உபாயத்தை அனுஷ்டிக்கின்றவனைப்

பற்றி இவனுக்கு கீழும் மேலும் ஏழுப்பிறப்புள்ளவர்களும் இவனால் நற்கதி அடைவார்கள் என்றும் பலவிதமாக இவனுடைய பெருமை கூறப்பட்டிருக்கின்றது. இதற்கு விரோதமில்லாமல் இவன் பெருமையினைப் பற்றி அறிய வேண்டியதிருக்கின்றது.

முதலில் ஜாதியினைப் பற்றிச் சில ஐயமும், குழப்பமும் உண்டு. அதற்குப் பதில் அறிவது அவச்யம். பொதுவாகப் பாரதம் முதலிய புராணங்களில் பகவானிடத்திலுள்ள பக்தி முதலான குணங்களின் பெருமையால் கீழ்ஜாதியில் பிறந்தவரையும் மேல்ஜாதியில உதித்தவராயும், இக்குணங்கள் இல்லாத மேல்ஜாதியினரை கீழ்ஜாதியராகவும் கூறப் பட்டிருக்கின்றது. இதன் உள்கருத்தினை அறியவேண்டும். பகவத் பக்தர்கள் அனைவரும் ஓரே ஜாதியர் என்று அதன் கருத்தில்லை. ஏனெனில் பாகவதர்களான பிராமணனுக்கும், வேறு ஜாதியினைச் சேர்ந்தவனுக்கும் தனித்தனியே சாத்திரங்களில் ஆசாரம் முதலியது கூறப்பட்டிருக்கிறது பொருந்தாமல் போகும். ஒரு பிராமணனுக்கும் மற்ற ஜாதியருக்குமுள்ள வேற்றுமை பாகவதனான பிராமணனுக்கும் பாகவதனான கீழ்ஜாதியருக்குமுண்டு. ஆனால் பாகவதர்கள் எச்சாதியைச் சேர்ந்தாராயினும், சமமானவர் என்பது அவர்கள் எவ்வித வேறுபாடுமின்றி மோக்ஷம் அடைவதனைக் குறித்துதான் எனப் பெரியவர்கள் தீர்மானித்தார்கள். "குலந்தரும்" என்று ஆழ்வார் அருளிச் செய்ததற்கும் எம்பெருமானுடைய சம்பந்தம் உள்ளவர் களுக்கு ஜாதியைப்பற்றிய ஏற்றத்தாழ்வு கிடையாதென்றும் அவர்களைப் பற்றித் தாழ்வாக நினைப்பதே பெரும் பாவமாம் என்பது கருத்து. ஆதலால் அவர்களோடு பெண் கொடுத்து ஸம்பந்தம் பண்ணுவது கூடாது. அது ஜாதியைப் பற்றியது. மரியாதையும், புகழும் குணத்தைப் பற்றியது, என்று தீர்மானித்திருக்கின்றனர், குலம் வேறு ஜாதி வேறு, ஜாதி

பிறப்பால் வருவது. குணத்தால் வருவது குலம். குலம் குணத்திற்கேற்றவாறு மாறும். ஜாதி மாறாது.

இதற்குப் புராணங்களிலேயே விதுரர் முதலானவர் சரித்திரங்களைப் பார்த்தால் இது நன்றாக விளங்கும். ஆகவே பகவத் பக்தர்கள் எந்த ஜாதியராக இருந்தாலும் மரியாதையோடும், பக்தியோடும் நடத்தத் தகுதியுள்ளவர்கள் என்றும் பாகவதரல்லாதவர் மேல் ஜாதியாக இருந்தாலும் விலக்கத் தக்கவர்கள் என்ற கருத்து.

ப்ரபத்தி பண்ணியவர்களும் அவரவர்கள் ஜாதிக்கும், ஆச்ரமத்திற்கும் சாத்திரங்களில் கூறப்பட்ட ஆசாரங்களைச் செய்யவேண்டும். இது பகவானுடைய கட்டளையே என்று அறிந்து அதை மீறக்கூடாது.

ப்ரபாவவ்யவஸ்தாதிகாரம் முற்றிற்று.

* * * * * *

## ப்ரபாவரக்ஷாதிகாரம்

இந்த அதிகாரத்தில் ப்ரபன்னனுடைய ப்ரபாவம் அல்லது பெருமையை முன் அதிகாரத்தில் அருளிச்செய்ததைத் தொடர்ந்து பல விஷயங்கள் ஸ்ரீதேசிகன் சாதித்தருளினார்.

சுருக்கமாக இக்கருத்துகளை அறியலாம். சில சமயம் ப்ரபன்னனுக்கும் சிரமம், கஷ்டம் ஏற்பட்டால் அதையும் எம்பெருமான் கருணையோடு செய்ததாகவே கொள்ள வேண்டும். காகாசுரனைச் சரண்புகுந்தால் காப்பாற்றினாலும் அதன் நன்மைக்காக ஒரு கண்ணை அழித்தார். பகவானிடத்தில் மட்டுமின்றி பாகவதர் களிடத்திலும் அபசாரம் செய்யக்கூடாது. சிலர் உண்மையான பாகவதர்களாக இருக்கலாம். சிலர் வேஷம்

போடுபவர்களாயும் இருக்கலாம். எந்த பாகவதராக இருந்தாலும் அவர்களுடைய உண்மையை அறியாத வரையில் அவர்களிடம் எந்த விதமான அபசாரமோ, குற்றமோ செய்யக்கூடாது. பாகவதபசாரத்தை எம்பெருமானை மன்னிக்கமாட்டார். ஆகவே வேஷம் போடும் பாகவதர்களிடமும் அபசாரப்படக்கூடாது.

க்ஷேத்திர வாசம் விசேஷமானாலும் பகவானுடைய த்வேஷிகள் அங்கே இருந்தால் அந்த க்ஷேத்திரத்தில் வாசம் செய்தல் கூடாது. பாகவதர்கள் இருக்கும் க்ஷேத்திரமே வாசத்திற்கேற்றது.

ப்ரபாவவக்ஷாதிகாரம் முற்றிற்று.

* * * * * *

## மூலமந்திராதிகாரம்

இதுவரையில் நல்லோர்களுக்கு அறிந்துகொள்ள வேண்டிய முக்கியமான விஷயங்களையும் அவைகளைப் பற்றிய பல கேள்விகளுக்குப் பதில்களையும் எடுத்துரைத் தாயிற்று. இப்பொழுது இந்த எல்லா விஷயங்களையும் வெளிப்படுத்துகிற மூன்று ரஹஸ்யங்களான திருமந்திரம், த்வயம், சரமச்லோகம் இவைகளின் பதங்களால் அறியப்படும் கருத்தை விரிவாக எடுத்து அருளிச் செய்கிறார்.

இம்மூன்றில் திருமந்திரம் எம்பெருமானுக்கு ஜீவாத்மா என்றும் சேஷபூதன் என்றும் அவனுடைய ஸ்வரூபத்தைத் தெரிவித்து அதன் மூலமாக எல்லாத் தடங்கல்களையும் நீக்கி உயர்ந்த நிலையான மோக்ஷத்தை அடைவதில் ஆசையினையும் தாமதமின்மையையும் உண்டாக்கி உபாயத்தில் இவனுக்குள்ள அதிகாரத்தின் நிறைவை உண்டாக்கும்.

இப்படிப்பட்ட அதிகாரிக்குப் பலத்தில் ஆசையை முன்னிட்டு உபாயமான ப்ரபத்தியைச் செய்யும் விதத்தை "த்வயமந்த்ரம்" தெளிவாக வெளிப்படுத்தும். இந்த ப்ரபத்தியைச் செய்யச் சொல்லி கட்டளை இடுகின்றது சரமச்லோகம். இம்மூன்று ரகசியங்களிலும் தனித்தனியே எல்லா அர்த்தங்களையும் ஒலியின் மூலமோ உட்கருத்தாலோ அறியலாமானாலும் ஒவ்வொன்றுக்கு ஒவ்வொன்றில் விருப்பமாகும். சரமச்லோகம் ப்ரபத்தி பண்ணுமாறு கட்டளை இடுகிறதென்றும், த்வயமந்திரம் ப்ரபத்தி பண்ணுவதற்காக அனுஸந்தானம் பண்ண வேண்டிய மந்திரம் என்றும், திருமந்திரம் அனைத்தையும் சுருக்கமாகத் தெரிவிக்கின்றதென்றும் கருத்தாக அறிய வேண்டும். திருமந்திரத்தில் முதல் பதத்தின் முதலெழுத்தான அகாரத்தினால் சுருக்கமாக்க கூறப்பட்ட எம்பெருமான் மேன்மையான தெய்வம் என்பதனையும். நடுப்பதமான நம: என்னும் சப்தத்தால் சொல்லப்பட்ட ப்ரபத்தி உபாயம் என்பதையும் மூன்றாவது பதமான நாராயணாய என்பதால் சொல்லப்பட்ட பலம் கைங்கர்யம் என்பதையும் தெளிவாகக் காண்பிக்கின்றது த்வயமந்திரம். இந்த த்வயத்தில் "ப்ரபத்யே" என்கிற பதத்தின் கருத்தான எளிமையுள்ள அதிகாரியையும் அதன் கருத்தால் ஏற்பட்ட வேறு உபாயத்தில் நோக்கம் இல்லாமையையும். அடையவேண்டியதில் நம: என்கிற சொல்லால் சுருக்கமாக்க கூறப்பட்ட வேண்டாததை நீக்க வேண்டியதென்பதையும் வெளிப்படுத்துகின்றது. சரமச் லோகம் இம்மூன்று ரகசியங்களும் நமக்கு அறிவு, அனுஷ்டானம், பலம் இவைகளுக்குக் காரணமாக இருக்கின்றன. திருமந்திரம் ஆசார்யன் உபதேசத்தின் மூலம் சிஷ்யனுடைய மனதிற்புகுந்து அங்கிருக்கும் அறியாமை என்கிற இருளை நீக்கி எம்பெருமானுக்கு இந்த ஜீவாத்மா எப்பொழுதும் சேஷன் என்கிற உண்மையான ஸ்வரூபத்தை வெளிப்படுத்தி ஸ்வரூபம் நிலைக்கச் செய்கிறது. ஆதலால்

இது ஜீவனுக்கு நிலைமையைத் தருகின்றது. ப்ரபத்தியைச் செய்வதற்கு உபயோகமான அறிவை வளர்ப்பதால் ப்ரபத்தி என்கிற உபாயத்தை உபதேசிக்கின்றது சரமச்லோகம். ஆதலால் இது ஜீவனின் வளர்ச்சிக்குக் காரணம். ஒருமுறை மட்டுமே சொல்லுவதால் உயர்ந்த புருஷார்த்தமான மோக்ஷத்தைக் கொடுக்கக் கூடியதாகையாலும் எப் பொழுதும் சொல்லுவதால் இந்த ஜீவனைக் கடைத்தேறச் செய்வதாலும் த்வய மந்திரம் இவனுக்கு மகிழ்ச்சியைத் தரக்கூடியதாம்.

திருமந்திரம் அதர்வண உபநிஷத்திலும், கடோபநிஷத்து முதலியதிலும், மனு முதலானவர்களுடைய சாத்திரங் களாலும், நாராயண ஹிரண்ய கர்ப்ப கல்பம், நாராதீயகல்பம், போதாயனீய கல்பம் முதலியவைகளிலும் மிகவும் புகழ்ந்தும் சிறப்பாகவும் கூறப்பட்டுள்ளது. மற்ற மந்திரங்களைக் காட்டிலும் பகவானைப் பற்றிய மந்திரங்கள் மேன்மையானவைகள் போலும், பலபகவானைப் பற்றிய மந்திரங்களிலும் அஷ்டாக்ஷரம், த்வாதசாக்ஷரம், ஷடாக்ஷரம் என்கின்ற இம்மூன்று வ்யாபக மந்திரங்கள் சிறப்புள்ள வைகள் போலும்; இவைகளிலும் அஷ்டாக்ஷரம் மிகுந்த மேன்மைத்தன்மையுடையது. இது அனைத்து வேதங்களின் சாரமாகவும், எல்லாத் துன்பங்களையும் நீக்கக் கூடியதாகவும், எல்லாப் புருஷார்த்தங்களையும் அளிக்கக் கூடியதாகவும், எல்லா உபாயங்களுக்கும் உதவி செய்யக் கூடியதாகவும் ஜாதி பேதமில்லாமல் பொதுத் தன்மையுடையதாகவும், சேதனம், அசேதனம், ஈசுவரன் இவர்களுடைய உண்மையை உரைப்பதாகவும், பகவானுடைய எல்லா மூர்த்திகளுக்கும் பொதுவானதாயும், விளங்குகின்றது; ஆகையால் ஆழ்வார்களும், ஆசார்யர்களும் இந்த திரு அஷ்டாக்ஷரத்தையே விரும்பி நின்றார்கள், முனிவர்களும் இந்த மந்திரத்தின் பெருமையினைப்

பலவிதமாகக் கூறியுள்ளனர். திருமந்திரத்தை ஸர்வேச்வரன் எம்பெருமானே நாரதர் மூலம் ஸ்ரீபுண்டரீகனுக்கு உபதேசிக்க அவனும் இதை நல்லெண்ணத்துடன் செவியுற்றதால் இம்மந்திரத்தை ஜபம் செய்து மோக்ஷம் அடைந்தான். திருமங்கையாழ்வாருக்கு எம்பெருமானே இம்மந்திரத்தை உபதேசித்தார்.

இந்த மூலமந்திரம் ப்ரவணவத்துடன் சேர்ந்து நான்காவது வர்ணத்தைச் சேர்ந்தவர்களுக்கும், ஸ்திரீகளுக்கும் உபதேசிக்கக்கூடியதல்ல. ப்ரவணவத்திற்குப் பதில் அதன் முதல் எழுத்தான அகாரத்தைச் சேர்த்தால் எட்டு எழுத்துக்களாகும். ப்ரணவத்தின் பொருளையே இவ்வகாரத்தில் அனுஸந்தானம் பண்ணவேண்டும். ப்ரணவத்துடன் சேராமல் 'நமோ நாராயணாய' என்று மந்திரம் சொன்னாலும் ப்ரணவத்துடன் சேர்ந்து சொல்வதற்குரிய பெருமையும் பலமும் உண்டென்று கூறப்பட்டுள்ளது. ஆழ்வார்கள் பரணவத்தைச் சேர்க்காமலேயே அருளிச் செய்திருக்கின்றார்கள்.

இதில் ப்ரணவம் தனியாகவே ப்ரபத்தி என்கிற நியாயஸித்தையயில், ஜீவாத்மா தன்னைப் பரமாத்மாவிடம் ஒப்படைக்கும் கருத்துள்ளதாக இருக்கும். இந்த ப்ரணவம், அ,உ,ம என்கிற மூன்று எழுத்துக்கள் கொண்டதாதலால் மூன்று வேதங்களின் சாரம் என்று வேதங்களும், தர்மசாத்திரங்களும் கூறுகின்றன. இம்மூன்று எழுத்துக்களில் அகாரம் பரமாத்மாவான ஸ்ரீமத் நாராயணனைக் குறிக்கும். எல்லா எழுத்துக்களுக்கும் முதலான 'அ' என்னும் எழுத்து பொருட்களுக்கு முதல்வனான நாராயணனைக் குறிக்கின்ற தென்று எம்பெருமானார் வேதாந்த ஸங்க்ரஹத்தில் அருளிச் செய்துள்ளார். இக்கருத்தை நிகண்டுகளிலும், வ்யாகரணம் முதலான நூல்களிலும் கூடக் காணலாம். வ்யாகரணம் எல்லோரையும் காப்பாற்றுகிறவன் என்ற பொருளை வைத்து

எம்பெருமானை அகாரத்தின் பொருளாகக் கூறுகின்றது. காப்பாற்றுகிறவன் என்ற கருத்தால் எம்பெருமானைக் குறிப்பிடும்பொழுது ஓர் குறிப்பிட்ட பொருளுக்கென்று சொல்லப்படாததால் அனைத்தையும் காப்பவன் என்ற பொருளை உணர்த்தி நிற்கின்ற தன்றோ?

அனைத்தும் காக்கும் எம்பெருமான், பிராட்டியோடு எப்பொழுதும் இணைந்து இருப்பவனாகக் கருத்தினைக் கொள்ளவேண்டும். இது பல ப்ரமாணங்களாலும் எடுத் துரைக்கப்பட்டுள்ளது. ஒரு பதம், எந்த இடத்தில் எம்பெருமானைக் குறிக்கின்றதோ அங்கு பிராட்டியையும் சேர்த்தே குறிப்பதாகக் கொள்ளவேண்டும். எவ்வாறு, பக்தி பண்ணும் பொழுது எல்லா வித்தைகளுக்கும் எம்பெருமானுடைய குணங்களையும் சேர்த்தே உபாசிக்கப் படவேண்டுமோ, அவ்வாறே எம்பெருமானைப் பிராட்டியோடும் சேர்த்தே உபாஸனம் பண்ணவேண்டும். இதுதான் மற்ற தேவதைகளிடமிருந்து எம்பெருமானைப் பிரித்துக் காண்பிக்கும் தன்மையுடையது. எம்பெருமானுக்குப் பிராட்டியுடன் இணைந்திருப்பதே மிகுதியான பெருமையினைக் காட்டுவதாக எம்பெருமானுடைய உண்மையைக் கண்ட பெரிய ரிஷிகள் கூறியுள்ளனர். 'நாராயண' என்கின்ற பதத்திலும் பிராட்டியோடு சேர்ந்து வருவதாகவே பொருள் கொள்ள வேணும், த்வய மந்திரத்தில் 'ஸ்ரீமந்நாராயண' என்கிற சொல் பிராட்டியோடு சேர்ந்திருப்பதை வெளிப்படையாகவே காண்பிக்கிறது.

ப்ரணவத்தின் முதல் எழுத்தான அகாரத்திற்கு நான்காம் வேற்றுமை ஒருமை மறைந்திருக்கின்றது. 'அ' என்கிற எழுத்து பரமாத்மாவைக் குறிப்பதாலும், இவை இரண்டும் சேருவதற்கு நான்காம் வேற்றுமை இருக்க வேண்டும். 'அ' என்கிற எழுத்தால் குறிக்கப்படும் பரமாத்மாவிற்குரியவன் 'ம' என்கிற எழுத்தால் குறிக்கப்படும் ஜீவாத்மா.

பரமாத்மாவிற்கு ஜீவாத்மா சேஷனானவன் என்கிற பொருளைத் திருமந்திரத்தின் முதல் எழுத்தான ப்ரணவம் காண்பிக்கின்றது. இது ஆத்மாவை பரமாத்மாவிடம் ஒப்படைக்கு மந்திரமாக ப்ரணவத்தைச் சொன்னதற்குப் பொருந்தும். பரமாத்மா எல்லோருக்கும் சேஷி; ஜீவாத்மா அவனுக்கு சேஷன் என்று கூறப்படும் பொழுது லக்ஷ்மியோடு கூடின நாராயணன் சேஷி என்றே கொள்ளவேண்டும். ஆகவே ஆத்மா லக்ஷ்மி, நாராயணன் இருவருக்கும் சேஷன். சேஷன் என்றால் சுயநலம் பாராமல் பிறர்நலம் நாடுவது. இதில் குறிப்பிடப்பட்ட பிறரைச் சேஷி என்பது. இதனால் அகாரம் லக்ஷ்மியோடு கூடிய நாராயணனைக் குறித்து ஜீவாத்மா சேஷன் என்பது ப்ரணவம் பகரும் பொருளாம். தவிரவும் நடு எழுத்தான உகாரம் லக்ஷ்மியைக் குறிப்பதாகவும் சுடச்ருதி கூறுவதால் ஏற்படுகின்றது. இதனால் அகாரத்தின் அர்த்தமான விஷ்ணுவுக்கும், உகாரம் குறிக்கும் லக்ஷ்மிக்கும் மகாரம் குறிக்கும் ஜீவாத்மா சேஷன் என்கிற பொருளே ப்ரணவத்திற்குத் தெரிகின்றது. மேலும் இந்த ஜீவாத்மா லக்ஷ்மிக்கும், நாராயணனுக்கும் எவ்லாவிதத்திலும் சேஷன் என்றும் வேறு ஒருவருக்கும் சேஷனில்லை என்றும் நடு எழுத்தான உகாரம் காண்பிக்கப் படுகிறது. தவிரவும் இவர்களுக்கு ஜீவாத்மா சேஷனாகத்தான் இருக்க வேண்டுமென்பதையும் குறிக்கின்றது.

ப்ரணவத்தின் மூன்றாவது எழுத்தான 'ம'காரம் ஜீவாத்மாவைக் குறிக்கும் என்பதின் கருத்து. இலக்கணநூல்படி அறிவுரூபமாயும், அறிவுள்ளவனாயும், அணுவாயுமுள்ள ஜீவாத்மா என்கிற அர்த்தமுள்ளதாகும். அறிவுரூபம் என்று பொதுவாக ஏற்பட்டாலும் ஆனந்தரூபன் என்று தனிப்பட்டு ஏற்படுகிறது. இங்கு சிலர் நான் என்று சொல்லைச் சேர்த்து 'ம' காரத்தால் குறிக்கப்பட்ட நான்

பரமாத்மாவிற்குச் சேஷன் என்று பொருள் கூறுகின்றனர். வேறு சிலர் 'ம' காரத்திற்கே நான் என்று பொருள் என்று கூறி நான் என்கிற சொல் சேர்க்கப்பட வேண்டிய தேவையில்லை என்கின்றனர். 'ம' காரத்துக்கு நான் என்கிற பொருள் கூறுவதே மிகவும் பொருத்தமாகக் கொள்ளலாம். ப்ரணவத்தின் பொருள் பரமாத்மாவிற்கே நான் உரியவன்-சேஷன். வேறு ஒருவருக்கும் சேஷனில்லை என்பது உறுதியாகிறது.

இரண்டாவது பதமான 'நம'ஸ்ஸில் மகாரமும் ஜீவாத்மா வினைக் குறிக்கும். இது ஆறாம் வேற்றுமையில் முடிவதால் 'ந' என்பது இல்லை என்பதைக் கூறுவதாலும் " எனக்கு இல்லை" என்று நம: என்கிற பதத்திற்குப்பொருள். இல்லை என்பது முக்கியமாகையால் நகாரம் முதலில் நிற்கின்றது. எனக்கு உரியதில்லை என்றால் எது என்ற கேள்வி வருகின்றது. ப்ரணவத்தின் மூன்றாவது எழுத்தை இங்கே கொண்டுவந்து "நான் எனக்குரியவனில்லை" என்று பொருள் கொள்ள வேண்டும். ப்ரணவத்தில் ஜீவாத்மா பரமாத்மாவைத் தவிர வேறு யாருக்கும் சேஷனில்லை என்பது திண்ணமாகத் தெளிவாகிவிட்டது. ஜீவாத்மா தனக்கு மட்டும் தான் ஸ்வாமியோ என்று ஐயம் ஏற்படின் 'நம:' என்கிற பதம் தனக்கும் ஜீவாத்மாதான் ஸ்வாமி இல்லை என்பதை தெள்ளத் தெளிவாக உரைக்கின்றது. அம்மட்டோடன்றி தன்னைச் சேர்ந்த குணங்களோ அல்லது எந்தப் பொருளாக இருப்பினும், எதற்கும் ஜீவாத்மா சுயமான ஸ்வாமி இல்லை, பரமாத்மாதான் ஸ்வாமி. அவன் மூலம்தான் இவனைச் சார்ந்த உடல், குணம் முதலியவற்றிற்கும் அவன் ஸ்வாமியாவான். இந்த ஜீவாத்மாவைச் சேர்ந்தவை எல்லாம் எம்பெருமானால் இவனுக்குக் கொடுக்கப்பட்டவை. பரமாத்மா தன் உபயோகத்திற்காகவே ஆத்மாவிற்கு இவனைச் சேர்ந்த

பொருட்கள் அனைத்தையும் அளிக்கின்றான். ஜீவாத்மாவிற்கு எதிலும் சுதந்திரம் கிடையாது. ஈசுவரன் திருவுள்ளத்தால்தான் ஆத்மா எதையும் செய்கிறான். உலகத்தில் பொதுவாகத் தன் ஸ்வாமியாக இருப்பதும், தன்னிஷ்டப்படி நடப்பதாகிற சுதந்திரமும், தான் விரும்பப்படும் ஊழியனாகவும் பிறரை அண்டி இருப்பதையும் யாரும் விரும்ப மாட்டார்கள், ஆனால் இது வினைப்பயனாக இருந்தால்தான் இப்படித் தோன்றும், இது ஜீவாத்மாவிற்கே இயற்கையாகையால் இது இவன் விருப்பத்திற்கு உகப்பானது. இவன் எம்பெருமானுக்கு எப்படியோ, அப்படியே பாகவதர்களுக்கும் எம்பெருமான் திருவுள்ளப்படி சேஷனாவான்.

இப்படி ஸ்வாமியான எம்பெருமானுக்குக் கீழ்ப்பட்டு அவன் திருவுள்ளப்படி. இவன் விருப்பங்களை அடைய வேண்டி இருப்பதால் அவனைத் தனக்கு அருள்புரியுமாறு செய்ய த்வயத்திலும் சரமச்சோலகத்திலும் தெளிவாகச் சொன்ன சரணாகதியும் திருமந்திரத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது. மகா பாரதம் முதலிய நூல்களில் நம: என்பதற்குச் சரண்புகுவது என்கிற பொருள் கூறப்பட்டதால் இங்கும் நம: என்பது ப்ரபத்தி என்கிற சரணாகதியைக் காட்டும். நம: என்பது தன்னை ஒப்படைப்பது என்கிற பொருளிலும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஆகவே நானும் எனக்குரியேனல்லேன். என்னுடைய தான செய்கைகளும் எனக்கு உட்பட்டவை இல்லை. இவையனைத்தும் ஸர்வேச்வரனுக்கே சேஷம்; இவை முதலான பொருள் நம: என்கிற சப்தத்தில் கருதப்பட்டதாக நிருக்தத்திலும். நமஸ்காரம் என்கிறதை விளக்கும் பொழுது கூறப்பட்டுள்ளது. நம: என்கிற சொல் வெளிப்படையாகவும் உட்கருத்தாலும் சரணாகதியைக் குறிக்கின்றது. சரணாகதி என்கிற உபாயத்தால் அருள்புரியுமாறு செய்யப்படுபவராயும்

மேலே நாராயணாய என்பதில் உள்ள நான்காம் வேற்றுமையால் சொல்லப்படும் கைங்கர்யத்தை ஏற்றுக் கொள்பவராயுமுள்ள. அனைவரையும் காக்கும் ஸ்வாமியைச் சொல்கின்றது 'நாராயணன்' என்கிறபதம். இது நாராயணனையே மற்ற எல்லா தேவதைகளிலும் பிரித்து, தனித்து நிற்கச் செய்யும். இந்த பதம் வேறு எந்த தேவதையையோ வேறு எவரையுமோ குறிக்காது. ப்ரணவத்தில் அகாரத்தில் சொல்லப்பட்டவரை எவ்வித ஐயமும் இன்றித் தெளிவாக நாராணன்தான் அதற்கு அர்த்தம் என்பது புலப்படுகின்றது. நாராணாநுவாகத்திலும் நாராயணனே உயர்ந்த தெய்வம் என்பதை மீண்டும் மீண்டும் கூறுகின்றது வேதம். நாராயண என்று சொல்லுகிறவன் மேன்மேலும் பலவித க்ஷேமங்களைப் பெறுவான் என்றும். அதனால் அவனது பாபங்களும், ஆபத்துகளும் நீங்கும் என்றும், இதன் மேன்மையைப் பற்றி ரிஷிகளும் ஆழ்வார்களும் கூறுவர். இந்த நாராயணன் என்கிற சொல்லே எட்டு எழுத்துக்களாக இருப்பதாகச் சொல்லி இதுவே திருமந்திரத்திற்குச் சமமானது என்றும் சில புராணங்களில் சொல்லப்பட்டிருக்கின்றது.

மேலும் 'நாராயண' என்பதற்கு, ஈச்வரனை விட்டுத் தனித்திராத நாரங்கள் என்ற எல்லாப் பொருட்களையும் ஈசுவரன் தாங்குபவன் அல்லது கதி என்று ஓர் பொருளாம். நாரங்கள் ஈச்வரனுக்கு இருப்பிடமென்கிற பொருளும் உண்டு. அஃதாவது ஈச்வரன் அந்தர்யாமி என்பது, இவ்விரு பொருளினால், ஈச்வரன் எல்லாப் பொருட்களையும் தாங்குபவன் என்றும், எல்லாப் பொருட்களிலும் உள்ளான் என்பது உறுதியாகிறது.

நாரங்களுக்கு அயநம் நாராயணன் என்று பொருள் சொல்லும்போழ்து, நாரங்கள் என்றால் நரனான ஸர்வேச்வரனிடமிருந்து உண்டான உலகத்தில் உள்ள

எல்லாப் பொருட்களும் என்றும், இதனால் ப்ரும்மா, ருத்ரன் முதலியவர்களும் ஸர்வேச்வரனால் உண்டாக்கப் பட்டவர்கள் என்றும், அவர்களுக்கும் ஸர்வேச்வரன் காரணமென்றும் ஏற்படுகின்றது. அயநம் என்பதற்கு அடையப்படுவது என்கிற அர்த்தமாகையால் இவைகள் ஸர்வேச்வரனைச் சார்ந்து இருக்கின்றன என்றும், ஸர்வேச்வரன் இவை எல்லாவற்றுள்ளும் வ்யாபித்து நிற்கின்றான், எங்கும் நிறைந்துள்ளான் என்றும் புலப் படுகின்றது. இது. எம்பெருமான் வேறு எப்பொருளுக்கு மில்லாத தனித்தன்மையுடன் கூடிய ஸௌக்ஷ்மமானவன் என்றும் தெரிகிறது.

நாரம் என்பதற்கு நாரங்கள் என்கிற ஜீவாத்மாக் களுடைய கூட்டம் என்றும் அதற்கு அயனம் நாராயணன் என்றும் அர்த்தம் அறிவிக்கப்படுகின்றது. அயனம் என்ற சொல்லிற்கு மூன்றுவிதமாகப் பொருள் கூறப்படுகின்றது. இவனால் பலன் அடையப்படுகின்றது என்ற அர்த்தத்தால ஈச்வரன் உபேயமாக ஆகிறான். இவனிடத்தில் அடையப் படுகின்றது என்ற பொருளில் இவன் எல்லாவற்றிற்கும் ஆதாரமாகிறான் என்று புலப்படுகின்றது. இதனால் எம்பெருமான் ஆன நாராயணனுக்கு உபாயமாகவும் பலனாகவும் இருப்பதற்கேற்றதான எளியவனாக இருப்பவன் என்பதும். மேன்மையானவன் என்பதுமான குணங்கள் தெரிகின்றன. மேலும் அயனன் எனில் இருப்பிடம் என்கிற அர்த்தத்தால் எல்லாவற்றிற்கும் இருப்பிடம் என்கிறபோது எல்லாவற்றையும் வெளியில் சூழ்ந்து நிற்கிறவன் என்கிற உண்மையும். எல்லாவற்றையும் இருப்பிடமாக உள்ளவன் என்கின்ற பொருளில் எல்லா வஸ்துக்களிலும் இருக்கின்றான் என்னும் உண்மையும் தெரியவருகின்றது. இவ்விரண்டு உண்மைகளும் வேதங்களிலும் கூறப்படுகின்றது.

ஆத்மாவைப் போன்ற அணுவான பொருட்களினுள்ளே வ்யாபித்திருப்பது எவ்வாறு பொருந்தும், உள்பாகமே

கிடையாதே எனில் உள்ளே வ்யாபித்திருப்பது என்பதற்குப் பொருள், இந்த வஸ்துக்கள் இருக்குமிடத்தில் ஈச்வரனுடைய ஸ்வரூபம் கலந்திருக்குமென்றும், அவை உள்ள இடங்களில் ஈச்வரன் உள்ளான் என்பதாகும். ஈச்வரனை, அணுக்களை விடச் சிறியதான அணு என்று வேதம் முதலியவற்றில் கூறுவதற்குப் பொருள், உள்ளே வ்யாபித்து இருக்கிறான் என்பதற்கேற்றவாறு, ஒரு வஸ்துவாலும் தடுக்கப்படாதவன் என்பதாகும். அணுவானவன் என்கிற அர்த்தம் இல்லை.

இங்கு ப்ரணவத்திலுள்ள அகாரத்தாலும், நாரம் என்பதிலுள்ள நர ஒலியாலும், அயந என்ற சப்தத்தாலும் ஸர்வேச்வரனைச் சொல்லுவது என்று ஏற்பட்டது. இம்மூன்றாலும் சொல்லும்போழ்து எம்பெருமான் காப்பாற்றுபவன், கர்த்தாவானவன், என்றுமுள்ளவன், எல்லோரையும் நடத்திச் செல்பவன், அனைத்துக்கும் ஆதாரமானவன். எல்லோருள்ளும் இருப்பவன் என்பது முதலிய அகாரங்கள் தெரிவதால் இம்மூன்றாலும் ஸர்வேச்வரனைச் சொன்னதற்கு பிரயோஜனம் அறிய வேண்டியது.

ஸுபாலோபநிஷத்து முதலியதில் எல்லோருக்கும் அந்தர்யாமியாயும், எல்லோருக்கும் எல்லாவிதமான உறவினனுமான ஸர்வேச்வரன் நாராயணன் என்கின்ற சொல்லால், மற்ற தேவதைகளைவிட வேறுபட்டவனாகக் கூறப்பட்டுள்ளான். உலகத்திலுள்ள பந்துக்கள் ஈச்வரனுடைய எண்ணத்தால் பந்துக்கள் ஆனார்கள், ஸர்வேச்வரனே தாயும், தந்தையும், மகனும் முதலிய எல்லாவிதமான பந்துவாக இருக்கின்றான். அவன் அருள் இருப்பின் அவனும் எதிரியாக இருக்க முடியாது அவன்தான் உயர்ந்த நண்பன்.

பின்பு, நாராயணன் என்கிற நான்காம் வேற்றுமை, நாராயணனுக்காக என்கிற அர்த்தம் முதலியதைக்

காண்பிக்கும். நம: என்பதோடு சேர்வதால் நான்காம் வேற்றுமை என்று பொதுவாகத் தோன்றும். ஆனால் அதனால் ஒரு தனிப்பட்ட ப்ரயோஜனம் தெரியவில்லை. இது திருமந்திரத்திலேயே பலன் ஸித்திப்பதற்குக் காரணமான இடம். பலனை வேண்டுவதாகவும் ஒரு பொருளுண்டு, நாராயணனுக்கு இந்த ஆத்மாவை அளிப்பதுதான் சிறந்த பொருள்.

இந்த திருமந்திரத்திற்கு பத்துவிதமாகக் கருத்து ஸ்வாமி தேசிகன் பெரியோர்கள் கூறி இருப்பதாக சாதித்த ருளியிருக்கின்றார்.

முதலாவதாக இதை ஒரே வாக்யமாக வைத்து ப்ரணவத்தால் கூறப்படும் சுபாவமுள்ள நாராணனுக்கு நமஸ்காரம் என்கிற அர்த்தம்.

இரண்டாவது அர்த்தம், இந்த திருமந்திரத்தை இரண்டு வாக்யமாகப் பிரித்து அகாரத்தாலும் நாராயண பதத்தாலும் சொல்லப்பட்ட எல்லோரையும் காப்பாற்றுபவனாயும், எல்லாவற்றுக்கும் ஆதாரமாகவும் உள்ளவனுக்கே நான் தனிப்பட்ட ஊழியன், எனக்குரியவன் அல்லேன் நான் சுதந்திரமுள்ளவன் அல்ல என்கிறதாகும்.

மூன்றாவது கருத்து. இரண்டுவாக்யமாகச் சொல்லும் போழ்து வேறு ஒரு கருத்து, இந்த திருமந்திரம் முழுக்க ப்ரபத்தி, அதாவது பரஸமர்ப்பணத்தைக் காட்டுகின்றது என்று பெரியோர்கள் அனுஸந்திப்பார்கள். அகாரத்தால் கூறப்படும் நாராயணனுக்கே இந்த மகாரத்தால் கூறப்படும் ஆத்மா பரமாக அளிக்கப்பட்டது. எனக்கு நான் பரமாகமாட்டேன் என்பதாக இந்த திருமந்திரத்தின் கருத்து, திருமந்திரத்தையே பரஸமர்ப்பண மந்திரமாக ஸ்ரீபாஷ்யகாரர் நித்யத்தில் சாதித்தருளினார்.

நான்காவது பொருள் - அகாரத்தால் கூறப்படும் நாராயணனுக்குக் கைங்கர்யம் செய்வேனாக! அதற்கு எதிரியாக எதுவும் இருக்கக்கூடாது என்று இரண்டு வாக்கியத்திலும் ஒரு வேண்டுகோளைச் சேர்த்துத் தனக்கு வேண்டியதைக் கொடுக்கவும், வேண்டாததை விலக்கவும் வேண்டுவது.

ஐந்தாவதில், திருமந்திரம் மூன்று வாக்கியமாகின்றது. ப்ரணவம், நம:, நாராயணாய, என்று தனித்தனி வாக்கியங்கள், அகாரத்தினால் குறிக்கப்படு பகவானுக்கு நான் சேஷனாவேன். எனக்கு நான் சேஷன் அல்ல, நாரணனுக்கு எக்காலமும் எல்லாவித்திலும் கைங்கர்யம் செய்வது எனக்கு வேண்டும். இவ்விதமாக மூன்று வாக்கியங்கள் இக்கருத்துக்களுடன் கூடியதாம்.

ஆறாவதில். ப்ரணவத்திற்கு அதே பொருள். நம: என்பதற்கு நான் எனக்குரியவன் அல்லேன். எனக்கும் ஒன்றும் உரியதில்லை என்ற கருத்து. இப்படித் தனக்கு வேண்டாததை நீக்கி, நாராயணாய என்பதில் நாராயணனுக்கே உரியவனாக, அவனுடைய கைங்கர்யத்தையே வேண்டுகிறேன் என்று தனக்கு வேண்டியதைக் கோருவதாகும்.

ஏழாவதில் ஸ்வரூபம், உபாயம் இவற்றை முக்கியமாகக் காட்டும், அயநபதத்தின் பொருளாக ஈச்வரன் உபாய மாகவும் இருக்கும் என்று தெரிவிக்கும்.

எட்டாவதில் சரமச்லோகத்திலும், த்வயத்திலும் சொன்ன வரிசையில் ப்ரணவம் ப்ரபத்தியையும் மற்ற பதங்கள் பலனையும் காண்பிக்குமென்று சிலர் கூறுகிறார்கள்.

ஒன்பதாவது பொருளில் ப்ரணவம் பரமாத்மா ஜீவாத்மா இவர்களின் ஸ்வரூபத்தைச் சொல்லுவதாகவும்,

நம: என்பது உபாயத்தைச் சொல்வதாயும், மற்றவை பலனை வேண்டுவதாயும் கூறப்பட்டுள்ளது.

பத்தாவதான, முடிவில் கூறிய கருத்து பின்வருமாறு: இந்த திருமந்திரத்தில் கூறப்பட்ட ஸ்வரூபம், உபாயம், பலம் உம்மூன்றும் வேதாந்த சாத்திரத்தின் மூலம்தான் விரிவாகவும் தெளிவாகவும் அறிய முடியும். வேதாந்த சாத்திரம் நான்கு அத்யாயங்கள் கொண்டது. முதலிரண்டு அத்யாயம் ப்ருமத்தின் ஸ்வரூபம். இன்னதென்று கூறுகிறது. மூன்றாவது அத்யாயம் உபாயத்தையும், நான்காம் அத்யாயம் பலத்தையும் தெளிவாகக் கூறுகின்றன. அந்தக் கணக்கில் ப்ரணவம், நம:. நாராயணாய என்கின்ற மூன்று பதங்களும் அமைந்திருக்கின்றன. திருமந்திரத்தைச் சரியானபடி உணர்ந்து இதன் உண்மையான பொருளை அறிந்து இதில் சரியான நம்பிக்கையுடன் இருப்பவன் இருக்கும் தேசத்திலும் இவனை ஆதரிக்கும். பஞ்சம், நோய், திருட்டுபயம் ஆகியவை இராது.

ருக், யஜுர், சாமம், அதர்வணம் என்கின்ற நான்கு வேதங்களும் அஷ்டாக்ஷர மஹாமந்திரத்தில் அடங்கி யுள்ளதாகச் சாத்திரங்கள் கூறுகின்றன. மோக்ஷம் வேண்டு பவர்களுக்கு வேண்டியவற்றையெல்லாம் திருமந்திரம் காட்டும். நான்கு வேதங்களை ஓதியதின் பலனை ஒரே தடவை அஷ்டாக்ஷரத்தை ஜபம் செய்து பெறுவான் என்றும் சொல்லப்பட்டிருக்கின்றது. எவனுக்கு எவ்வளவு நம்பிக்கை இந்த மந்திரத்தில் இருக்குமோ அதற்குத் தக்கவாறு இதன்மூலம் வேண்டியப் பலனைப் பெறலாம்.

திருமந்திரத்தை இதன் தேவதையான ஸ்ரீமந் நாராயணனிடமிருந்தே திருமங்கையாழ்வார் உபதேசம் பெற்றார் என்று முன்பே பார்த்தோம். இதன் பெருமையினை எம்பெருமானாலேயே முற்றிலும் கூற இயலாது.

மூலமந்திராதிகாரம் முற்றிற்று.

## த்வயாதிகாரம்

த்வய மந்திரம், திருமந்திரத்தில் நடுப்பதத்தால் சொல்லப்பட்ட தனிப்பட்ட உபாயத்தையும் இதற்குப் பலனாக மூன்றாவது பதத்தில் சொல்லப்பட்ட தனிப்பட்ட புருஷார்த்தத்தையும் தெளிவாகத் தெரியப்படுத்துகின்றது. இது கடவல்லியிலே பிரித்து சொல்லி சேர்த்து அனுஸந்தானம் பண்ணும்படி கட்டளையிடப்பட்டுள்ளது. பாஞ்சராத்ர சாத்திரத்திலும் சொல்லப்பட்டது இந்த த்வயமந்திரம். ஆகையால் வேதத்திலும், தந்திர சாத்திரத்திலும் கூறப்பட்டதால் வேதத்தின் மூலமான தாந்த்ரிக மந்திரமாகும். உபாயம், உபேயம் என்கிற இரண்டு பொருளைச் சொவ்வதால் த்வயம் என்று பெயர் பெற்றது. இதனால் வேறு எந்த உபாயத்திலும் துவக்கற்றவனே இந்த மந்திரத்தைப்பெற தகுதியுள்ளவன். இம்மந்திரத்தை ஆசார்யனை ஆசரயித்து உபதேசம் பெறவேண்டும். இதற்கு மற்ற மந்திரங்களுக்குள்ள எந்த நியமமும் கிடையாது. எந்நிலைமையிலும், எவ்வேளையிலும் இந்த த்வய மந்திரத்தைச் சொல்லலாம். ஜபமும் செய்யலாம். இதுவே ப்ரபத்தி மந்திரமாம்.

இம்மந்திரத்திற்கு மற்ற மந்திரங்களினின்று வேறுபடும் தன்மையினை ஸ்ரீஉடையவர் கத்யத்தில் 'எந்த விதமாகவாவது த்வயத்தைச் சொல்' என்று அருளிச் செய்துள்ளார். ஓர்முறை ஓதினாலே போதும் என்று கூறுவதன் மூலம் இம்மந்திரத்தின் பெருமையினை நாம் நன்கு அறிய முடிகின்றது. இப்படிப்பட்ட மந்திரங்களின் பெருமையினை சாத்திரங்களில் நம்பிக்கையுடன் ஏற்றுக்கொள்ள வேண்டும். வாதங்கள் செய்தல் கூடாது. இந்த மந்திரத்தைப் போன்று எந்த சரணாகதி மந்திரமும் ப்ரபத்தியைத் தெளிவாகச் சொல்லாது. ஆகையால் ப்ரபத்தி மந்திரங்களுக்குள் இந்த த்வய மந்திரமே முக்கியமாகவும் சிறந்ததாயுமுள்ளது.

இனி த்வய மந்திரத்தின் பொருளையும் கருத்தையும் காண்போம். முதலில் 'ஸ்ரீமந்நாராயண' என்று எல்லோருக்கும் அடைக்கலம் அளிக்கும் உயர்ந்த தத்துவமானவனைக் குறிக்கின்றது. ஸ்ரீலக்ஷ்மியின் கணவன் என்னும் அடையாளத்தாலும் நாராயணன் என்கிற சொல்லாலுமே வேதங்களில் உயர்ந்த தத்துவம் எது என்று ஒரு தீர்மானம் கூறப்பட்டது. நாராயணனை அடைக்கலம் புகும்போது லக்ஷ்மியுடன் எப்பொழுதும் சேர்ந்திருப் பவனாகவே அவனை அடைய வேண்டுமென்று 'ஸ்ரீமத்' என்கிற சொல் த்வயத்தின் முதல் பாகத்தில் காட்டுகின்றது.

ஸ்ரீ என்கின்ற சொல்லுக்கு ஆறுவிதமான அர்த்தம் பாஞ்சராத்ரத்தில் கூறப்பட்டுள்ளது.

தன்னைக் கடைத்தேறச் செய்விக்க வேண்டுமென்று விரும்புகின்றவர்களால் ஆச்ரயிக்கப்படுகிறாள் என்பது முதல் பொருள். இவர்களைக் கடைத்தேறச் செய்ய பிராட்டி எம்பெருமானிடம் இருக்கிறாள் என்பது இரண்டாவது கருத்து. இதனால் பிராட்டி தாய் என்கிற முறையில் குற்றம் செய்தவனையும் சரண்புகுந்தால் அவன் குற்றத்தைப் பாராமல் அவனை ஏற்றுக் கொள்ளுமாறு எம்பெருமானிடம் அவன் சார்பாக பேசி இவனைக் கடைத்தேறச் செய்கிறாள் என்பது ஏற்படும். பிராட்டி புருஷகாரமாக ஆகிறாள். புருஷகாரம் என்றால் சிபாரிசு செய்பவள் என்று அர்த்தம். இங்கே பிராட்டி புருஷகாரமாக நின்று சரண் புகுகின்றவனுடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்வதற்கு உதவியாக இருக்கின்றாள்.

மூன்றாவது பொருள் 'கேட்கிறாள்' என்றும், நான்காவது கருத்து 'கேட்கச் செய்கின்றாள்' என்பதுமாகும். இதனால் குற்றம் செய்தவர்களான நம் எம்பெருமானின் திருவடிகளில் எங்களைக் காட்டிக் கொடுத்தருள வேண்டுமென்று

எளிமையுடன் வேண்டினால் அக்கூக்குரலைச் செவியுற்று பெருமானிடம் விண்ணப்பம் செய்து நம்முடைய துன்பத்தை நீக்கிவைப்பாள் என்கிற கருத்துப் புலப்படுகின்றது. இதுவும் பிராட்டி புருஷகாரமாக இருப்பதைத்தான் குறிக்கின்றது.

ஐந்தாவதாக, எல்லாக்குற்றங்களையும் நீக்குகின்றாள் என்பதாகும். ப்ரபத்தி பண்ணுகின்றவர்களுடைய எல்லா வினைகளையும் நீக்குகிறாள் என்ற கருத்தாகும்.

ஆறாவதில் குணங்களால் அடுத்தவர்களுக்கு எம்பெருமானுடைய கைங்கர்யம் பெற வேண்டியதற்கேற்ற குணங்களை உண்டாக்குகின்றாள் என்ற பொருள் புரிகின்றது.

இவைகள் எல்லாவற்றாலும் பிராட்டி மங்களமானவள் என்பதனை ஸ்ரீ என்கிற சொல் காண்பிக்குமென்று பட்டர் முதலானவர்கள் கூறியுள்ளனர்.

'ஸ்ரீமான்' என்று பொதுவாகக் கூறினாலும் பிராட்டிக்கு நாதன் என்பதுதான் இதன் அர்த்தம். இப்படி உலகத்தில் எல்லோருக்கும் தாயாக எல்லோராலும் ஆச்ரயிக்கப் படுவாள் பிராட்டி என்றும், இவளுக்கு நாதன் என்பதால் எம்பெருமான் எல்லோருக்கும் மேம்பட்டவர் என்றும், எளிதானவர் என்றும் தோற்றமாகின்றது. ஸ்ரீமான் என்பது பிராட்டியை என்றும் விட்டுப் பிரியாதவன் எம்பெருமான் என்றும் குறிக்கும், வாமனாவதாரத்தில் பிரும்மசாரியாக இருந்ததாக அபிநயித்தபோதும் பிராட்டி மார்பில் இருப்பதை மான்தோலால் மறைத்துக் கொண்டார் என்று புராணம் கூறுகின்றது.

இந்த ஸ்ரீமத் என்ற சொல் இரண்டு வாக்கியங்களிலும் இருப்பது முதல் வாக்கியம் உபாயத்தைச் சொல்லுவதாலும், இரண்டாவது வாக்கியம் பலத்தைக் குறிப்பதாலும்

உபாயத்திலும், பலத்திலும் பிராட்டி எம்பெருமானுடனேயே பிரியாமல் இருப்பதை அனுஸந்திப்பதற்காக உபயோகமாகும். இப்படி அனுஸந்தானம் பண்ணுவதால் குற்றமுள்ளவர்களுக்கு நினைத்தபோதே பிராட்டியின் புருஷகாரத்தால் எம்பெருமானை அடைதற்கு உதவியாக இருக்கும்.

பிறகு ஸ்ரீமத் என்பது நாராயண என்கிற பதத்திற்கு அடைமொழியாகும். நாராயணன் என்ற சொல்லிற்குத் திருமந்திரத்தில் சொன்ன அர்த்தங்கள் இங்கும் பொருந்தும் ஆனாலும் முதல் வாக்கியத்தில் நாராயணன் என்கிற சொல்லுக்கு எம்பெருமான் "அடுத்தவரைக் காப்பாற்று பவன்" என்கிறதில் நோக்காகையால் அதற்கேற்ற குணங்களோடு அனுஸந்தானம் செய்வது முக்கியம். அப்படிப்பட்ட அனுஸந்திக்க வேண்டிய குணங்கள் பின்வருமாறு:

வாத்ஸல்யம் என்பது ஒன்று. இது பிறருடைய குற்றத்தைப் பாராமல் அவனை ஏற்றுக்கொள்வதற்கு உண்டாகும் இரக்கம். இதுதான் குற்றங்களைக் கண்டு எம்பெருமானிடம் அணுகாமல் இருப்பதைத் தடுக்கும்.

ஸ்வாமித்வம் மற்றொன்று, இது எம்பெருமானுக்கும் இந்த ஆத்மாவுக்கும் உள்ள தொடர்பைக் காட்டும். இதனால் எம்பெருமான் எஜமானன் என்கிற முறையால் காப்பாற்றுவான் என்று காட்டும்.

ஸௌசீல்யம் ஒரு குணம். எம்பெருமான் எல்லோருக்கும் மேம்பட்டவனாக இருந்தாலும் மிகவும் கீழ்ப்பட்ட வேடன், வானரர்கள், இடையர்கள் முதலானவர்களுடனும் நெருங்கிப் பழகிய குணத்தைக் காட்டும்.

அடுத்த குணம் ஸௌலப்யம். அதாவது மிகவும் எளிதாக

அடையக் கூடியவன் எம்பெருமான் என்பது. ஸனகர் முதலான யோகிகளுக்கும் கிட்டாத எம்பெருமானை இக்குணம் எல்லா மனிதர்களுக்கும் காணும்படி அவதாரம் பண்ணுமாறு செய்கிறது. இக்குணத்தால் இவன் அருகில் செல்ல முடியாதே என்று ஆசையற்று நிற்காமல் இருக்குமாறு செய்யும்.

ஸர்வேச்வரன் அனைத்தும் அறிந்தவன் என்பது மற்றொரு குணமாகும். இதனால் எம்பெருமான் தன்னைச் சார்ந்திருப்பவர்களுக்குக் கொடுக்க வேண்டிய நன்மைகளையும், தவிர்க்க வேண்டிய தீமைகளையும் தானே அறிவான் என்று நாம் அனுஸந்தானம் செய்ய முடிகின்றது.

எம்பெருமான் எல்லாவற்றிலும் வல்லவன் என்பது ஒரு குணமாகக் கொள்ளப்படுகின்றது. இதனால் எம்பெருமான் அவனுக்கு விருப்பமுள்ளபோழ்து நம்மை நித்யஸூரிகளுடன் மோக்ஷத்தில் வாழச்செய்ய முடியும் என்று தீர்மானிக்கலாம்.

இவன் ஸத்யஸங்கல்பன். அதாவது தான் ஒன்று செய்ய நினைத்தால் அதை யாரும் தடுக்கமுடியாமல் நிறை வேற்றுவான் எம்பெருமான்.

இவன் மிகவும் கருணையுள்ளவன். தன்னுடைய நலத்தையும் பாராமல் பிறருடைய துன்பத்தை நீக்கும் எண்ணம் உள்ளவன். இதனால் நாம் எவ்வளவு குற்றம் செய்யினும் சரணாகதி அடைந்துவிட்டால் எல்லா வற்றையும் பொறுத்து மன்னித்துவிடுவான் என்பதாகும்.

நன்றி உள்ளவன் எம்பெருமான். பல குற்றம் செய்தாலும் ஒரு நல்லது செய்துவிட்டால். சிறிய உபகாரத்தை என்றும் மறக்க மாட்டான். இதனால் ஒரு சிறிய நல்ல காரியம் செய்தாலும் எம்பெருமான் நம்மைக் காப்பாற்றுவான் என்கிற எண்ணத்திற்குக் காரணமாகும்.

எம்பெருமான் பரிபூரணன். அதாவது அவனுக்கு வேண்டியதெல்லாம் அவனிடமுள்ளது. அதனால் இவனுக்கு யார் எது கொடுத்தும் அவனுக்கு ஆக வேண்டியதில்லை. பக்தியோடு சிறிது கொடுத்தாலும், அதைப் பெரிதாக நினைப்பவன். அவன் நம்முடைய எண்ணத்தைக் கவனிப்பவனே அல்லாது பொருளின் திறத்தைப் பார்ப்பான் இல்லை. ஆகையால் நாம் அவனுக்கு அதிகம் கொடுக்க முடியவில்லையே என்றிராமல் பக்தியோடு அவனுக்கு ஸமர்ப்பித்தால் சந்தோஷம் அடைவான் எம்பெருமான்.

மிகவும் தாராளமான தன்மையுடையவனுமாவான் பகவான். தன்னைச் சார்ந்தவனுக்குத்தான் எவ்வளவு கொடுப்பினும் எம்பெருமான் தான் கொடுத்தது போதாதென்று நினைப்பான்.

இப்படி எம்பெருமான் சரண்புகுந்தவர்களைக் காப்பாற்றுவான் என்பதைக் காட்டும குணங்களை எல்லாம் அனுஸந்தானம் பண்ண வேண்டும்.

ஸ்ரீமந் நாராயண சரணௌ என்பதை ஒரே பதமாக வைத்து ஸ்ரீமானான நாராயணனுடைய திருவடிகளை என்று பொருள் கூறுவதுமுண்டு. ஸ்ரீமான், நாராயண என்று பிரித்து 'உன்னுடைய' என்கிற சொல்லைக் கூட்டி 'ஸ்ரீமானான நாராயணனே உனது திருவடிகளை' என்றும் பிரித்துச் சொல்வார்கள். இரண்டுக்கும் கருத்து ஒன்றுதான்.

'சரணௌ' என்பது எம்பெருமானுக்குத் திவ்யமான திருமேனி உண்டு என்பதையும், திருமேனியோடு கூடியிருப்பவனாகவே அனுஸந்தானம் பண்ணவேண்டும் என்றும் காண்பிக்கிறது. ஸ்ரீமத் ராமாயணத்திலும் மற்ற ஆழ்வார்கள், ஆசார்யர்கள் ஸ்ரீ ஸூக்திகளிலும் எம் பெருமானுடைய திருவடிகளையே சரணடைந்ததாகக் கூறப்பட்டுள்ளது. த்யானத்துக்கும் திருமேனியைப் பற்றுவதுதான் எளிதாகும்.

'சரணம்' என்பது உபாயத்தைக் காட்டுகின்றது. எம்பெருமானே ப்ரபத்தியின் மூலம் மற்றொரு உபாயமாக நின்று காப்பாற்றுகிறான் என்று எம்பெருமானை உபாயமாகச் சொல்லுகிறது இந்த 'சரணம்' என்கிற சொல்.

'ப்ரபத்யே' என்கிற பதம் இங்கு முக்கியமாக வேண்டிய ஒரு புத்தி அல்லது உணர்ச்சியைச் சொல்கின்றது. அந்த புத்தி என்னவென்றால் 'எம்பெருமான் நிச்சயமாகக் 'காப்பாற்றுவான்' என்கிற அசைக்க முடியாத நம்பிக்கை யாகும். இது தான் ப்ரபத்தியினுடைய ஐந்து அங்கங்களில் சிறந்ததாகும். ஆனால் இந்தத் திடமான நம்பிக்கையை முன்னிட்டு மற்ற அங்கங்களோடு கூடிய ப்ரபத்திதான் இங்கே தோற்றுகிறது: எவ்வாறு எனின் 'ப்ர' எ்ன்பது நம்பிக்கையில் திடமாகிய பெருமையாக் காட்டும். இதனால் கொஞ்சமும் ஐயமின்மையைச் சொல்லும். நம்பிக்கை மிகவும் திடமாக இருந்தால்தான் ப்ரபத்தி பலிக்கும். அவ்வாறு பூரணமான நம்பிக்கையோடு செய்யும் ப்ரபத்திக்கு இரங்கி எம்பெருமான் மோக்ஷம் அளிப்பான் என்று சாத்திரங்கள் கூறுகின்றன. ஐயமுள்ளவனுக்கு எம்பெருமான் உதவி செய்யமாட்டான் என்பது திண்ணம். ஆகையால் பூரணமான நம்பிக்கைதான் ப்ரபத்திக்கு முக்கியம். ப்ரபத்தி பண்ணும் போழ்து கொஞ்சம் நம்பிக்கைக் குறைவாக இருந்தாலும் எம்பெருமானுக்கு காப்பாற்றும் திருவுள்ளம் இருந்துவிட்டால் அது மேலும் வலுப்படும். ஆகவே த்வயத்திவ் முதல் பாகம் சரணாகதியாகிற உபாயத்தைச் சொல்கின்றது.

த்வயத்தின் இரண்டாவது பாகத்தில் எல்லாபலத்தையும் கொடுக்கக்கூடிய உபாயத்திற்குப் பலன் கூறப்படுகின்றது. இதன் பலனைக் கொடுப்பவன் சரணாகதனைக் காப்பாற்றுவதில் எண்ணமுள்ளவனான ஸ்ரீமந் நாராயணன் கொடுக்கக்கூடிய சிறந்த பலனைக் காட்டுகிறது

இரண்டாவது பாகம். மோக்ஷம் என்கிற பலனை எல்லா எதிர்ப்புக்களையும் நீக்கிக் கொடுக்குமாறு வேண்டுவதாகும். இதனால் மோக்ஷம் தவிர வேறு பலனை எதிர்பார்க்காமலிருப்பதும் தெரிகிறது.

இரண்டாவது பாகத்தில் 'ஸ்ரீமதே நாராயணாய' என்பது எம்பெருமானை அடைவதற்கேற்ப அவன் ஸ்வாமி என்பதையும்· அவன் மிகவும் ஆனந்தத்தை அளிக்கக் கூடியவன் என்பதையும் தனித்துக்காட்டும்.

அதிலும் ஸ்ரீமதே என்கிற சப்தம் இந்த ஜீவாத்மா அடையப்போகும் எம்பெருமானுடைய கைங்கர்யத்தில் பிராட்டியோடு சேர்ந்திருக்கின்ற எம்பெருமானுக்கு திவ்ய தம்பதிகளுக்கே கைங்கர்யம் செய்யப் போகிறான் என்று தெரிவிக்கின்றது. ஸ்ரீ என்கிற சொல்லுக்கும் முன் கூறின பொருள் இங்கும் பொருந்தும் ஆனாலும் அதில் சேவிக்கத் தகுந்தவள் என்கிற கருத்துதான் இங்கு மிகவும் பொருந்தும்.

'நாராயணாய' என்கிற பதம் மிகுதியான அன்பைப் பிறப்பிக்கும் ஜீவாத்மாவுக்கும் எம்பெருமானுக்கும் உள்ள தொடர்பினைக் காண்பிக்கிறது. இவ்விடத்திலுள்ள நான்காம் வேற்றுமை எம்பெருமானுக்குத்தான் செய்ய வேண்டிய கைங்கர்யம் வேண்டக்கூடியது என்பதைக் குறிக்கின்றது. இங்கு பகவானை வேண்டுவதாக அதற்குத்தக்க ஒரு சொல்லைச் சேர்த்துக் கொள்ள வேண்டியதுண்டு.

இவ்வாறு தனக்கு வேண்டியதான விருப்பத்தைக் கொடுக்கும்படி பிரார்த்தித்து 'நம:' என்பதால் தனது அநிஷ்டங்களை நீக்க வேண்டுமென்றும் மற்றொரு வேண்டுகோளாகும்.

'நம:' என்கின்ற பதத்துடனும் ஒரு வினைச்சொல்லைச் சேர்த்து, 'எனக்கு நான் உரியேன் அல்லேன்' என்று பொருள்

கொள்வதுண்டு. 'எனக்கு ஒன்றும் உரியதில்லை' என்றும் எல்லா விஷயத்திலும் மமகாரம் ஆகிய என்னுடையது என்கின்ற எண்ணத்தை நீக்குவதின் மூலம் எல்லாவிதமான அநிஷ்டங்களையும் நீக்குமாறு வேண்டுவதாகும்.

இந்த த்வய மந்திரத்தில் இரண்டாவது பாகத்தையே 'நான் ஸ்ரீமானான நாராயணனுக்கு என்னைப் பாரமாக அளிக்கின்றேன்' என்று பரஸமர்ப்பணமாகப் பகர்ந்து, 'நமம' என்று தன்னுடன் துவக்குறுகிறதாகவும் சொல்கின்றனர். இது பொருத்தமானதே. இதனால் முதல் பாகம் ப்ரபத்தியின் ஐந்து அங்கங்களைக் கூறுவதாகவும் இரண்டாவது பாகம் ப்ரபத்தியின் ஐந்து அங்கங்களைக் கூறுவதாகவும் இரண்டாவது பாகம் ப்ரபத்தியைச் சொல்வதாகவும் ஆகும். இவ்விதம் இரண்டு பாகமும் ப்ரபத்தியைக் குறிப்பதனால் இதன் பலன் தானே தோன்றும்.

முன் கூறியவாறு முதல்பாகம் ப்ரபத்தியையும் இரண்டாம் பாகம் பலத்தையும் கூறுவதானால் தன்னை எம்பெருமானுக்கு ஒப்படைப்பதாக முதல்பாகத்தில் அனுஸந்தானம் பண்ணவேண்டும்.

முதல்பாகமும், நான்காம் வேற்றுமையில் முடியும் பதங்களும், நம: என்பதும், தனித்தனியாக மூன்று வாக்கியங்களானாலும் திரள உபாயத்தையே முக்கியமாகக் கொண்ட ஒரே வாக்கியமாக இருப்பது உசிதமானது.

எல்லோருக்கும் ஸ்வாமியாயும் எல்லாவிதத்திலும் அளவற்ற இன்பத்தைக் கொடுக்கக் கூடியவனாயுமுள்ள, பெரிய பிராட்டியுடன் கூடிய, விட்டுப்பிரியாத நாராயணன் திருவடிகளில் என்னுடைய ஸ்வரூபத்திற்கேற்ற எல்லா காலத்திலும், எல்லா இடங்களிலும், எல்லா நிலைமையிலும், எல்லாவிதமுமான கைங்கர்யத்திற்கும் தடங்கல்கள் எல்லாவற்றையும் நீக்கி, பரிபூரணமான கைங்கர்யம்

பெறுதற்கு, எளியவனான அடியேன் என்னைக் காத்துக் கொள்ளும் பொறுப்பு முதலியவைகளில் எனக்குச் சம்பந்தமில்லாதவராறு, ஸ்ரீமரனான நாராயணன் திருவடிகளிலே ஐந்து அங்கங்களுடன் என்னைக் காக்கும் பொறுப்பை ஒப்படைக்கிறேன் என்பது இந்த த்வய மந்திரத்தின் இரண்ட பொருள்.

த்வயாதிகாரம் முற்றிற்று.

* * * * * *

## சரமச்லோகாதிகாரம்

ஸ்ரீமந்நாராயணன் திருப்பாற்கடலில் ஆதிசேடன் மீது பள்ளிக்கொண்டிருந்தவன். அதை விட்டு மதுராபுரியில் தர்மத்தை நிலைநாட்டக் கொடியவர்களை, தீயவர்களை அழித்து நல்லோர்களைக் காப்பாற்ற த்வாரகாநாதனாக வந்து அவதரித்தருளினான். இவன் எல்லோருக்கும் எளியோனாய் இருந்து வந்தான். திரௌபதியுடன் ஐந்து பாண்டவர்களும் எம்பெருமானைச் சரணடையும் போழ்து அவர்களுக்குத் தூதனாயும் நின்றான். அர்ச்சுனனை எசமானனாக வைத்து தான் தேரோட்டியாகவும் இருந்து, அவன் தனக்குதவியாயிருப்பதாக்க காரணம் கொண்டு தானே தீயவர்களை அழித்தான். அச்சமயம் பந்துக்களை எவ்விதம் அழிப்பது என்று கலங்கித் துயரத்தால் யுத்தம் புரிய அச்சம் கொண்டும், ஆசார்யர்கள் முதலியோர்களை அழிக்க நேர்ந்தால் பாவம் உண்டாகுமே என்று அஞ்சியும் நின்ற அர்ச்சுனன் தனக்கு நன்மையை உணர்த்த வேண்டுமென்று எம்பெருமானான கண்ணனிடம் விண்ணப்பம் செய்தான். அவனுடைய துயரத்தை நீக்க பகவத்கீதையை அவனுக்குக் கண்ணபிரான் உபதேசம் செய்தார். அதில் ஆத்மா வினுடையவும் பரமாத்மாவினுடையவும் உண்மையான

ரூபத்தை தெளிவாக எடுத்துரைத்து மோக்ஷமென்கிற பேரின்பத்தை அடைதற்கு ஒருமுறையில் உபயோகமான கர்மயோகம், ஞானயோகம் இவைகளையும் நேராகவே மோக்ஷத்திற்கு உபாயமான பக்தியோகத்தையும் அர்ச்சுன்னுக்கு எடுத்துக் கூறினார்.

இவ்விதம் நேராக மோக்ஷத்தைப் பெறுதற்கு உபாயமான பக்தியோகத்தை உபதேசித்த பின்பும் இது விரைவாக மோக்ஷத்தைப் பெற ஆசைப்படுபவனுக்கு பலனை விரைவில் கொடுக்காதாகையாலும், பக்தியோகத்தைச் செய்வதும் மிகவும் சிரமமாகையாலும், அப்படியே பக்தியோகத்தைச் செய்வதற்கு வேண்டிய ஞானம் முதலானது இருப்பினும், விரும்பிய பலன் கிடைக்காதாகையாலும், மிகவும் துயரத்தில் ஆழ்ந்த அர்ச்சுனனை ஒரு வ்யாஜமாகச் கொண்டு மிக்க கருணையுள்ள, ஸ்ரீகீதோபநிஷத்தின் ஆசார்யனான கண்ணபிரான் ப்ரபத்தியையும் மற்றொரு உபாயமாகக் கடைசியாக அருளிச் செய்தார். ப்ரபத்திக்கு எம் பெருமானுடைய திருவடிகளை ஐந்து அங்கங்களுடன் சரணாகதி பண்ணுவது தவிர வேறு சிரமமான செய்கை எதுவும் கிடையாது. இதற்கு ஆறு கூல்ய சங்கல்பம் முதலிய ஐந்து அங்கங்கள் மட்டும்தான் வேண்டியது. ஆகவே, ப்ரபத்திக்கு எளிதான உபாயம், ஒரு சில க்ஷணகாலத்தில் செய்து முடிக்கக் கூடியது. இந்த எளிதான உபாயத்தை மீண்டும் கேட்பதற்கு இடமின்றி இறுதியாக மிகுந்த கருணையுடன் அனைத்துலகமும் கடைத்தேறவேண்டு மென்று கீதையில் அருளினார். வேதத்திலேயே குறிப்பிடப் பட்ட ப்ரபத்தி என்கிற உபாயத்தை எம்பெருமான் தானே பகவத்கீதையில் இறுதி மொழியாக அருளினார். இதைத்தான் ஆழ்வார்களும், ஆசார்யர்களும், தங்கள் அருளிச் செயல்களில் அன்புடன் கூறியுள்ளார்கள். ஸர்வதர்மான் என்று ஆரம்பிப்பது சரமச்லோகம் அதாவது கடைசியான

ச்லோகம் ஸ்ரீபகவத்கீதையிலுள்ளது. இதுதான் கடைசியாகத் தீர்மானமாகக் கருணையோடு கீதாசார்யனான கண்ணபிரான் அர்ச்சுனனை ஒரு வ்யாஜமாக வைத்து உலகத்தாருக்கு உபதேசித்த ப்ரபத்தியோகம். இதன் அவச்யமான பொருள் காணவேண்டும்.

இந்த ச்லோகத்தில் முதல் பாதி உபாயத்தை விசிக்கிறது. பின்பாதி பலனைக் காட்டுவதன் மூலமாக விதியைச் சொன்னதற்கு வேண்டிய அங்கத்தைச் சொல்லுகிறது. அதாவது விதி என்பது ஒருவனை ஒரு காரியத்தைச் செய்யச் சொல்வி கட்டளை இடுவதாகும். அதற்குப் பலன் இல்லையெனில் அக்கட்டளையை எவரும் நிறைவேற்ற விரும்பார். ஆகையால் பலனைக் கூறும் வாக்கியம் அவ்விதிக்கு உபயோகமான அவனுடைய முயற்சியை உண்டாக்கும். ஆகவே இச் ச்லோகம் முற்றிலும் உபாயத்தை விதிப்பதையே முக்கியமாகக் கொண்டது.

'ஸர்வதர்மங்களயும் விட்டு' என்று சொல்லும் போழ்து தர்மங்கள் என்பது எவை என்றால் 'தர்மம்' என்பது சாத்திரங்கள் மூலமாக அறியவேண்டிய புருஷார்த்தங்களுக்கு உபயோகமானது. இதில் பன்மை சாத்திரங்களில் பல தர்மங்கள் புருஷார்த்தங்களைப் பெறுதற்கு உபயோகமாகக் கூறி இருப்பதைக் காட்டுகிறது. இங்கு 'எல்லா' என்கிற சொல் சேர்ந்து எல்லாத் தர்மங்களையும் என்று கூறுவது அவைகளின் கருவிகளையும் கூட்டிச் சொல்வதாகும். தர்மத்திற்கு வேண்டியவைகளையும் தர்மமென்று சொல்வதுண்டு.

இவ்வாறு பொதுவாக எல்லா தர்மங்களைச் சொன்னாலும், இங்கு முன்கூறி இருப்பதையொட்டி அந்த சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு மோக்ஷத்தைப் பெற சாத்திரங்களில் கூறப்பட்ட பலவிதமான உபாஸனங்கள்

என்கிற பதியையே இந்த தர்மங்கள் என்ற சொல் குறிப்பதாகும்.

அடுத்த பதம் 'ப்ரித்யஜ்ய' என்பது. 'எல்லா தர்மங்களை விட்டுவிட்டு' என்று இதுவரையிலுள்ள பதங்களுக்குப் பொருளாகும். இங்கு விடுவது என்பது இந்த ப்ரபன்னன் வேறு உபாயத்தைச் செய்ய சக்தியற்றவனாக இருப்பதால் வேறு உபாயத்தில் ஆசை வைக்க வேண்டாம் என்று குறிப்பிடுகிறது.

இதிலும் 'பரி' என்பது முற்றிலும் என்ற பொருளைக் கூறுவதால் மிகவும் எளியவனான ப்ரபன்னன் எவ்வேளையிலும் எல்லா விதத்திலும் தகுதியற்றவன் என்று தெரிவதால் மற்ற உபாயத்தில் முற்றிலும் ஆசையற்றவன் என்பதைத் தனித்துக் குறிக்கும்.

இவ்விதம் எல்லா தர்மங்களையும் விடுமாறு கூறியது இவைகளை விடுமாறு விதித்ததாகவும் வைத்துக் கொள்ளலாம். அவ்வாறு வைத்துக் கொள்ளும் போழ்து, உபாஸநத்திற்கு கர்மா முதலியவைகள் அங்கமாக அவச்யம் செய்ய வேண்டியதுபோல் ப்ரபத்திக்கு கர்மா முதலியவைகள் போன்ற எந்த தர்மங்களும் அங்கமாகச் செய்ய வேண்டிய அவச்யமில்லை என்று காண்பிப்பதாகக் கொள்ள வேண்டும். இவ்விதமாகப் பொருள் கூறும் பொழுதும் வேறு உபாயங்களில் சக்தியற்றவர்களும் அவ்வாறு அவைகளில் சக்தி இருப்பினும் தாமதத்தைத் தாங்காதவர்களும் இந்த ப்ரபத்தியைச் செய்யத் தகுதியுள்ளவர்கள் என்று அறியவேண்டியது.

எல்லாத் தர்மங்களையும் விட்டுவிட்டு என் ஒருவனை சரண்புகுவாயாக என்று சொன்னதில் வர்ணங்களுக்கேற்றவைகளும் நான்கு ஆச்ரமங்களுக்கு ஏற்றவைகளுமாக சாத்திரங்களில் கூறப்பட்ட ஆஜ்ஞை, அநுஜ்ஞை என்கிற

கட்டளைகளில் உள்ள சந்தியாவந்தனம் முதலானவை களையும் விட்டுவிட்டு ப்ரபத்தி செய் என்று சொன்னதாகச் சிலர் தவறாக நினைத்தால் அது சரியில்லை. சாத்திரங்களில் கூறப்பட்ட வர்ணதர்மங்களையும் ஆச்ரம தர்மங்களையும் ப்ரபத்தி பண்ணியவனும் செய்யத்தான் வேண்டும். ஆனால் இங்கு எல்லா தர்மங்களையும் விடச்சொன்னது ப்ரபத்திக்கு அங்கமாக இவைகளைச் செய்ய வேண்டியது அவச்யமில்லை. ப்ரபத்திக்கு முக்கியமாக வேண்டியது ஏற்கனவே கூறப்பட்ட ஆநுகூல்யசங்கல்பம், எளிமை, பூரணமான நம்பிக்கை, எதிர்க்காதிருக்கும் தன்மை, காப்பாற்றுமாறு வேண்டுவது ஆகிய ஐந்து அங்கங்கள்தான். மற்றவை எதையும் இந்த ப்ரபத்தி என்கின்ற உபாயம் எதிர்பார்ப்பதில்லை என்பதுதான் இதன் கருத்து. ஆகவே ப்ரபன்னனும் நித்யகர்மாக்களைச் செய்யத்தான் வேண்டும். இங்கு விடுமாறு கூறியிருப்பதால், தன்னால் முடியாததில் நோக்கம் உள்ளவனை அதில் முயற்சிக்க வேண்டாமென்றும் தனக்குச் செய்ய முடியாதவைகளாய் உள்ளவைகளில் ஆசை வைத்தால் அது வேண்டாமென்றும், வேறு உபாயத்தையும் ப்ரபத்தியோடு சேர்த்துச் செய்ய நினைப்பின் அது ப்ரும்மாஸ்திரம் போன்று மற்றொன்றை ப்ரபத்தி தாங்காது என்று வேறு உபாயத்தையும் இத்துடன் செய்யவேண்டாம் என்பதையும் இது இங்கு தர்மங்களை விலக்க வேண்டும் என்பதால் கூறுவதாகும்.

'மாம்' என்று அடுத்த சொல். 'என்னை' என்கிறார் கீதாசாரியன், 'என்னை ஒருவனை சரண்புகுவாயாக' என்று கூறியுள்ளார். என்னை என்று பகவான் கூறியதில் அந்த எம்பெருமான் கீதையின் நான்காவது அத்யாயத்தில் கூறிய அவருடைய அவதாரத்தின் உள்நோக்கத்தைக் காட்டியதை உணர்ந்து அதனால் அவருடைய கருணையை இங்கு உணரவேண்டும். அவதாரத்தின் உண்மையான பெருமை

அவர் அவதாரம் உண்மை என்பதும், தன்னுடைய உண்மையான ரூபத்தை எப்பொழுதும் விடவில்லை என்பதும் அது ஸ்ரீவைகுண்டத்திலுள்ள உருவம் போன்றதே என்றும். அவருடைய திருவுள்ளமே அந்த அவதாரத்திற்குக் காரணம் என்றும், தர்மம் குன்றினால் நல்லவர்களை காப்பாற்றுவதே அதன் நோக்கம் என்பதாகும். இந்தவிதம் அவதாரத்தின் உண்மையை அறிவதால் ப்ரபத்தியில் நோக்கமுள்ளவனுக்கு எம்பெருமானுடைய கருணையை அவன் அறிந்து அவரை அணுகத் துணிய முடிகின்றது. இவ்விதமான தனது கருணையைக் காட்டி எம்பெருமான் நேராகவே 'என்னை' என்று சொல்லிச் சரண்புக அழைக்கின்றார்.

'ஏகம்' என்கிற பதம் 'ஒருவனை' என்று 'என்னை' என்பதுடன் சேர்த்து பகவான் அருளினார். 'என்னை ஒருவனை சரண்புகுவாயாக' என்கிறார். ஒருவனை மட்டும் என்கிற சொல் பகவான் தானே உபாயமாகவும் உபேயமாகவும் இருப்பதாகக் காண்பிப்பதாகும். தானே உப.ாயமாகவும் நின்று ப்ரபத்திக்கு இரங்கி மோக்ஷமாகப் பலத்தைக் கொடுப்பதாக பகவான் அருளியதாக் கருதவேண்டும். அடைவதும் இவனையைதான். ஆகவே தானே தன்னை அடையுமாறு ப்ரபத்தியால் இரங்கி ப்ரபன்னனுக்கு ரக்ஷணத்தை அளிப்பார் என்பது கருத்து.

எல்லா தர்மங்களுக்கும் கிட்டும் பலனைத் தர்மமாகிய தானே அந்தத் தர்மங்களுக்குப் பதிலாக நின்று தான் ஒருவனே கோரிய பலனைக் கொடுப்பதாக ஒருவனை என்கிற சொல்லின் கருத்தாகவும் கொள்வதுண்டு. பிறகு 'சரணம்' என்கிற பதத்திற்கு உபாயமாக என்று பொருள் உள்ளது. 'என்னை ஒருவனையே தஞ்சமாகப் பற்று' என்கிறார் பகவான் இது அருச்சுனனைப் பார்த்துக் கூறியதானாலும் பல ப்ரமாணங்களாலும் இந்த உபதேசம்

எல்லோருக்குமே அருச்சுனனை வ்யாஜமாகக் கொண்டு செய்ததாகக் கொள்ள வேண்டும். என்னைத் தவிர வேறு யாரையும் சரண்புகாதே என்பதும் இதன் கருத்தாகும்.

'வ்ரஜ' என்பது அடுத்த பதம். இது த்வய மந்திரத்தில் 'ப்ரபத்யே' என்கிற பதத்திற்குப் பதிலாக இங்கு கூறப்பட்டுள்ளது. அங்கு ப்ரபன்னன் எம்பெருமானைச் சரண்புகுகிறேன் என்று கூறியதற்குப் பதில் இங்கு எம்பெருமான் நீ என்னைச் சரணமடைவாயாக என்று ப்ரபன்னனுக்கு உபதேசிக்கின்றார். இதுவரையில் முதல் பாதியால் சரணாகதி என்கிற உபாயத்தை விதித்துவிட்டு த்வயத்தில் காட்டியது போலவே இரண்டாவது பாதியால் சரணாகதியை ஏற்றுக்கொள்பவனான எம்பெருமான் தனது பலன் கொடுப்பதாகிற செய்கையை அருளிச் செய்கிறார்.

இங்கு 'நான்' என்பதால் அனைத்திலும் வல்லவனான நான் என்று கூறுகிறார். எத்துணைக் குற்றம் செய்தவனாயினும் ப்ரபன்னனைத் தான் காப்பாற்ற முடியும் என்றும் தனக்கு எதிரில் நின்று யாரும் ப்ரபன்னனைக் காப்பாற்றும் பொழுது தடுக்க முடியாது. அப்படிப்பட்ட பெரும் சக்தி உள்ளவன் தான் என்று 'நான்' என்கிற பதத்தால் காண்பிக்கின்றார்.

'உன்னை' என்றருளினார். நான் உன்னை எல்லாப் பாவங்களினின்றும் விடுவிக்கிறேன் என்னும் போழ்து உன்னை என்பது இவ்விதம் குறிக்கும். இது பகவான் அருச்சுனனை வ்யாஜமாகக் கொண்டு எல்லோருக்குமே செய்யும் அன்புமொழி. 'நான் தத்துவங்களையெல்லாம் உனக்குபதேசித்தேன். மற்ற செல்வங்களெல்லாம் நிலையற்றதென்றும் கூறினேன். நீயும் தெளிந்து என்னை அடைவதுதான் சிறந்த புருஷார்த்தம் என்று தெரிந்து கொண்டாய். இதற்காகச் சொன்ன வேறு உபாயத்தில் அது

செய்ய மிகவும் கடுமையானதால் அதில் துவக்கற்று இருக்கின்றாய். ஆகையால் என்னிடம் சரணாகதி செய்து உன்னை ஒப்படைத்து நீ கோரிய பலனுக்காக வேறு ஒன்றும் செய்ய வேண்டியதில்லை. இப்படிப்பட்ட நிலைமையிலுள்ள 'உன்னை' என்பது கருத்து.

இப்படி உலகத்தில் கட்டுக்களை நீக்கி மோக்ஷம் கொடுப்பவனான எம்பெருமானை 'நான்' என்பதால் சொல்லி, அவரிடம் சரணாகதியடைந்து. மோக்ஷத்தை விரும்புகிறவனை 'உன்னை' என்பதாலும் சொல்லி. இவன் இவ்வுலகத்தில் கட்டுண்டதற்குக் காரணமான பாவங்களை 'எல்லா பாவங்களிலிருந்தும்' என்ற சொல்லால் குறிக்கின்றார். பாவமாவது சாத்திரத்தில் கெடுதல்களுக்குக் காரணமாகச் சொல்லப்பட்டுள்ளது. கெடுதல் என்பது நன்மையைக் கெடுப்பதும் தீமையைக் கொடுப்பதுமாகும்.

இங்கு மோக்ஷத்தை விரும்புகின்றவனுக்குப் புண்ணியமான சில செய்கைகளையும் பாவத்தில் சேர்க்க வேண்டும். சுவர்க்கம் முதலியதும் முமுக்ஷுவுக்கு வேண்டாததாகையால் அதற்காகச் செய்யும் புண்ணியமான செய்கைகளும் பாவங்களைப்போல் விலக்கப்பட வேண்டியவைகள். ஆகையால் முமுக்ஷுவிற்கு இவைகளும் பாவங்கள் தானாகும். முமுக்ஷுபாவம் புண்ணியம் இரண்டுவிதமான கார்யங்களையுமே விலக்க வேண்டும். இப்படி பாவங்களைச் சொல்லும்போழ்து 'எல்லா' என்கிற அடைமொழி பாவங்கள் ஏராளமானதாக இருக்கலாம் என்று குறிப்பிடுகிறது.

'எல்லா பாவங்களையும் விலக்கி உன்னைக் காப்பாற்றுகிறேன்' என்கிற கருத்தோடு எம்பெருமான் அருளியதில் இக்கருத்துக்கள் அடங்கி உள்ளன. ஆர்த்தனாக உடனே மோக்ஷம் வேண்டுமென்கிறவனுக்கு ப்ரபத்தி

பண்ணியவுடன் எல்லா பாவங்களையும் நீக்கி உடனே மோக்ஷம் அளிப்பார் எம்பெருமான். இந்த சரீரம் நீங்கும்பொழுது மறுபிறப்பின்றி மோக்ஷம் வேண்டுமென்று ப்ரபத்தி பண்ணுகின்றவனுக்கு ப்ராரப்தமானவைகள் தவிர ப்ரபத்திக்கு முன் செய்த மற்ற எல்லா பாவங்களையும் எம்பெரமான் ப்ரபத்தியின் பலமாகப் போக்கிவிடுகிறார். ப்ரபத்திக்குப் பின்பு செய்த பாவங்களில் அறியாமையால் செய்தவைகளையும் நீங்குமாறு செய்துவிடுகின்றார். ப்ராரப்தங்களிலும் இந்த ப்ரபன்னன் ஒப்புக்கொள்ளாத பாவங்களையும் நீக்கிவிடுகின்றார். தெரிந்து பாவங்களை ப்ரபத்திக்குப் பிறகு செய்யமாட்டான் அவ்வாறு செய்தானானால் அதற்கு மறுபடியும் ப்ராயச்சித்தமாக ப்ரபத்தி செய்யுமாறு ப்ரபன்னனுக்குப் புத்தியைக் கொடுத்து அதன் மூலம் அந்த பாவங்களையும் நீக்கிவிடுவார். அதுவும் செய்யாமல் பிடிவாதமுள்ளவர்களுக்கும் சில சிறிய தண்டனைகளைக் கொடுத்து அதன்மூலம் பாவங்களை நீங்கச் செய்வான். எப்படியும் ப்ரபன்னனுக்கு இச்சரீரம் முடிந்ததும் மோக்ஷத்தை எம்பெருமான் அளித்து விடுகின்றான். மறுபிறப்பு கிடையாது. இக்கருத்துக் களனைத்தும் எல்லா பாவங்களையும் விலக்கிவிடுவதற்குக் கருத்தாகும். இவையெல்லாமே எம்பெருமானுடைய கருணையின் பயனாகும்.

'எல்லா பாவங்களிலிருந்தும் விடுதலையை அளிக்கின்றேன்' என்று கூறியதன் மூலம் எம்பெருமான் ப்ரபன்னனுக்கு 'மோக்ஷத்தை உனக்குக் கொடுத்து விடுகிறேன்' என்று அருளியதாக ஆகும். எப்படி என்றால் மோக்ஷம் என்பது இந்த ஜீவாத்மாவினுடைய இயற்கையான உருவம் தோன்றுவது. இந்த ஜீவாத்மாவும் எம்பெருமானைப் போலவே எல்லா நற்குணங்களும் உள்ளவன். இவைகள் எல்லாம் இவ்வுலக வாழ்க்கையில் வினைகளின் பயனாக

மறைந்து கிடக்கின்றன. இப்பாவங்கள் எல்லாம் நீங்கியவுடன் அந்த இயற்கையான குணங்கள் வெளிப் படுகின்றன. அது எவ்வாறு என்றால் கண்ணாடியின் மீது அழுக்குபடிந்தால் கண்ணாடியின் ஒளி தெரிவதில்லை. அழுக்கினை அகற்றிவிட்டால் ஒளி தானே தோன்றுகின்றது. அவ்வொளி அதன் இயற்கையானதே. அது போலவே கிணற்றைத் தோண்டினால் உள்ளேயிருக்கும் நீர்தான் வெளியில் தோன்றுகின்றது. புதிதாகத் தண்ணீரை உண்டாக்குவதில்லை அல்லவா? அதுபோலவே தீமைகள் நற்குணங்களை மறைத்துக் கொண்டிருக்கின்றன. அவைகள் நீங்கியவுடன் இயற்கையான நற்குணங்கள் வெளிப் படுகின்றன. இயற்கையான சுத்தமான அறிவு முதலியவை வெளிப்படுகின்றன. அதனால் இந்த ஜீவாத்மா மற்ற நித்யசூரிகள் கோஷ்டியில் சேர்ந்து எம்பெருமானுடைய கைங்கர்யங்களில் ஈடுபட்டுப் பேரின்பத்தை அனுபவிக் கின்றான்.ஆகவே எல்லாப் பாவங்களினின்றும் விடுதலை பெற்றுச் செய்கிறேன் என்பதால் இந்த ப்ரபன்னனுக்கு ப்ரபத்தியின் பலனாக மோக்ஷத்தை அளிப்பதாக ஸ்ரீகீதாசார்யன் அருளினார் என்று அறியவேண்டியது.

இறுதியாகத் 'துக்கப்படாதே' என்று சொல்லி அருச்சுனன் மூலமாக ப்ரபன்னனுக்குத் தேறுதலை அருளிச் செய்கிறார் கருணாமூர்த்தியான கீதாசார்யன்.

ப்ரபத்தியாகிற உபாயத்தில் இழியும் அவனுக்குத் துக்கத்திற்குக் காரணமானவைகள் எல்லாம் நீங்கி விடுவதலால் துக்கப்பட வேண்டாமென்று சொல்லிக் கொண்டு அவனுடைய நம்பிக்கையைத் திடப்படுத்துவதில் நோக்கமாகும். ப்ரபன்னன் தான் விரும்பிய பலனுக்குச் சிரமமான உபாயமில்லாமலும், எல்லா எதிரிகளையும் போக்கக்கூடியதாயும், தாமதமின்றி பலனைக் கொடுக்கக் கூடியதாயுமுள்ள இவ்வுபாயத்தை உபதேசித்தபிறகு

அவனுக்குத் துக்கப்படுவதற்கு எக்காரணமுமில்லை என்ற கருத்தாகும்.

"இவ்வுபாயத்தை நீ செய்தபின்பு உன்னுடைய காரியமனைத்தும் எனக்குப் பொறுப்பாகிவிட்டது. அந்தப் பலனும் என்னைச் சேர்ந்ததே. அவ்விதமிருக்க உன்னைக் காப்பாற்றா விட்டால் எனக்குத்தானே குற்றம். ஆகையால் நீ துக்கப்பட வேண்டிய அவசியம் இல்லையே" என்பது எம் பெருமானுடைய திருவுள்ளம்.

இந்த சரமச்லோகத்தின் திரண்ட பொருள் இவ்விதம் அறியவேண்டியது. "சிற்றறிவுள்ளவனாயும். சிறிய சக்தியுள்ளவனாயும். சிலகாலமே வாழக்கூடியவனாயும் இருந்து தாமதத்தைத் தாங்காதவன் நீ. உன்னால் அறிய முடியாததாயும், செய்ய முடியாததாயும், தாமதித்துப் பலன் அளிப்பதாயுமுள்ள வேறு உபாயங்களில் நீ அலைய வேண்டாம். எல்லோருக்கும் மிகவும் எளியவனாயும், எல்லா உலகத்தினையும் காபபாற்றுபவனாயும், அந்த காப்பாற்றுதலுக்கு வேண்டிய எல்லா தகுதியுமுள்ள வனாயுமுள்ள என்னை ஒருவனையே உபாயமாக நினைத்து ஐந்து அங்கங்களுடன் பரஸமர்ப்பணம் என்கிற ப்ரபத்தியைச் செய். இவ்வாறு ப்ரபத்தி செய்து எனக்கு அடைக்கலமான ப்ரியமான உன்னை, மிகவும் கருணையுள்ள, சுதந்திரமுள்ள தான் என்னுடைய எண்ணத்தினையே துணையாகக் கொண்டு உனக்குள்ள எதிர்ப்புக்களை நீக்கி, எனக்குச் சமமாகப் போகங்களை அனுபவிக்கச் செய்து, எக்காலத்திலும், எவ்விடத்திலும், எல்லாவிதமுமான கைங்கர்யம் செய்யும் நிலையளித்து, பூரணமான ப்ரும்மானந்தத்தை அனுபவிக்கச் செய்கிறேன். நீ துக்கப்படவேண்டாம்." இதுதான் இறுதி அருள்மொழியின் திரண்ட கருத்து.

சரமச்லோகாதிகாரம் முற்றிற்று.

## ஆசார்யக்ருத்யாதிகாரம்

ஆசார்யர்கள், பரமாசார்யனான எம்பெருமான் முதலான பரம்பரையில் வந்தவர்கள். இந்த நமது சம்பிரதாயமும் எம்பெருமான் முதலான ஆசார்யர் களுடைய பரம்பரையில் வந்துள்ளது. இந்த மூன்று இரகசியங்களுடைய அர்த்தங்கள் சிம்மத்தின் பால்போல், இவர்களைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது. இந்த மூன்று இரகசியங்களின் பொருள்களை சுருக்கமாக தாங்களும் அனுசந்தானம் செய்து, எம்பெருமான் ஒப்புக்கொள்ளும்படி நற்குணங்களுடன் விளங்குபவர்கள். சிஷ்யர்களுக்கும் தக்கபடி பரீக்ஷை செய்து அவர்கள் உபதேசத்துக்கு தகுதி உள்ளவர்கள் என்று தீர்மானமாக தெரிந்து கொண்டு, மூன்றாவது மனிதன் காதில் படாதபடி இரகசியமாக இந்த மந்திரங்களை உபதேசிக்கவேண்டும். தகுதியற்றவர்க்கோ, நம்பிக்கை இல்லாதவர்களுக்கோ, ஆஸ்திகர்கள் இல்லாதவர் களுக்கோ உபதேசம் செய்யக்கூடாது. பணத்துக்காகவோ, புகழ், ஜம்பம், பெருமை முதலியவைகளுக்காகவோ இரகசிய மந்திரங்களையோ, அவைகளின் அர்த்தங்களையோ முன்னிருந்த ஆசார்யர்கள் உபதேசம் செய்தார்கள் இல்லை.

இந்த ஆசார்யர்கள் சுருக்கமாக இவ்விதம் உபதேசம் செய்வார்கள்.

ஜீவாத்மா பிறப்பும், அழிவும் இல்லாதவன், இவன் உடலுக்கும், இந்திரியங்களுக்கும் வேறுபட்டவன், சேதனங்கள், அசேதனங்கள் தவிர இவர்களுக்கு அந்தர்யாமியாய் உள்ளே இருந்துகொண்டு எல்லோருக்கும் சுவாமியான பரமாத்மா உண்டு. இந்தப் பரமாத்மாவைத் தவிர இந்த ஆத்மாவுக்கு தானோ பிறரோ காப்பாற்றக்கூடியவர் கிடையாது. "இந்த உலக வாழ்க்கையில் இதுவரையில் கட்டுண்ட எனக்கு மறுபடி தாய் வயிற்றில்

வாசமும் மறுபிறப்பும் இல்லாமல் பண்ணவேண்டும். அதற்காக உனது திருவடிகளைக் கொடுத்து காப்பாற்ற வேண்டும்." என்று ஆசார்யன் கூற குரு பரம்பரையின் மூலம் ஸ்ரீமானான நாராயணன் திருவடிகளைச் சரணமாக அடையவேண்டியது. பிறகு அந்த ஆசார்யன் காட்டிக் கொடுத்த வழியை பின்பற்றி எம்பெருமான் இனி கைவிடமாட்டான் என்கின்ற நம்பிக்கையோடு இருக்க வேண்டும். பரபத்திக்குப் பிறகும் இங்கு எந்த குற்றமும் செய்யாமல் இங்கு நல்ல கைங்கர்யங்களை செய்து கொண்டிருக்க வேண்டும்.

இப்படி ஆசார்யர்கள் சுருக்கமாக அருளிச் செய்வார்கள்.

ஆசார்யக்ருத்யாதிகாரம் முற்றிற்று.

* * * * * *

## சிஷ்யக்ருத்யாதிகாரம்

முக்கியமானவகளையெல்லாம் ஏழைக்கு வீட்டுக் குள்ளேயே புதையலைக் காட்டிக் கொடுப்பதுபோல் ஆசார்யர்கள் வெளிப்படுத்துகிறார்கள். இவ்விதம் பெரிய உபகாரம் செய்யவும் ஆசார்யனிடத்தில் சிஷ்யன் நன்றி உள்ளவனாக இருக்க வேண்டும். அவருக்கு வஞ்சனையோ ஏமாற்றலோ செய்யக் கூடாது. இப்படியெல்லாம் சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆனால் இதனால் சிஷ்யனுக்கு பிறரால் நிந்தனை ஏற்படாது என்பது மட்டில் இதன் கருத்தே தவிர இதன்மூலம் சிஷ்யன் குருவுக்கு பெரிய உபகாரம் செய்ததாக சொன்னதில்லை.

இதுபோலவே ஆசார்யனுக்கு பலவற்றைக் கொடுக்கும் படி சாஸ்திரங்கள் கூறியதும் அவரை வணங்குவது முதலியவை சொல்லியது போன்றதாகும். 'ஆசார்யன் கருணையோடு எதற்கும் ஆசைப்படாமல் சிஷ்யனுக்கு

சொல்லவேண்டும்' என்று சாஸ்திரம் கூறுவதால் வேறு உபகாரத்தை எதிர்பாராத ஆசார்யனுக்கு செய்நன்றி காட்டியதாகவோ பிரத்யுபகாரம் செய்யவேண்டும் என்றோ சொன்னதாகக் கருதக்கூடாது. ஆசார்யன் செய்ததற்கு கைம்மாறு செய்யமுடியாது என்று பல இடங்களில் கூறப்பட்டுள்ளது. முடிந்தவரையில் ஆசார்யனுக்கு கொடுக்க வேண்டும் என்று சொல்லியதெல்லாம் சிஷ்யன் தனது மனச்சாந்திக்காகவும், பக்திக்காகவும் சொன்னதே தவிர பதிலுபகாரம் செய்ததாக சிஷ்யன் தான் நினைப்பதற்காக இல்லை.

இப்படி பதிலுபகாரம் செய்ய தகுதியில்லாத சிஷ்யன் அப்படிப்பட்ட ஆசார்யனுக்கு செய்யக்கூடியது பின்வரும் செய்கைகள்தான்.

ஆசார்யன் உபதேசித்தவைகளை அவைகளுக்கு நேர்எதிராக செய்து கெடுத்து உபயோகப்படாமல் செய்யாமலிருக்கவேண்டும். கற்றதை எல்லாம், காக்கை கரைவதுபோல், உபயோகமில்லாமல் போகும்படி செய்யக்கூடாது. பணம் சம்பாதிப்பதற்காகவோ, தங்கள் வாழ்க்கையை நடத்துவதற்காகவோ கற்ற உபதேசங்களை உபயோகப்படுத்தக்கூடாது. இப்படி செய்வதால் பிறர் பரிகாரம் செய்யும் நிலைமையில் இந்த சிஷ்யன் நிற்பான். குரங்குகையில் அகப்பட்ட பூமாலையைப் போல் இந்த உபதேசங்களையெல்லாம் பாழாக்கக்கூடாது. அசூயை முதலிய கெட்ட குணங்கள் உள்ளவர்களுக்கு இந்த உபதேசங்களை சொல்லிக் கொடுக்காமல் இவைகளை காப்பாற்றி வைக்க வேண்டும். பிறவிக் குருடனான தனக்கு கண் திறந்து வைத்து நித்யசூரிகள் வரிசையில் சேரும் தகுதியை உண்டுபண்ணின ஆசார்யனுக்கு ப்ரதியுபகாரம் செய்வது மிகவும் கடினமானது என்று அறிந்து எம்பெருமான் முதலான பரம்பரையில் தான் வந்து சேர்ந்ததை உணர்ந்து

மகிழ்ச்சியுடன் இருக்கவேண்டும்.

இந்த சிஷ்யன், நான் இப்படி பெற்ற மூன்று ரஹஸியங்களின் ஸாரமான பொருளாகிய பெரும் செல்வத்தை முன்னதிகாரத்தில் சொன்னப்படியே தக்க இடம் அறிந்து கொடுக்கும் போது ஆசார்யர்களுடைய வரிசையை அவர்களுக்கு வெளியிட்டுக்கொண்டு தனது நன்றியையும் தான் உபதேசத்தின் மூலம் கற்ற சிறந்த அர்த்தங்களின் பெருமையையும் அவர்கள் அறியும்படி உபதேசம் செய்யவேண்டும், இந்த வேதாந்த சாஸ்திர ரஹஸி யங்களைச் சொல்லுகிறவன் ஸம்பிரதாயத்தைப் பின்பற்றியே சொல்லவேண்டும், புஸ்தக்த்தைப் பார்த்தோ, சுவரின் மறைவாக நின்றுகொண்டு கேட்டோ, அந்த ரஹஸ்யார்த்தங்களைச் சொன்னால், திருடினநகையை அணிந்துகொள்வதுபோல் கண்டவர்களுக்கும் இதைச் சொல்லும்படி நேரிடும், ஒரு மந்திரத்தைத் தற்செயலாகவோ, ஏமாற்றியோ, மறைந்தோ, கேட்டோ, அல்லது புஸ்தகத்தைப் பார்த்தோ தெரிந்து கொண்டால் அது பாபமாகும் என்று கூறப்பட்டிருக்கிறது. முறைப்படி உபதேசம் பெற்று சொல்லும்போதும் கூட ஆசார்யனைப் பற்றி புகழ்ந்தும், தன் ஆசார்யன் யார் என்பனவற்றைச் சொல்லாமல் உபதேசம் செய்யும் பக்ஷத்தில் சிஷ்யன் இவனிடம் நம்பிக்கை வைக்காமல் போகக்கூடும். குருவைப் பற்றிய பெருமையைக் கூறாவிட்டால் செல்வமும், ஆயுளும் குறையும்.

நல்ல சிஷ்யன் கிடைத்து, அவனுக்கு உபதேசம் செய்யா விட்டால் இவனை பேராசையுள்ளவன் என்று இகழ நேரிடும். ஆகையால் விளக்குப் பிடிப்பவன் தன்னை அரசன் வேறு காரியத்திற்குப் போகச் சொன்னால் அந்த விளக்கை மற்றொரு தகுதியுள்ளவனிடம் கொடுத்துவிட்டுப் போவது போல் நல்ல பாத்திரம் கிடைக்கும்போது அவனுக்கு உபதேசம் செய்ய வேண்டும். அப்பொழுதும் தனது

ஆசார்யனை அவனுக்கு வெளியிட்டுப் பிறகு தான் உபதேசத்தின் மூலம் அறிந்தவைகளை அந்த நல்ல சிஷ்யனுக்கு சொல்லவேண்டும். சில தனிப்பட்ட பெரியாழ்வார் போன்ற பெரியோர்கள், எம்பெருமான் அருளால் பேரறிவைப் பெற்றாலும் நல்ல ஆசார்யன் அருளால் தாங்கள் பெற்றதாகவும், தாங்களே அறிந்ததில்லை என்றே சொல்லவேண்டும். அப்படி சொன்னால் இவரிடம் எல்லோரும் மதிப்போடிருப்பார்கள்

இப்படி நன்றியுடனும், ஊக்கத்துடனுமுள்ள சிஷ்யனைப் பார்த்து ஆசார்யனும் தான் செய்த செய்கை நற்பலனைக் கொடுத்தது என்று மகிழ்ச்சியடையும்படி ஏற்படும்.

சிஷ்யக்ருத்யாதிகாரம் முற்றிற்று

* * * * * *

## நிகமனாதிகாரம்

இதுவரையில் உபோத்காதாதிகாரம் முதல் முப்பத்தொன்று அதிகாரங்களில் முக்கியமாக இந்த சம்பிரதாயத்திற்கு அறிய வேண்டியவைகளை ஸ்வாமி ஸ்ரீவேதாந்ததேசிகன் அருளிச்செய்து, கடைசியாக அந்த அதிகாரங்களில் கூறியவைகளுக்கு ஒரு குறிப்பு இந்த அதிகாரத்தில் அருளினார். மேலும் கூறி இந்த அருமையான நூலை முடிக்கிறேன்.

இதுவரையில் கூறின அர்த்தங்களை எல்லாம் முதலில் நல்ல ஆசார்ய பரம்பரையில் நல்ல வழியில் அறிவுபெற்ற நல்ல ஆசார்யன் திருவடிகளை ஆச்ரயித்து முறைப்படி வணக்கத்தோடும், பக்தியோடும், நம்பிக்கையோடும் கேட்டு அவைகளை மறுபடியும் நன்றாக பயிற்சி செய்து தெளிவு பெறவேண்டும். சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கும் தர்மங்கள் மிகவும் நுட்பமானது. அவைகளை நன்றாக அறிவது மிகவும் கஷ்டமானது. ரிஷிகளும் அந்த தர்மங்களின்

ஸூக்ஷ்மத்தை மிகவும் சிரமப்பட்டு அறிந்து கொண்டிருக்கிறார்கள். ஆகவே மிகவும் சிரமப்பட்டு முன்னோர்கள், தப்புகளை நீக்கி சரியானவைகளை கண்டுப்பிடிக்கிறார்கள். அப்படிப்பட்ட முன்னாசார்ரயார்கள் சொன்ன, சென்ற வழியில் செல்லுகிறவர்களுக்கு பயப்படக்கூடிய நரகம் முதலிய கெட்ட வழிகள் நேராது. மறுபிறப்பில்லாமல் நற்கதி ஏற்பட்டு, எம்பெருமானுடைய பரமபதம் கிடைத்து. அங்கே நிகரற்ற ஆனந்தரூபமான பகவானுடைய கைங்கர்யம் செய்யக்கூடிய பேறு, எக்காலமும், எந்நிலையிலும், எவ்விதமாயும் கிடைக்கும்.

இப்படி பெரிய பிராட்டியோடு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீய:பதி ஸ்ரீமன் நாராயணனுடைய திருவடிகள் உபாயமான ப்ரபத்தியிலும் ஸ்ரீவைகுண்டத்தில் அழிவற்ற கைங்கர்யமாகிற பலனை அனுபவிக்கும் போதும் ப்ரபன்னனுக்கு ஆச்ரயிக்கத் தக்கவைகள்.

இந்த ஸ்வாமி ஸ்ரீவேதாந்த தேசிகன் ஸாக்ஷாத் ஸ்ரீ திருவேங்கடமுடையானின் அம்சாவதாரமாக அவதரித்து உலகத்தில் எல்லோரும் நன்மையைப் பெறவேண்டுமென்ற நோக்கத்தோடு முப்பத்திரண்டு அதிகாரமாக இந்த நூலின் ஸாரத்தை அருளிச்செய்தார். அடியேன் உத்தமரான ஸ்வச்சந்தம் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமியின் புத்திரனாகப் பிறந்தேன். அடியேன் ஆராவமுதனாகிய நான் பகவத் கிருபையால் இந்தச் சிறிய நூலை எழுதியுள்ளேன். இதனால் ஸ்ரீதிருவேங்கடமுடையானும், அடியேனுடைய திருத் தகப்பனாரும், அடியேனுடைய ஆசார்யன் ஸ்ரீ வீரராகவார்ய மஹாதேசிகனும், அடியேனுக்கும், இதை வாசிப்பவர்களுக்கும் பூரணமாக அருள் புரிந்து, ஸர்வ மங்களத்தையும் கொடுக்கும்படி ப்ராத்திக்கின்றேன்.

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரஸாரம் முற்றிற்று.